# சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும் - ஒப்பீடு

**மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு**

ஆய்வாளர்
**இரா.கவிதா**
(பதிவு எண் : 3907)

நெறியாளர்
**முனைவர் மு.மணிவேல்**




**தமிழியற்புலம்**
**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**
**மதுரை - 625 021**

**டிசம்பர் - 2013**

**முனைவர் மு.மணிவேல், எம்.ஏ., பிஎச்.டி.,**
பேராசிரியர் மற்றும் தலைவர் (ப.நி.),
தமிழியல் துறை,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

''**சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும் - ஒப்பீடு**'' என்னும் தலைப்பில் திருமதி **இரா.கவிதா (பதிவு எண் : 3907)** அவர்கள் செய்த இவ்வாய்வு மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக அவரால் தன்னியலாகச் செய்யப்பெற்றது எனவும், வேறு எந்தப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை எனவும் சான்றளிக்கிறேன்.

இடம் : மதுரை

**(மு.மணிவேல்)**
மேற்பார்வையாளர்

நாள் :

**இரா.கவிதா,**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

## ஆய்வாளர் உறுதிமொழி

**“சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும் - ஒப்பீடு”** என்னும் தலைப்பில் மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக எழுதப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியால் உருவானதேயாகும். இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

இடம் : மதுரை

(இரா.கவிதா)
ஆய்வாளர்

நாள் :

மேற்பார்வையாளர் கையொப்பம் :

**முனைவர் மு.மணிவேல், எம்.ஏ., பிஎச்.டி.,**
பேராசிரியர் மற்றும் தலைவர் (ப.நி.),
தமிழியல் துறை,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

## நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ளும் வாய்ப்பினை நல்கி, அதனைச் செம்மையாக முடிக்க எனக்கு அருள் செய்த இறைவனுக்கு முதற்கண் எனது நன்றியினைக் காணிக்கையாக்குகிறேன்.

பல்வேறு பணிகளுக்கிடையிலும் எனது முன்னேற்றத்தினையே நோக்கமாகக் கொண்ட எனது பெற்றோர் **திரு. இராமச்சந்திரன், திருமதி இரா. இரத்தினம்** ஆகியோர்க்கு என் உளங்கனிந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

**''சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும் - ஒப்பீடு''** என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொள்ள அனுமதி அளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமக்கு இருந்த பல்வேறு பணிகள் மற்றும் பொறுப்புகளுக்கு இடையிலும் ஆய்விற்கு வேண்டிய அறிவினை நல்கி, ஆய்வு நெறிமுறை காட்டி இவ்வாய்வு செம்மையாக அமையத் துணைபுரிந்த என் மதிப்பிற்குரிய நெறியாளர் **முனைவர் மு.மணிவேல்** அவர்களுக்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

முனைவர் பட்ட ஆய்வு செய்வதற்கு இடம் தந்து நெறிப்படுத்திய மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புலத் தலைவர் **பேராசிரியர் செ.சாரதாம்பாள்** அவர்களுக்கும், தியாகராசர் கல்லூரி தமிழ் **பேராசிரியர் திருமதி மலர்விழி மங்கையர்க்கரசி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தந்துதவிய மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் மற்றும் கொடைக்கானல் **"போதி ஜென்டோ"** நிறுவனத்தின் பொறுப்பாளருக்கும் என் நன்றி.

என் ஆய்வுக் காலத்தில் பல்வகையிலும் எனக்குத் துணைநின்ற மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புலத் தலைவர்கள், பேராசிரியர்கள், சக நண்பர்கள் மற்றும் எனக்குப் பக்கபலமாய் இருந்த என் குடும்பத்தினர் அனைவருக்கும் என் நன்றி.

எனது ஆய்வினை முடிக்கப் பல வழிகளில் பெருந்துணை புரிந்த என் கணவர் **திரு. சோ. கருணாகரன்** அவர்களுக்கும், ஆய்வு சிறப்புற ஊக்கமளித்த எனதருமை சகோதரர் **திரு. இரா.பாலமுருகன்** அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டின் உருவாக்கத்தில் கணினியாக்கம் செய்த **திரு செண்பகப் பெருமாள்** அவர்களுக்கும், மிகச்சிறந்த முறையில் கட்டமைப்புச் செய்து உதவிய **ஸ்ரீ லேசர் பாலாஜி பிரின்டிங் பைண்டிங்** நிறுவனத்தார் அனைவருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**இரா.கவிதா**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| சூ. | - | சூத்திரம் |
| செய். நூ. | - | செய்யுளியல் நூற்பா |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொ. ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொல்.பொருள் | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப. ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| பா. ஆ. | - | பாடல் ஆசிரியர் |
| பொது. | - | பொதுப் பாடல்கள் |
| மு.நூ. | - | முற்காட்டிய நூல் |
| மேலது | - | மேற்காட்டிய நூல் |
| மொ. பெ. ஆ. | - | மொழிபெயர்ப்பாசிரியர் |
| Ed. | - | Editor |
| Ibid | - | The same place |
| Pg. | - | Pages |
| P. | - | Page |

# பொருளடக்கம்

# 1. ஆய்வு முன்னுரை

## 1.1. ஆய்வுத் தலைப்பு

தமிழ் மொழியும் தமிழ் இலக்கியமும் நாளுக்கு நாள் புத்தாக்கம் பெற்று வரும் நவீன நாகரிகச் சின்னமாகத் திகழ்கின்றன. இது எப்படி இயலும்? இலக்கியம் நீண்ட வரலாற்றுடன் நிலைப்பெற்று வாழும் தகுதி உடையதாய இருக்கிறதா என்பதை எப்படி அளவிட முடியும்? அதன் அளவுகோல் யாது? போன்ற பல வினாக்களுக்கும் விடை தருவது தமிழ் மொழியின் அழகியல் தாண்டிய வாழ்வியல் சார்ந்த நிலை பெற்ற உண்மைத்துவம் எனலாம்.

இலக்கிய வரலாற்றில் பல்வேறு துறை சார்ந்த பல்வேறு படைப்புகளும் நாள்தோறும் வளர்ந்து கொண்டுதான் வருகின்றன. ஆனால் ஒரு படைப்பின் பயன் சமுதாயக் குறைகளுள் ஏதேனும் ஒன்றையாவது களையும் பொருட்டு அமைய வேண்டும். பெரும்பாலான படைப்புகள் சமூகக் குறைகளைச் சுட்டிக் காட்டுவதோடு நின்றுவிடுகின்றன. சில மட்டுமே அக்குறைகளைத் தீர்க்கும் வழிமுறைகளையும் கூறி சமூகப் பணியைச் செவ்வனே செய்கின்றன. அத்தகைய இலக்கியங்களே இலக்கிய உலகில் நீடித்த வாழ்வினைப் பெறுகின்றன.

இலக்கியங்களின் தரத்தை நோக்கிப் பார்க்கத் திறனாய்வு உதவுகின்றது. திறனாய்வில் ஒப்பீட்டாய்வு சாலச்சிறந்த வழிமுறையாகும். சித்தர் பாடல்களையும் ஜென் துறவிகளின் படைப்புகளையும் களமாகக் கொண்டு ''சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும் - ஒப்பீடு'' எனும் தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

## 1.2 ஆய்வு நோக்கம்

வாழ்க்கை என்பது ஒருமுறை மட்டுமே அமையும். இவ்வாழ்க்கையை மகிழ்ச்சியுடனும், தியாக மனப்பான்மையுடனும், ஆன்ம விழிப்புணர்ச்சியுடனும் வாழ வேண்டும். பலருக்கு மகிழ்ச்சி அவ்வளவு எளிதாகக் கிட்டுவதில்லை. அப்படியே மகிழ்ச்சி ஏற்பட்டாலும் அதன் அளவு மிகக் குறைவாகவே அமைகின்றது. ‘இன்னும்.... இன்னும்....’ என்று மனிதனின் தேடலும் ஓட்டமும் நிற்காமல் சென்றுகொண்டே இருக்கின்றன. மகிழ்ச்சி என்பது மனிதருக்கு மனிதர் வேறுபடும தன்மை உடையது. மன அமைதியே உண்மையான மகிழ்ச்சி. ஆனால் இன்றைய காலகட்டத்தில் தனிமனித வாழ்விலும் சமுதாய அமைப்பிலும் அமைதியற்ற சூழ்நிலையே மேலோங்கி நிற்கிறது. தனிமனித உணர்வுகள் நல்லனவாய் இருந்தால் சமூகத்தில் அமைதி நிலவும்.

தனிமனித உணர்வுகளைச் செம்மைப்படுத்தவே சமயங்கள் தோன்றின. சமயம் ‘கடவுளின்’ பெயரால் மனிதனை அச்சுறுத்தி நெறிமுறையான பாதையில் வாழ்வை மேற்கொள்ளச் செய்தது. அதிலும் பல உயர்வு தாழ்வுகளையும் மூடப் பழக்கவழக்கங்களையும் உட்புகுத்தி பிரிவினையை மனிதன் உண்டாக்கிவிட்டான்.

சமூகத்தை நல்வழிப்படுத்த விரும்பிய சில பெரியோர்கள் சமயம் என்ற எல்லையைத் தாண்டி இலக்கியங்கள் படைத்தனர். இவ்வகை இலக்கியங்கள் சமூக அவலங்களைச் சீர்படுத்தும் நோக்கில் படைக்கப்பட்டன. இத்தகு பெரியோர்களை உலகெங்கும் காணமுடிகிறது. இவ்வகை இலக்கியங்களைச் ‘சமயம்’ என்ற வட்டத்திற்குள் அடைத்துவிட இயலாது.

மேற்குறித்த சமுதாய பணியாற்றிய, சமய எல்லைக்கு அப்பாற்பட்ட இந்தியாவின் சித்தர் இலக்கியத்தையும், இந்தியாவில் வேர்விட்டு, ஜப்பான், சீனா, கம்போடியா போன்ற ஆசிய நாடுகளில் மட்டுமல்லாது அமெரிக்க, ஐரோப்பியக் கண்டங்களிலும் பரவியிருக்கின்ற ஜென் இலக்கியத்தையும் ஒப்பிட்டு ஆய்வது இவ் ஆய்வின் நோக்கமாக அமைகிறது.

## 1.3 ஆய்வு எல்லை

சித்தர் இலக்கியங்களில் சித்தர்களின் பாடல்களும் முதன்மைச் சித்தரான திருமூலரின் பாடல்களும், ஜென் இலக்கியங்களில் ஜென் கதைகளும், கவிதைகளும் விரிவான முறையில் ஆய்விற்கு உட்படுகின்றன.

## 1.4 ஆய்வு முன்னோடிகள்

சித்தர்களைப் பற்றி அவர்களின் பாடல்கள் வழிக் கிடைக்கின்ற புதிய புதிய செய்திகளுக்காக இன்றளவும் ஆய்வுகள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. ஓர் இலக்கியத்தைத் தகுதியும் தரமும் காண ஒப்பிடுதல் மிகச்சிறந்த வழியாகும். அதன்படி நிறைநிலையில், 'சித்தர் பாடல்களில் மாற்று மரபுகள்' எனும் தலைப்பில் எழுதப்பட்ட ஆய்வுக்கட்டுரை, சித்தர்களைப் பற்றி இன்னும் ஆழமாக அறிந்துகொள்ளத் தூண்டுகோளாய் அமைந்துள்ளது. பொது நிலையில் சித்தர்களைப் பற்றி அறிமுகம் செய்யும் சில கட்டுரைகள் எழுதப்பெற்றுள்ளன.

## 1.5. ஆய்வுச் சான்றாதாரங்கள்

'சித்தர் பாடல்கள்' எனும் தலைப்பில் கோவேந்தன் அவர்களால் பதிப்பிக்கப் பெற்ற நூலும், அ.ச.ஞானசம்பந்தன் அவர்களின் உரையுடன் கூடிய

திருமூலரின் ‘திருமந்திரம்’ நூலும் இவ் ஆய்வுக்கு முதன்மைச் சான்றதாரங்களாய் அமைந்துள்ளன. ஜென் இலக்கியங்களைப் பொறுத்த வரையில் கவிஞர் புவியரசின் ‘ஜென் கதைகள்’, ‘மீண்டும் ஜென் கதைகள்’ ஆகிய நூல்களும், ஓஷோவின் ‘பிரபஞ்ச ரகசியம்’ எனும் கவிதை நூலும், தேவநாதனின் ‘ஜென் தத்துவ விளக்கக் கதைகள்’ எனும் நூலும் இவ்ஆய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. சித்தர் இலக்கியங்கள், சித்தர்கள், ஜென் இலக்கியங்கள் பற்றி எழுதப் பெற்றுள்ள நூல்கள், கட்டுரைகள், ஆய்வுகள் இவ் ஆய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## 1.6 ஆய்வு அணுகுமுறைகள்

சித்தர்களையும் ஜென் துறவிகளையும் பற்றிய அறிமுகமாகக் கூறப்படும் தரவுகளில் அவர்களின் காலம் மற்றும் எண்ணிக்கை பற்றிய ஆய்வில் வரலாற்று அணுகுமுறையும், சித்தர் ஜென் இலக்கியங்களில் இடம் பெறும் சமூக, சமய, தத்துவக் கருத்தாக்கங்கள் பற்றிய ஆய்வில் பகுப்பாய்வு, மற்றும் விளக்கமுறை அணுகுமுறையும் பின்பற்றப்பட்டுள்ளன. மேலும் இவ் ஆய்வு முழுமையிலும் ஒப்பீட்டாய்வு அணுகுமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது.

## 1.7 ஆய்வுப் பகுப்பு

இவ் ஆய்வேடு பின்வரும் இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை

1. ஆய்வு முன்னுரை
2. சித்தர்களும் ஜென் துறவிகளும்
3. சமூக நோக்கில் சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும்

4. சமய நோக்கில் சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும்
5. தத்துவ நோக்கில் சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும்
6. ஆய்வு முடிவுரை

துணைநூற் பட்டியல்

பின்னிணைப்புகள்

**முன்னுரை** என்னும் இம்முதல் இயலில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வுச் சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப்பகுப்பு துணைநூற் பட்டியல், மற்றும் பிற செய்திகள் பற்றியன விரிவாகவும் விளக்கமாகவும் இடம்பெறுகின்றன.

**சித்தர்களும் ஜென் துறவிகளும்** என்னும் இரண்டாம் இயலில் சித்தர்கள், ஜென் துறவிகள் பற்றியும், சித்தர்களும் ஜென் துறவிகளும், ஜென் குருக்களின் பட்டியல் அவர்களின் அறிமுகம் பற்றி ஆராயப்படுகின்றன.

**சமூக நோக்கில் சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும்** என்னும் மூன்றாம் இயலில் சமூகத்திற்குத் தரப்படும் விளக்கம், புதிய சமூகத்திற்கு வழிமுறை, சமுதாயத்தில் சாதி பெறுமிடம், திருமணமும் சமய வாழ்வும், சிற்றின்ப வெறுப்பு, பெண்கள் நிலை, மூடநம்பிக்கைகளுக்கு மறுப்பு, சாதியெதிர்ப்பு, சித்தர் ஜென் இலக்கியங்களில் தனிமனித அறம் போன்றவை பற்றி ஆராயப்படுகின்றன.

**சமய நோக்கில் சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும்** என்னும் நான்காம் இயலில் சமயத்திற்குத் தரப்படும் விளக்கம், சமயத்தின் குறிக்கோள், ஒன்றே பரம்பொருள், உருவ வழிபாடு விலக்கல், வேத மறுப்பு, சாத்திர சடங்கு

மறுப்பு, போலிகளைச் சாடல், அகமே கோவில் போன்றவை பற்றி ஆராயப்படுகின்றன.

**தத்துவ நோக்கில் சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும்** என்னும் ஐந்தாம் இயலில் கடவுட் கோட்பாடு, நிலையாமைத் தத்துவம், தியானம், பூஜ்ஜியத்தில் பூரணம், சும்மா இருத்தல், மாயை, தாமரை மலர், மாடு எனும் குறியீடு போன்றவைப் பற்றி ஆராயப்படுகின்றன.

**முடிவுரை** என்னும் ஆறாம் இயலில் கிடைக்கப்பெற்றுள்ள அனைத்து ஆய்வு முடிவுகளையும் தொகுத்துக் இவ்வாய்வில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் முதலானவற்றின் விவரங்கள், அகரவரிசையில் துணைநூற் பட்டியலாக ஆய்வேட்டின் இறுதியில் இடம் பெறுகின்றன.

ஆய்வேட்டின் முற்பகுதியில் சுருக்கக் குறியீட்டு விளக்கம் இடம் பெறுகின்றது. ஆய்விற்குப் பயன்பட்ட பாடல்களின் கதைகளும் எண்களும் கவிதைகள் இடம்பெற்றுள்ள நூல்களின் விவரங்கள் மற்றும் பக்க எண்கள் குறிப்புகள் பகுதியில் இடம் பெறுகின்றன. ஆய்வில் பயன்பட்ட பாடல்களை எழுதிய சித்தர்களின் படங்களும் ஜென் துறவிகளின் படங்களும் ஆறு ஆதாரங்களை விளக்கும் படமும் ஜாஜென் பயிற்சிக்கு அமரும் முறை பற்றிய படங்களும் சித்தர்களின் எண்வகைச் சித்துக்கள் பற்றிய விளக்கமும் ஆய்வுத் தொடர்பான புகைப்படங்களும் ஆய்வேட்டின் இறுதியில் இடம் பெறுகின்றன.

# 2. சித்தர்களும் ஜென் துறவிகளும்

## 2.0 முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் சித்தர்களுக்குச் சிறப்பான ஓர் இடம் உள்ளது. மருத்துவம், யோகம், ஞானம், சோதிடம், இரசாயானம், இரசவாதம், காயகல்பம், தாவர சாத்திரம், உடற்கூறு சாத்திரம், வான சாத்திரம் முதலான பல்வேறு துறைகளில் எளிய தமிழில் இனிய சந்த நயத்துடன் பல பாடல்களைச் சித்தர்கள் இயற்றியுள்ளனர்.

தமிழகத்தில் சித்தர்களுக்கென தனி இடம் இருப்பதைப் போல ஜப்பான், சீனா போன்ற நாடுகளில் ஜென் துறவிகளுக்கென தனி இடம் உள்ளது. இவர்கள் மதம் என்ற கட்டிலிருந்து விடுபட்டுத் தனிமனித விடுதலைக்கு வழி கூறிய பெரியோர்கள் ஆவர். இவர்கள் கதைகளும் கவிதைகளும் படைத்து சமூகத்திற்கு அறம் போதித்தனர்.

நில அமைப்பால், மொழியால், காலத்தால் வேறுபட்ட சித்தர்களும் ஜென் துறவிகளும் சமூகத்திற்குத் தம் படைப்புகளின் வழி விழிப்புணர்வைத் தந்தனர். தாவோயியல், கன்பூசியஸம் மற்றும் சூ.ஃ.பியிஸம் போன்ற பல மார்க்கங்கள் சமயம் தாண்டி உலகெங்கும் தோன்றின. கால மாற்றத்திற்கேற்பவும் மக்கள் மனப்பான்மைக்கேற்பவும் சமய மரபுகளைத் தகர்த்தெறிந்து இது போன்ற மார்க்கங்கள் தோன்றின. அவற்றுள் ஒன்றுடன் ஒன்றை ஒப்பிட்டுப் பார்க்கும் போது சில ஒற்றுமை வேற்றுமைகளைக் காணமுடிகின்றது.

‘‘ஒப்பியல் ஆய்வென்பது, கேவலம் பொழுதுபோக்கான ஆய்வு முறையன்று; ஒப்பியல் ஆய்வின் மூலமாகவே ஒரு பொருளின் தனிப்பண்புகளைத் திடமாகக்

கூறலாம். ஒற்றுமைகளுக்கு மத்தியிலும் நுண்ணிய வேறுபாடுகள் காணப்படும். அவற்றினை ஆதாரமாகக் கொண்டு, ஒரு பொருளின் தனிச் சிறப்புகளை அறிதல் கூடும். அதாவது இரு இலக்கியங்களை ஒப்பிடும்போது அவற்றின் பொதுப் பண்புகள் யாவை? சிறப்புப் பண்புகள் யாவை? என்பன தெளிவாகின்றன. இத்தெளிவு வரலாற்று அடிப்படையிலான இலக்கிய ஆராய்ச்சிக்கு ஏதுவாக அமைகிறது"[1] என்ற அறிஞரின் கூற்றுக்கேற்பத் தமிழகச் சித்தர்களையும் ஜப்பானிய ஜென் துறவிகளையும் ஒப்பிட்டறியும் வகையில் இவ்வியல் செய்திகள் அமைகின்றன.

## 2.1 சித்தர்கள்

ஏதேனும் ஒன்றைப் பற்றி விரிவாகப் பேசுவதும் எழுதுவதும் எளிய செயலன்று. ஆனால் ஒன்றைப் பற்றி எழுதும்போது, 'இது இத்தகைய தன்மைகளை உடையது, இப்படிப்பட்டது' என்று வரையறுப்பது, அதற்கு இலக்கண விளக்கம் கொடுப்பது மிகவும் சிக்கலான செயல் ஆகும். இதனைத் தமக்குச் சாதமாக்கிக் கொண்டு இக்காலத்தில் பாவம் செய்யும் பலரும் தம்மைச் 'சித்தர்' என்று சொல்லித் திரிகின்றனர்.

சித்தர்களை, அவர்களின் புறத்தோற்றம், அகவுணர்வு, பேசும் மொழி, ஆற்றும் செயல்கள் எனப் பலவற்றையும் ஆராய்ந்தே அடையாளம் காணவேண்டும் என்பர் ஆராய்ச்சியாளர்கள். ஜென் துறவிகளிலும் ஞானம் பெறாமல் குருவானவர்களும் அறியப்படுகின்றனர்.

சித்தர் எனும் சொல்லின் பொருளை இலக்கணம் கூறி வரையறுத்துவிட முடியாது. பல்வேறுப்பட்ட பொருள்களைத் தரும் சொல்லாகவே 'சித்தர்' என்னும் சொல் அமைந்துள்ளது.

''*யான் என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு*
*உயர்ந்த உலகம் புகும்*''[2]

எனும் வள்ளுவரின் வாக்கு சித்தர்களுக்குச் சரியாகப் பொருந்தும் எனலாம். 'சித்தா தத்துவம்' எனும் நூலில் பேராசிரியர் நாராயணன், ''உலகியலைத் துறந்தவர்கள், உலகியல் நடப்புக்கு மாறானவர்கள், சித்துக்கள் ஆடுவதில் வல்லவர்கள், சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர்கள், அலைபாயும் சித்தத்தை அடக்கியவர்கள் என்பன போன்ற சொற்றொடர்களெல்லாம் சித்தர்களின் ஏதேனும் ஒரு கூறு பற்றிய குறிப்புகளாக இருக்கின்றனவே தவிர, ஒரு பொதுவான இலக்கணமாகவோ, விளக்கமாகவோ அமையவில்லை''[3] என்று கூறுகிறார். சித்து என்ற சொல்லுக்கு, ''அரூபம், யாகம், அறிவுப்பொருள், வெற்றி, ஆன்மா''[4] போன்ற பல பொருள்களைத் தமிழகராதி தருகின்றது.

சித்தர்களைப் பற்றிய செய்திகளைத் தமிழில் வழங்கும் முதல் நூல் 'திருமந்திரம்'. ''யோக சமாதி உகந்தவர் சித்தரே''[5] என்று சித்தர்களுக்கு இலக்கணம் சொல்கிறது இந்நூல்.

''*எழுப்பாமல் வாசனையைக் கொன்றோன் ஞானி*
*ஏகாமல் வாசனையை அடித்தோன் சித்தன்*''[6]

என்கிறார் சட்டைமுனி நாயனார். "வாசனை" எனும் சொல்லுக்குக் 'கருமவினை' என்றொரு பொருளும் உண்டு. அதன்படி கருமவினையைக் கொன்றவன் ஞானி என்றும், அவ்வினையை வராமல் தடுத்து நிறுத்தியவன் சித்தன் என்றும் ஞானியையும் சித்தரையும் வேறுபடுத்திக் காட்டுகிறார் சட்டைமுனி நாயனார்.

''சரித்திரத்தைச் சுட்டெரித்தால் அவனே சித்தன்''[7] எனும் அகஸ்தியர் ஞானப்பாடலின் அடி ஒன்று சமய வரையறைகளையும் சாத்திர விதிமுறைகளையும் மீறிச் செயல்படுபவர்கள் சித்தர்கள் என்ற பொருளிலேயே அமைந்திருக்கின்றது.

''வாசி எனும் மூச்சினை அடக்கி ஆண்டு, யோக சக்தியினால் உடலில் உள்ள மூலாதாரம், கொப்பூழ், இதயம், இரைப்பையின் நடு, கழுத்து, தலைமுடி போன்ற ஆறு இடங்களிலும் மனத்தை முறையாக நாட்டி, குண்டலினியை எழுப்பிப் பலப்பல அனுபவமும் வெற்றியும் கண்டு அப்பால் உள்ள எல்லாம்ஆன பொருளில் நிலைத்து சித்தி பெறுபவரே சித்தர்''[8] எனும் வழக்கு பரவியுள்ளது என்று பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் கூறுகிறார். (பின்னிணைப்பில் விளக்கப்படம்).

சித்தர்களைப் பக்தர்களிலிருந்து வேறுபடுத்தி அவர்கள் இறைவனைக் கண்டவர்கள் என்றும், தெளிந்த அறிவுடையவர்கள் என்றும் கூறுவர். ''கடவுளைக் காண முயல்கின்றவர்கள் பக்தர்கள் என்றால் கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள்''[9] என்கிறார் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார்.

‘‘ஞான நிலையல்லாமல் யோகத்தால் சித்தி பெற்றோர் "சித்தர்" என்ற கருத்தே அதிகமாக நிலவுகிறது’’[10] என்கிறார் ப. அருணாசலம். சித்தர் என்ற சொல்லைப் பற்றி விரிவாக ஆய்வு செய்தோர், சித்தத்தை வென்றவர்கள் சித்தர்கள்; சாயுச்சிய நிலையை அடைந்தவர்கள் சித்தர்கள்; நற்பேரறிவு எனப்படும் சித்தி கைவரப் பெற்றவர்கள் சித்தர்கள் என்றெல்லாம் கொண்டு முடிவில், ‘‘ஈண்டு எடுத்துக்காட்டிய இத்துனை விளக்கத்தால் பெறலாகும் கருத்து, இறைமை அடைந்தவன் சித்தன்; அன்னோன் செயல் சித்தி’’[11] என்று கூறுகிறார்.

‘‘சமயம் என்ற எல்லைக்குள் நின்றுகொண்டு சிவனைப் பாடிய பக்தர்கள் சைவர் எனப்பட்டனர். சிவனைச் சித்தனாகக் கொண்டு சமய சார்பற்ற நிலையில் பாடிய யோகியர் சித்தர்கள் எனப்பட்டனர்’’[12] எனக் கூறும் இரா.மாணிக்கவாசகம் தமது ‘நம்நாட்டுச் சித்தர்கள்’ எனும் நூலில், ‘‘பண்டைய கல்வெட்டுகளில் சித்தம், சித்தி போன்ற சொற்கள், ‘பண்படுத்துவது’ என்ற பொருளில் வழங்கப்பட்டதாகத் தெரிகின்றது. ஆன்மாவின் பண்பட்ட நிலையினைச் சித்தி என வழங்கியிருக்கலாம் எனவும் எண்ண வேண்டியுள்ளது’’[13] என்றும் கூறுகிறார்.

அ.ச. ஞானசம்பந்தன் திருமந்திரம் நூலின் முன்னுரையில், சித்தர்களை யோகிகள் எனவும், ஞானிகள் எனவும் குறிப்பிடுகிறார். மேலும் அவர், ‘‘ஞானிகள் இறைவனால் தமக்கு அளிக்கப்பட்ட அறிவின் துணை கொண்டு இறைவன், உயிர்கள், உலகம் என்பனவற்றை ஆராயத் தொடங்கினர். இவ்வாராய்ச்சியின் பயனாகப் பொறிப்புலன்களை அடக்கி, அபரஞானம் எனப்படும் உலகம் பற்றிய அறிவைக் கடந்து இறையியல் பற்றிய பரமஞானத்தை அடைந்தனர். நாடு - காடு என்ற வேறுபாடு இன்றி எந்த இடத்திலும் தனித்து நின்று வாழப் பழகியவர்கள்.

நன்மை - தீமை, இருள் - ஒளி, சூடு - குளிர்ச்சி, இன்பம் - துன்பம் போன்ற இரட்டைகளிலிருந்து விடுபட்ட இந்த ஞானிகள் இவற்றில் வேறுபாடு காணாமல் இரட்டைகளை ஒன்றாகவே கண்டதனால் சமநோக்காளர் எனக் கூறப்பெற்றனர். சுக துக்கங்களை ஒன்றாகவே கருதியதால் பிறருடைய சுக துக்கங்களில் இவர்கள் பங்கு கொண்டதேயில்லை"[14] எனச் சித்தர்களைப் பற்றிய நீண்ட விளக்கம் தருகிறார்.

க.கைலாசபதி, "தம்மாலியன்றளவு உணர்ச்சிபூர்வமாகவேனும் விஞ்ஞானப் பண்பினை வளர்க்க முனைந்தவர் சிலரிருந்தனர். அவரைச் சித்தர் என்றழைக்கலாயினர். சித்தர்கள் என்றால் 'அறிவர்' என்பது பொருள்; விளங்கிய அறிவுடையவர் எனலாம்"[15] என்று கூறுகிறார்.

இவ்வாறு சித்தர்கள் எனும் சொல்லுக்குப் பல்வேறு அறிஞர்கள் பல்வேறு பொருள் விளக்கம் தந்தாலும் வரம்பிலா அறிவும், மரணமிலாப் பெருவாழ்வும் கொண்ட மீமானுட சக்தியை உடையவர் 'சித்தர்' எனக் கொள்ளலாம்.

### 2.1.1 சித்தர் - சொல் பயன்பாடு

சித், சித்து, சித்தர் போன்ற சொற்கள் தமிழிலக்கியங்களில் திடீரென்று நுழைந்தவையல்ல. இச்சொற்களின் பொருளிலமைந்த பிற சொற்கள் பழந்தமிழ் இலக்கியங்களில் கையாளப்பட்டு வந்தன. சித்தர் என்ற பொருள் தரும் சொற்கள் எவ்வெவ் இலக்கியங்களில் எம்முறைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதைக் குறித்து பல்வேறு அறிஞர்களின் கருத்துக்கள் இங்குக் காட்டத்தக்கன.

"மகான் புத்தரின் இயற்பெயரான சித்தார்த்தர் என்பதில் 'சித்து' பயன்படுகிறது. சித்தார்த்தம் என்றால் தத்துவ ஞானம் என்று பொருள்"[16] என

பவானந்தம் பிள்ளை பொருள் கூறுவதாக க. நாராயணன் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

*“நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப”*[17]

எனத் தொல்காப்பியத்திலும்,

*“நிறைமொழி மாந்தர் பெருமை நிலைத்து*
*மறைமொழி காட்டி விடும்”*[18]

எனத் திருக்குறளிலும் காணப்படும், ‘நிறைமொழி மாந்தர்’ எனும் சொல் சித்தர்களையே குறிக்கிறது என்று க. நாராயணன் கூறுகிறார். அவர்தம், கருத்துக்கு வலிமை சேர்க்கும் பொருட்டுப் பேராசிரியரின் தொல்காப்பிய உரையில் அமைந்த “சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறைவின்றி பயக்கச் சொல்லும் ஆற்றலுடையவர்”[19] என்பதையும், பரிமேலழகரின் திருக்குறள் உரையில் அமைந்த, “நிறைமொழி என்பது அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைத் தந்தே விடும் மொழி”[20] என்பதையும் மேற்கோள்களாகக் காட்டுகிறார். இவ்விரு உரையாசிரியர்களும் தருகின்ற விளக்கத்தின் அடிப்படையில், ‘நிறைமொழி மாந்தர்’ எனும் தொடர் சித்தர்களையே குறிப்பதாகக் கொள்ளலாம்.

*“நிலம்தொட்டுப் புகாஅர் வானம் ஏறார்*
*விலங்கிடு முந்நீர் காலிற் செல்லார்”*[21]

எனும் குறுந்தொகைப் பாடலடிகள் சித்தர்களின் இயற்கை மீறிய அற்புதச் செயல்களான சித்து என்பதனைப் பற்றிய குறிப்பினைக் கொண்டுள்ளன. இவ்வடிகளுக்கு விளக்கந்தரும் உ.வே.சாமிநாதையர், ‘‘ஆற்றற்கரும் இயற்கை கடந்த மீவியல் செயல்களான பூமியைத் தோண்டி உள்ளே புகுதல், ஆகாயத்தின்கண் ஏறுதல், கடல்மேல் காலால் நடத்தல்’’[22] ஆகியவற்றை சித்து என்ற சொல்லால் குறிக்கின்றார்.

புறநானூற்றுப் பாடலொன்றில், ‘‘திறவோர் காட்சி தெளிந்தனம்’’[23] என்றொரு சொல்லாட்சியைக் கணியன் பூங்குன்றனார் கையாளுகிறார். இங்குத் ‘திறவோர் காட்சி’ என்பது சித்தர் அனுபவம் என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம் என்பது க. நாராயணன் அவர்களின் கருத்து, ‘‘திறவோர் என்போர் முக்கால நிகழ்வுகளையும் தம் அகத்திலேயே காணும் ஆற்றலுடையவர்கள். உலகியல் இன்ப துன்பங்களுக்கான உண்மைக் காரணங்களை அறிய வல்லவர்கள். திறவோர் என்ற சொல் அகக்காட்சி காணவல்ல சித்தர்களையே குறிப்பதாகக் கொள்ளலாம்’’[24] என்கிறார்.

வெவ்வேறு சொற்களால் வழங்கிவந்த ‘சித்தர்’ என்று பொருள்படும் சொற்கள் பற்றி மேலே விவரிக்கப்பட்டது. இனி சித்தர் என்ற சொல்லையே நேரடியாகப் பயன்படுத்தியுள்ள இலக்கிய சொல்லாட்சியைக் காணலாம்.

திருக்குற்றாலக் குறவஞ்சியில், ‘‘கமனச் சித்தர் வந்து காயசித்தி விளைப்பர்’’[25] என்னுமிடத்தில் ‘சித்தர்’ என்ற சொல் இடம்பெறுகிறது. சித்தர்களின் அருமை பெருமைகளை நன்குணர்ந்தவரும், ‘ஞான சித்தர்’ என்று

அழைக்கப்படுபவருமான இராமலிங்க அடிகளார் சித்தர்களை 'அழியாச் சித்தர்கள்' என்கிறார். மேலும் "சித்தர்கள் என்றும் உள்ளவர்கள், மரணமிலாப் பெருவாழ்வு வாழ்பவர்கள்"[26] என்றும் குறிப்பிடுகின்றார். இத்தொடர் வாயிலாகச், சித்தர் பரம்பரைக்கு அழிவில்லை என்றும், சித்தர்களின் சீரிய நன்கொடைகளுக்கு இறப்பில்லை என்றும் குறிப்பாக உணர்த்துகிறார்.

தாயுமானவர், "வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர்கள்"[27] எனப் போற்றிப் பரவசமடைகிறார். மேலும் பகவத்கீதையில், "சித்தர்களில் நான் கமலமுனி"[28] எனக் கண்ணபிரான் கூறியதாகக் கூறப்படுகின்றது.

## 2.2. சித்தர் - சமூகச் செயல்பாட்டு விளக்கம்

சித்தர் என்ற சொல் பழமையானது. இந்திய நாடெங்கும் நீண்ட நாட்களாக வழங்கி வருவது. ஒரு குறிப்பிட்ட பொருளில் அல்லாமல் பல்வேறுபட்ட பொருள்களில் பரந்து காணப்பட்டது.

சித்தத்தை வென்றவர்கள் சித்தர்களா? சித்திகளை வென்றவர்கள் சித்தர்களா? அலலது அவர்கள் சித்தம், சித்தி ஆகிய இவ்விரண்டையும் வென்றவர்களா? எனப் பல்வேறு ஆராய்ச்சிகள் இன்றும் நிகழ்த்தப்படுகின்றன. இறுதியாக, பரிபூரண நிலை எனப் பொருள்படும் சித்தி கைவரப் பெற்றவர்கள் சித்தர்கள் எனக் கண்டறியப்பட்டுள்ளது.

சித்தர்கள் அனைவரும் உலக வாழ்வில் ஒட்டியும் ஆசாபாசங்களின்று ஒதுங்கியும் வாழ்ந்த மகான்கள் ஆவர். சாதி, மன, மத பேதமற்ற சித்தர்கள் ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் மனநிலை கொண்டவர்கள், அழியும் உடலில்

அழியாப் பொருளைக் கண்டவர்கள். சோதிடம், மருத்துவம், மந்திரம் என எல்லாக் கலைகளிலும் சிறந்திருந்தாலும் தம் நிலையினின்று திரியாது அடங்கிய தோற்றமுடையவர்கள். மக்களின் அறியாமையைப் போக்கிய ஆசான்களாகவும், சமயச் சீர்திருத்தம் புரிந்த செம்மல்களாகவும் திகழ்ந்தனர்.

“சித்து எனும் சொல் சித்தம் எனும் சொல்லிலிருந்து தோன்றியதாக இருக்கலாம். சித்தம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய நான்கும் அந்தக்கரணம் எனப்படும். இவற்றில் மனம் ஒன்றை நினைக்கும், புத்தி ஒன்றை நிச்சயிக்கும். அகங்காரம் முனைப்பைத் தோற்றுவிக்கும். சித்தம் இம்மூன்றுக்கும் காரணம் ஆகும்”[29] என்று இரா. மாணிக்கவாசகம் கூறுகிறார்.

***“மனம் புத்தி யகங்கார சித்தத்தாலே***
***வாரணமாய் நடத்தி வைத்த கர்மத்தாலே***
***வந்ததடா நோயதுவே மனிதர்க்காமே”[30].***

என அந்தக்கரணங்களைப் பற்றிய செய்தி இடம் பெறுகிறது.

“சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற நான்கும் நால்வகை முக்தி நிலை. இதுவே சிந்தை தெளிந்த நிலை. இந்நிலையில் சித்தமும் இல்லை. செயலும் இல்லை”[31]. இந்நிலையைத்தான் மோனநிலை என்று அழைக்கின்றனர். இம் மோனநிலையில் இருப்பவர்களே சித்தர்கள். திருமூலர் இந்நிலையினை, “செத்தார் நிலை”[32] எனக் குறிப்பிடுகிறார்.

சித்தர்களின் கொள்கை இறை மறுப்புக்கொள்கை எனக் கூறிவிட இயலாது. சித்தர்களில் பலர் சிவநேசர்கள் என்பது அறியப் பெற்ற செய்தி. எனினும் அவர்களை சைவ சமய அடியார்களின் பட்டியலில் நாம் சேர்த்துக்

கொள்வதில்லை. அதற்குக் காரணம் அவர்களின் இறைவனை அணுகும் முறை, சமயம் எனும் வட்டத்தைத் தாண்டிய பக்தி வெளிப்பாடு ஆகும். சமயப் பெரியோர்கள் தாம் அனுபவித்த தெய்வீகச் சுவையை அற்புதத் தமிழ்ப் பாடல்களில் வெளிப்படுத்தினர். சித்தர்கள், “யோகப் பயிற்சியினால் ஆன்மீகச் சக்தியை வளர்த்து, மனமடக்கி, அந்தர்யாமியைத் தம்முள் உறை இறைவனோடு ஒன்றியிருந்து தாம் அனுபவித்ததை உலகோருக்கு எடுத்துக்காட்டி உபதேசித்தார்கள். சக்தி வாய்ந்த பாமரத் தமிழிலேயே பாடினார்கள்”[33] என கு. அருணாசலக் கவுண்டர் குறிப்பிடுகிறார்.

“காமம், வெகுளி, மயக்கமடக்கி, உடம்பைப் பேணி, சமயத்தின் மீதுள்ள பற்றை நீக்கிச் சிவனைச் சிந்தித்து வாழும் தன்மையனே சித்தன் என்கிறார் போகர்”[34] என சி.எஸ். முருகேசன் கூறுகிறார்.

பொதுவாக, மனிதனின் வாழ்வியலைச் சுட்டிக்காட்டி சமுதாயமாக வாழ்வோருக்குத் தேவையான வழிவகைகளை எடுத்துரைத்து, சமூக முன்னேற்றப் பாதைகளை விளக்கி, கருத்துக்களைத் தெளிவுடனும், உறுதியுடனும் சாதி, மத, இன, மொழி வேறுபாடற்று எடுத்துரைப்பதே சித்தர்களின் தலையாய நோக்கம் ஆகும். பக்தி நெறியைக் காட்டிலும் சித்த நெறியிலேயே மனிதனது நோக்கம் முழுதும் சமுதாய முன்னேற்றம் கருதி, முற்றிலும் மனிதநேய அடிப்படையில் அமைகின்றது”[35] என்கிறார் வே.இரா. மாதவன்.

சித்தர்களின் நோக்கம், இவ்வுலகில் பிறவியெடுத்ததன் பயனாய் இவ்வுடலை நிலைக்கச் செய்வதும் அதன் மூலம் அழியாப் பேரின்ப வாழ்வாகிய

முக்தி நிலையை அடைவதும் மட்டுமன்று. சமுதாயத்தில் புரையோடிக் கிடக்கும் சாதி, சமய வேற்றுமைகளைக் களைந்து, எல்லோரும் ஓரினம், எல்லோரும் ஒரு குலம் என விளங்கச் செய்தல் ஆகும்.

ஏன்தான் என்னைப் படைத்தானோ இறைவன்? என நொந்து கொள்ளாமல், தன் படைப்பின் நோக்கமே தெரியாமல், தனக்குள் பல்வேறு கேள்விகளை எழுப்பிக் கொண்டு, அவற்றுக்கெல்லாம் விடை காண முடியாமல் தவிப்பவன் மனிதன். 'என்னை இதற்காகத்தான் படைத்தான். என் படைப்பின் நோக்கமே இதுதான்' என உணர்ந்தவனை சித்தன் எனலாம்.

## 2.3 ஜென் துறவிகள்

ஜென் துறவிகள் உலகிற்கு அறிமுகமாகக் காரணமானவர் இந்தியாவின் கௌதம புத்தர் என்று கூறுவது முற்றும் பொருந்தும். புத்தரின் புத்த மதம் சீனா, ஜப்பான், கொரியா, தாய்லாந்து போன்ற நாடுகளில் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. புத்த மதத்தின் கிளையாகத் தோன்றியது ஜென் மதம். இதனை, "மஹாயான புத்த மதம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் சீனாவில் அதிகம் பரவியிருந்தது. தாவோ மற்றும் கன்பூசியஸ் கொள்கைகளுடன் இணைந்து புதிய பரிமாணம் பெற்ற புத்த மதம் ஜப்பான், கொரியா போன்ற நாடுகளுக்கும் பரவியது. அக்காலக்கட்டத்தில் உண்டானது தான் ஜென் மார்க்கம்"[36] என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். இத்தகு ஜென் மார்க்கத்தைப் போதித்த பெரியோர்கள் ஜென் துறவிகள் எனப்படுகின்றனர்.

சீனர்களின் ஆக்கபூர்வமான உள்ளுணர்வுடன் இந்தியர்களின் தியான முறையினையும் இணைத்துக் கொண்டு உருவானது ஜென் பிரிவு. புத்த மதத்தின்

மூலத்தன்மை கெடாமல் இந்தியாவிலிருந்து சீனாவுக்கு எடுத்துச்சென்ற போதி தருமர் 'ஜென்' வழியையும் போதித்தார் என்பர். குருவால், சீடர்களுக்கு என்ற முறையில் ஜென் மார்க்கம் போதிக்கப்பட்டது. விழிப்புநிலை அடைந்த சீடர்கள் 'குரு' தகுதி பெற்று போதிக்கத் தொடங்கிவிடுவர். இத்தகு குரு-சீடர் உறவுமுறை இந்தியாவிலிருந்து சென்ற முறை என்று கருத இடமுள்ளது.

ஜென் குருமார்கள் கதைகள், செய்கைகள், மவுனம் ஆகியவற்றின் மூலம் வாழ்க்கையை மாணவர்களுக்குப் புரியவைப்பர். ஜென் குருக்கள் அதிகம் பேசமாட்டார்கள். சிறுசிறு கதைகள் வழியாகவும் கவிதைகள் வழியாகவும் தாம் சொல்ல நினைக்கும் கருத்துக்களைச் சொல்லுவர். அதைக் கேட்டுக் கேட்டு சீடர்கள் ஒரு நாள் ஞானம் பெறுவர். ஜென் குருக்களின் இத்தகு செயல்பாட்டினை, "அறிந்துகொள்ள முற்படுகிறவனும் அறியாதவனுந்தான் பேசிக்கொண்டிருக்கிறார்கள்; ஞானிகள் பேசுவதில்லை, அவர்கள் மவுனத்தை மொழியாக்கிக் கொள்கிறார்கள்; பார்வையால் பேசுகிறார்கள்; இந்து மதத்தில் 'நயன தீட்சை' வழங்குகிறாரே குரு அப்படி"[37] எனும் மேற்கோள் வழி அறியலாம்.

ஜென் வேறு, ஜென் குருக்கள் வேறு என்று பிரித்துவிட முடியாது. ஜென் குருமார்களின் வாழ்க்கை முறையே ஜென்னை நமக்கு உணர்த்தும் படிப்பினையாக அமையும். அதனால்தான் ஜென்னைப் புரிந்து கொள்ள ஜென் குருக்களின் வாழ்க்கைதான் ஆதாரம் என்கின்றனர்.

ஜென் என்பது ஒரு சுயதரிசனம். ஒருவர் எக்கணத்தில் தன்னைத்தானே அடையாளம் கண்டுகொள்கிறாரோ அந்த ஒரு கணத்தில் அவருக்கு விழிப்புநிலை(முக்தி) சித்திக்கிறது என்கிறது ஜென். "பெரும்பாலும் அதிர்ச்சியின்

மூலமே ஞான தரிசனத்தை அருள்கிறார்கள் ஜென் குருக்கள்”[38] என்கிறார் கவிஞர் புவியரசு.

“இப்படிப் பல குருமார்கள் வழியாக வளர்ந்து வந்த ஜென் கி.பி. 700 முதல் கி.பி. 906 வரை வளம் பெற்றுத் திகழ்ந்தது. பெரிய மடங்கள், நூற்றுக்கணக்கான சீடர்கள் என ஜென் தழைத்தது. ஒரு குரு தான் இறக்கும் முன் தனக்கான ஒரு வாரிசை ஜென் வழியில் தேர்ந்தெடுத்துவிட்டு மறைந்தார்”[39] என ஜென் குருக்களைப் பற்றி ‘மௌனத்தின் ஓசை’ என்னும் நூல் கருத்துத் தெரிவிக்கின்றது.

### 2.3.1 ஜென் - தோற்றமும் வளர்ச்சியும்

ஜென் மார்க்கம் புத்த மதத்திினின்று தோன்றியது என்பது முன்னர் கூறப்பட்டது. ஜென்னின் தோற்றம் பற்றித் தெரிய புத்த மதத்தினைப் பற்றிய அறிமுகம் தருவது சிறப்பானதாக இருக்கும்.

இந்தியாவிலுள்ள கபிலவஸ்து எனுமிடத்தில் அரச குடும்பத்தில் அவதரித்த கௌதமர் (கி.மு. 563- 483) துன்பம் என்றால் என்னவென்றே தெரியாமல் வளர்க்கப்பட்டார். வேதங்களைக் கற்றறிந்திருந்த அவருக்குத் திருமணமாகிக் குழந்தை பிறந்த பிறகுதான் யதார்த்த உலகின் மூப்பு, பிணி, இறப்பு போன்ற துன்பங்கள் தெரியவந்தன. அதனால் ஏற்பட்ட தேடலின் காரணமாய் இல்லற வாழ்வைத் துறந்து சென்றார். காடு மேடுகளில் சுற்றித்திரிந்து ஆண்டுக்கணக்கில் தியானம், யோகம் புரிந்து மனிதனின் துன்பங்களுக்குக் காரணம் என்ன என்பதையும், துன்பங்களிலிருந்து மனிதனை எவ்வாறு

விடுவிப்பது என்பதையும் பற்றித் தெரிந்து கொள்ள அவர் மேற்கொண்ட ஆய்வு முயற்சியில் பலமுறை தோல்வி கண்டார்.

ஒரு காலக்கட்டத்தில் போதி மரத்தின் கீழ் சட்டென்று ஒரு மின்னல் கீற்று போல் அவர் சில உண்மைகளைக் கண்டறிந்தார். அவை,

- உலகில் துன்பமும் உண்டு
- ஆசையே துன்பத்திற்குக் காரணம்
- ஆசையைத் துறந்தால் துன்பம் மறையும்

போன்றன. இவை பல காலம் அவர் செய்த தியானத்தால்தான் ஏற்பட்டது எனக் கூறமுடியாது. அவருக்கு விழிப்புநிலை ஏற்பட்ட அந்த ஒரு கணத்தில்தான் அவர் தன் தேடலுக்கான விடையினைக் கண்டு கொண்டார். இவ்விழிப்பு நிலையே ஜென்னின் அடிநாதம் எனலாம்.

இந்தியாவில் புத்தரால் தோற்றுவிக்கப்பட்ட இம்மதம் ஆசையைத் துறக்க எட்டு வழிமுறைகளைப் பயன்படுத்த வேண்டும் என்று அறிவுறுத்தியது. அவை,

- சரியான பார்வை
- சரியான அவா
- சரியான பேச்சு
- சரியான எண்ணங்கள்
- சரியான ஜீவனம்
- சரியான நடத்தை
- சரியான சிந்தனை
- ஒழுக்கத்துடன் கூடிய தவப்பயிற்சி

ஆகியனவாகும்.

இந்தியாவில் தோன்றிய புத்த மதம் புத்தரின் மறைவுக்குப் பிறகு மஹாயானம், ஹீனாயானம் எனப் பிரிவுற்று சீனா, கொரியா, ஜப்பான் போன்ற ஆசிய நாடுகளில் பரவியது. ஜென் மார்க்கம் மஹாயான புத்த மதத்தின் ஒரு கிளையாகச் சீனாவில் உருவெடுத்தது. மஹாயானம் எளியர்களும் பின்பற்றக் கூடிய வழிமுறைகளைக் கொண்டது. ஹீனாயானம் துறவு வாழ்க்கையைப் பரிந்துரைப்பது. ‘‘புத்த மதத்தின் ஒரு பகுதியாய் ஜென் உருவெடுத்தது. புத்தருக்குப் பின் அவருடைய வழிமுறைகளை இந்த மார்க்கத்தைப் பரப்பியவர் மகா காசியபர்’’[40] என்றும் சிலர் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

மேலும் ஜென் பற்றிக் கூறும் அறிஞர்கள், ‘அடிப்படையில் ஜென் சீனாவில் புழக்கத்திலிருந்த தாவோயிஸம் மற்றும் இந்தியாவில் இருந்து சென்ற பௌத்த மதத்தின் இனிய சங்கமம்’ என்று கூறுகின்றனர்.

ஜென் என்ற சொல், ‘தியான்’ என்ற வடமொழிச் சொல்லால் ஆனது. சீன மொழியில் ‘ஜான்’ என்று மருவி இறுதியில் ஜென் என்று வந்துள்ளது. இதனை, ‘‘ஆறாம் நூற்றாண்டில் சீனாவில் தோன்றிய மஹாயான புத்த மதத்தின் வழித்தோன்றலாய் உருவானதுதான் ஜென். உள்வாங்குதல் அல்லது தியான நிலை எனப் பொருள்படும் ‘தியான்’ என்ற வடமொழிச் சொல்லிலிருந்து தோன்றியதே ஜென் எனப்பட்டது’’[41] எனும் கலைச் சொல்லகராதியின் வழி அறியலாம்.

‘‘ஜென் என்கிற சொல் சமஸ்கிருத சொல்லாகிய தியான் என்கிற சொல்லில் இருந்து வருகிறது. கௌதம புத்தர் தியானம் சொல்லித் தந்தார். போதிதர்மர் சீன நாட்டுக்குத் தியானத்தைக் கொண்டு சேர்த்தார். அது அங்கே

சீயான் என்று ஆனது. இந்த சீயான் கிழக்காசிய நாடுகளுக்குச் சென்றபோது ஜென் என்று ஆனது. ஜென் என்பது வேதங்கள் இல்லாத, விதிமுறைகள் இல்லாத, குறிப்பிட்ட பயிற்சிகள் இல்லாத ஒரு தன்மை. அது வரையறுக்கப்படாத பாதை. அது யோகாவிலிருந்து வேறுபட்டதல்ல. அதுதான் யோகா"[42] என்பன போன்ற விளக்கங்கள் ஜென்னின் வித்து இந்தியாவிலிருந்து கொண்டு சொல்லப்பட்டது என்பதை ஆதாரப்பூர்வமாக நிரூபிக்கின்றன.

ஜப்பானில்தான் ஜென் மிகவும் செழித்து வளர்ந்து மக்களின் அன்றாட வாழ்வோடு கலந்துவிட்டது. ஆனால் அது தோன்றிய நாடு சீனா. சீனாவில் ஜென் தோன்றிய காலத்தை அறிஞர்களால் மிகச் சரியாகக் கணக்கிட முடியவில்லை. எனினும் அது இந்தியாவிலிருந்து புத்த மதத்தைச் சீனாவுக்குள் பரப்பச் சென்ற புத்தரின் 28வது பிரச்சாரச் சீடராக இருந்ததாகக் கருதப்படும் போதிதருமரின் காலத்திற்குப் பிறகுதான் (கி.பி.520) என்று வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

இருந்தபோதிலும் சில ஆராய்ச்சியாளர்கள் "போதிதருமரின் காலகட்டத்திற்கு முன்பே இந்தியாவில் இருந்து சென்ற அறிஞர் குமாரஜீவா புத்த மதத்தின் ஒரு பிரிவான மஹாயானத்தின் கோட்பாடுகளைச் சீன மொழிக்கு மாற்றிக் கொண்டிருந்தார். அப்போது அவருக்கு உதவியாளர்களாக இருந்த செங்சாவோ மற்றும் தால்-செங் என்ற இருவரும் புத்தரின் போதனைகளைப் பாலி மொழியிலிருந்து சீன மொழிக்கு மாற்றலாயினர். இந்த இருவரும் அன்று சீனாவில் பிரபலமாய் இருந்த தாவோயிஸத்திலும் கன்பூசியஸ் சிந்தனைகளிலும் தேர்ச்சி பெற்றவர்களாய் இருக்கவே, புத்தரின் சிந்தனைகள் மொழி

பெயர்க்கப்படும்போது தாவோ மற்றும் கன்பூசியஸ் சிந்தனைகளும் கலந்து அதன் விளைவாகப் பிறந்ததே ஜென்''[43] என்றும் கூறுகின்றனர்.

சுவாமி ஆனந்த பரமேஷ் அவர்கள், ''ஜென் என்றால் ஒரு தனிமனிதன் கடவுள் தன்மையோடு விழிப்புணர்வாக வாழும் முறை. அவ்வளவுதான். இது ஒரு மதம் அல்ல''[44] என்று தம் நூலில் குறிக்கிறார். மேலும் விளக்கமாக அவர், ''ஜென்னிற்கு ஆதாரம் புத்தமதத்தின் தியானம்தான். ஆனால் ஜென் என்பது ஒரு மதமற்ற மதம்தான்''[45] எனவும் குறிப்பிடுகிறார்.

மஹாயானம், தேரவாதம் என்று தற்போது ஜென் பள்ளிகள் இரு பிரிவுகளாய் பிரிந்து செயல்படுகின்றன. இதன் தோற்றம், அமைப்புமுறை, ஒன்றுபட்டிருந்தாலும் உள்ளமைப்பினும் பயிற்றுவிக்கும் முறையிலம் சிற்சில வேறுபாடுகள் இருக்கலாம். இன்று தமிழகத்தைப் பொறுத்தவரையில கொடைக்கானல் செல்லும் வழியில் அமைந்துள்ள பெருமாள் மலை எனுமிடத்தில் ஜென்பள்ளி ஒன்று 'போதி ஜென்டோ' எனும் பெயரில் இயங்கிக் கொண்டிருக்கிறது. இதன் குருவாக இருப்பவர் திரு. ஆமா சாமி (Fr. Ama Samy) அவர்கள் (பின்னிணைப்பில் காண்க), இவர் பள்ளியில் நம் நாட்டினர் மட்டுமல்லாது, அயல் தேசத்து மக்களும் ஆர்வத்துடன் கலந்து கொள்கின்றனர். இவரது பார்வையில் ஜென் என்பது, ''சீனாவில் 6-ஆம் நூற்றாண்டில் தோன்றிய மகாயான பௌத்தமாகும். ஆதலால் ஜென் என்கிற சொல்லுக்கு மகாயான பௌத்தம் என்றும் அவர்கள் பின்பற்றும் தியான முறையென்றும் தியானத்தால் கிடைக்கப் பெறுகின்ற அனுபவமென்றும் அதனால் பெறுகின்ற முக்தி நிலையென்றும் அல்லது இவை அனைத்தாலும் கிடைக்கப்பெறும் பெருவாழ்வு

என்றும் கூறலாம். ‘ஒரு ரோஜா என்பது ஒரு ரோஜா என்பது ஒரு ரோஜா’ ஜென் என்பது ஜென் மட்டுமே, பயிற்சி மட்டுமே. அதன் தன்மை பற்றிக் கூறுவது சற்று சிரமம். ஆனாலும் அது தனித்துவம் மகத்துவமும் உடையது”[46].

## 2.3.2 ஜென் - தனித்துவம்

‘மதம்’ எனும் சாயம் பூசப்பட்ட அனைத்துமே சமூகத்திற்காக ஏற்படுத்தப்பட்டவையே. அவை ஏதேனும் ஒரு அல்லது பல கடவுள்களை முன்னிலைப்படுத்தி உருவாக்கப்பட்டவையாய் இருக்கும். விதிகள், வழிபாட்டு முறைகள், சடங்குகள், ஆகமங்கள் என பல்வேறு திரைகள் மனிதனுக்கும் ‘கடவுள்’ எனச் சொல்லப்படுகிறவர்க்கும் இடையில் இருக்கின்றன. இத்தகு தன்மைகளைக் கொண்டவைதாம் மதங்கள்அனைத்தும் (பௌத்தம் தவிர) எனலாம்.

ஆனால் ஜென் மட்டும்தான் மனிதனுக்காக, தனிமனிதன் விடுதலைக்காக ஏற்படுத்தப்பட்டது எனலாம். “இதில் எந்தக் கொள்கை கோட்பாடுகளும் பாப புண்ணியகுற்ற உணர்வு, சரி - தவறு போன்று எதுவும் கிடையாது. ஏன், கடவுளே கிடையாது என்றுதான் இது சொல்லுகிறது! சொர்க்கப் பேராசை கிடையாது! எந்தத் தண்டித்தலும் கிடையாது. எந்தப் பரிசும் கிடையாது”[47].

மதம் என்பது ஒரு எல்லைக்கு உட்பட்டது. ஆடம்பரமானது. ஏதேனும் ஒரு இலக்கினை நோக்கிச் செல்வது. ஆனால், ஜென் என்பது மதங்களைக் கடந்தது. அதனை ஒரு வாழ்க்கை நெறி என்று கூடச் சொல்ல முடியாது. அதுதான் வாழ்க்கை. மேலும் ஜென் கடவுளைத் தேடுவதோ, ஆராதிப்பதோ இல்லை. அதுவே கடவுள் ஆகிறது. அதனால்தான் ஜென் இலக்கியங்களை உலகெங்கும்,

குறிப்பாக இந்தியாவில் பரப்பிய தத்துவப் பேராசிரியர் ஓஷோ, ‘‘கடவுள் இறந்து விட்டார் ஜென்னே வாழ்கிறது’’ எனத் துணிந்து சொல்கிறார்.

ஜென் பற்றி எவ்வளவு விளக்கங்கள் கொடுத்தாலும் அதைப் புரிந்து கொள்ள மனத்தை வெற்றிடமாக, காலியாக வைத்திருக்க வேண்டும். எதுவும் இல்லாத இடத்தில்தான், அதாவது பூஜ்யத்தில்தான் பூரணத்துவம் அடைய முடியுமென்பதே ஜென் ஆகும்.

‘‘ஜென்னே உன் தத்துவம் என்ன? என்று கேட்பவரிடம், இதில் பிரத்யேகமாகச் சொல்வதற்கு ஒன்றுமில்லை’’ என்கிறது ஜென். இந்த உலகம், அது தோன்றிய விதம், அது செல்லும் பாதை, இனி அடையப் போகும் கதி என்ன? என்று கதை கதையாய் சொல்லும் மதங்களிடையே, ‘சொல்வதற்கு ஒன்றுமில்லை’ என்பதிடம் என்ன கிடைக்கப் போகிறது’’[48] என்று கூட மக்கள் நினைப்பதுண்டு. ஆனால், ‘சொல்வதற்கு ஒன்றுமில்லை’ என்பதில்தான் ஜென்னின் தத்துவமே அடங்கியுள்ளது எனலாம்.

‘‘எல்லா மதங்களும் ஞானம் அடைவதையும் முக்தி நிலையையும் வாழ்வின் இறுதி நிலையாகக் கருதும்போது ஜென் முக்திக்குப் பின்தான் உண்மையான வாழ்வே தொடங்குகிறது என்கிறது’’[49]. ஒரு ஆன்மா முக்தியடைய பல பிறப்பெடுக்க வேண்டும். கடுமையான தவம் புரிய வேண்டும் என்பன போன்ற கட்டுப்பாடுகளை விதித்துப் பயமுறுத்தும்போது ஜென் மட்டுமே முக்தியடைவது மிகச்மிகச் சாதாரணமான இயல்பான ஒன்று என்கிறது. மேலும், நாம் ஜென்னின் உண்மைத் தன்மையையும், எளிமையையும் கொண்டே அதனை நாம் கடினமாக்கிக் கொள்கிறோம் என்பர் ஜென் ஆய்வாளர்கள்.

ஜென் புத்த மதத்தினின்று கிளை விட்டு வளர்ந்திருந்தாலும் புத்த மதத்திற்கும் ஜென்னிற்கும் பல வேறுபாடுகள் உள்ளன. புத்த பிட்சுகள் மனித வாழ்க்கை துன்ப மயமானது என்றும் வாழ்வில் பெறும் இன்பங்கள் அனைத்தும் மாயை என்றும், கூறுவர். “ஜென் மார்க்கத்திலோ மனிதன் அன்றாட வாழ்வில் திறம்படச் செயல்படவும், உள்ள நேரத்தைச் சந்தோசமாக அனுபவித்து வாழ்வதற்குமான அடிப்படைகள் விளக்கப்பட்டுள்ளதை நாம் காண முடியும்”[50] என்பர் ஆய்வாளர்கள்.

ஜென் துறவி ஆமா சாமி ஜென் என்று குறிப்பிடத் தகுந்தது என்ன? எனும் வினாவிற்கு, “ஜென் வாழ்வு என்பது எளிமையும் முரண்பாடுகளும் புரிந்து கொள்ள முடியாத நடைமுறை சாத்தியம் நிறைந்ததும் இம்மையும் மறுமையும் பற்றியதும் ஆனந்தமும் கருணையும் நிறைந்ததாகும். சுதந்திரமும் கருணையுமே ஜென்னின் அடையாளம் ஆகும். சுருங்கக் கூறினால் ஜென்னில் இல்லாததே இல்லை எனலாம். இருந்தபோதும் ஆன்ம மலர்ச்சியே இதன் தனிச்சிறப்பாகும்”[51] என்று விடையளிக்கிறார்.

பெரும்பாலும் ஜென் இலக்கியங்கள் யாவும் குட்டி குட்டிக்கதைகளாகவும் சிறு சிறு குறிப்புகளாகவும் மற்றும் புதிர்களாகவும் சில கவிதைகளாயும் அமைந்துள்ளன. இது, “கேட்பவர் மனதில் திடீரென்று ஒரு மாற்றத்தைக் கிளறிவிட்டு அதன் வழியாக உண்மையை உணரச் செய்வதே இந்த முயற்சிகளின் நோக்கம். ஒருவகையில் அர்த்தமற்றதாகவும் சிரிப்புத் "துணுக்குகள் போலவும் இருக்கும் இவற்றின் முத்தாய்ப்பான கடைசி வரிகளைப் புரிந்து கொள்ளத் தவறினால் அதில் உள்ள ஜென்னைத் தவற விட்டு விட

வேண்டியிருக்கும். அதே சமயம் அந்த வரிகளில் ஏதோ உள்ளர்த்தம் பூடகமாக உள்ளது என்று அர்த்தம் கொள்வதும் ஜென்னில் இருந்து நம்மைத் திசை மாற்றி விடும். அவை நேரடியாக உள்ளதை உள்ளபடிச் சொல்கின்றன என்பதில் ஐயம் வேண்டாம்.

> ***''உபதேசத்திற்கு வெளியே, பாரம்பரியத்தைத் தாண்டி வார்த்தைகளிலும் எழுத்துக்களிலும் காணாதது - நேரடியாக மனித மனத்தைச் சுட்டிக் காட்டுவது ஒருவரின் இயல்பைப் பார்த்து புத்தத் தன்மையை அடைவது''.***

இதுதான் ஜென்னின் தத்துவம் என்று சொல்லலாம்''[52].

இன்னும் சுருக்கமாகவும் தெளிவாகவும் கூறினால் ''ஆண் ஆணாகாவும், பெண் பெண்ணாகவும்தான் இருக்க முடியும் என்பது தர்க்கம் (Logic). ஆணில் பெண்மையையும் பெண்ணில் ஆண்மையையும் காணமுடியும் என்பது யதார்த்தம் (Reality)''[53]. இத்தகு எதார்த்தத்தில் வாழ மனிதனைப் பழக்குகிறது ஜென் வழி.

ஜென்னின் தனித்துவம் பற்றிக் கூறும் போது, ஜென் மரபாகிய தாமரை மலர் வழங்குதல், தேநீர் வழங்குதல் போன்ற நிகழ்வுகள் முக்கியத்துவம் வாய்ந்தவைகளாகக் கருதப்படுகின்றன

''புத்தர் மகா காஸ்யபருக்கு தாமரை மலரைப் புத்தர் தந்த நிகழ்ச்சி ஜென் உலகால் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகக் கருதப்படுகின்றது''[54] எனும் கூற்று வழி அறியலாம்.

''ஜப்பானியரின் பண்பாட்டில் பிரதான இடம் வகிப்பது தேநீர் வழங்கல். இது காலங்காலமாகக் காத்துப் போற்றி கைக்கொள்ளப்பட்டுவரும் கலை மரபு. அந்த

மக்களின் பண்பாட்டுச் சின்னம்”[55] எனும் மேற்கோள் வழி தேநீர் வழங்குதல் எனும் மரபு அவர்களிடையே இருந்ததாகக் காட்டுகின்றது.

‘ஜென்னும் ஜென் தியானமும்’ எனும் நூலில் ஜென்னிற்கும் பிற மதங்களுக்குமான சில முக்கிய வேறுபாடுகளைக் காணமுடிகின்றது.

| வ. எண் | ஜென் | பிற மதங்கள் |
|---|---|---|
| 1 | உள்ளும் புறமும் அன்பு கருணையையே அடிப்படையாகக் கொண்டது. | உள்ளே அன்பு மயம், வெளியே ஒழுக்க மயம் (Moral) அதனால் அன்பு களங்கப்படுகிறது. |
| 2 | முழுச் சுதந்திரத்தை அடிப்படையாகக் கொண்டது. பாவம் - புண்ணியம், மோட்சம் - நரகம் என்பன போன்ற பாகுபாடுகள் கிடையாது | கடவுளின் மேல் பயத்தையும் மோட்சத்தின் மேல் பேராசையையும் அடிப்படையாகக் கொண்டது. |
| 3 | தியானமே அடிப்படை. அதை நேரடியாக வலியுறுத்துகிறது. | இது படிப்படியாக உருவ வழிபாட்டிலிருந்து அரூப வழிபாட்டிற்கு தியானத்திற்குச் செல்கிறது. |
| 4 | மிகமிக எளிமையானது | ஆடம்பரம் மிக்கது. |
| 5 | இது புரிந்துகொள்ளுதலை அடிப்படையாகக் கொண்டது. இது சுயச்சிந்தனையாளர்களுக்கும் தைரியம் மிக்கவர்களுக்கும் உடையது. | இது நம்பிக்கையை (Belief system) அடிப்படையாகக் கொண்டது |
| 6 | இங்கு தன்னையே கடவுளின் அம்சம் என்று ஒருவன் விரைவிலேயே புரிந்து கொள்கிறான். | அதனைப் புரிந்து கொள்வது அவ்வளவு எளிதல்ல. |
| 7 | இது அறிவியல்பூர்வமானது | நம்பிக்கை பூர்வமானது |
| 8 | தனிமனிதனுக்கு உரியது (Individual) | இது கூட்டத்திற்கு மட்டுமே உரியது (Mass) |
| 9 | இது வினைச் சொல்லை, அதாவது கடவுள் தன்மையை மற்றும் இயக்கத்தை (Godlines, Energy procing ) ஆதாரமாகக் கொண்டது. | கடவுள் (ஒன்றோ, பலவோ) என்ற பெயர்ச்சொல்லை ஆதாரமாகக் கொண்டது. |
| 10 | தியானம் முன்னிலைப்படுத்தப்பட்டு ஒழுக்கம் இயல்பாக வர வேண்டும் என்று கூறுகிறது. ஆகவே இது உண்மையானது. | ஒழுக்கம் திணிக்கப்படுகின்றது. ஆகவே இது மிகவும் மேம்போக்காகச் செயல்படுகிறது. போலியானது”[56]. |

போன்றவை மட்டுமல்லாது இன்னும் பல வேறுபாடுகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

## 2.4 சித்தர்கள் ஜென் குருக்கள் - பட்டியலும் அறிமுகமும்

சித்தர்கள் மற்றும் ஜென் துறவிகளின் பெயர்ப்பட்டியலில் காலம், அவர்களின் புறத்தோற்றம் மற்றும் வாழ்க்கை முறை பற்றியும் இங்கே விரிவாகப் பார்க்கப்படுகிறது. மேலும் ஞானம் பெறா ஜென் குருக்கள் பற்றியும் போலி சித்தர்கள் பற்றியும் காணலாம்.

### 2.4.1 பெயர்ப் பட்டியல்

சித்தர்களைப் பற்றிய செய்திகளைத் தமிழில் வழங்கும் முதல் நூல் திருமந்திரம். சித்தர்கள் அனேகம் பேர் வாழ்ந்திருந்தாலும் பதினெண்மரையே தேர்ந்து சொல்லப்படுகின்றது. இதற்குக் காரணம் ஏதும் குறிப்பிடப்படவில்லை. ‘‘பல்வேறு சம்பிரதாயங்களைச் சேர்ந்த அறுபதுக்கும் மேற்பட்ட சித்தர் குழாத்திலிருந்து அவரவர்க்குத் தோன்றியவாறு பதினெண் சித்தர்களைச் சொல்வார்கள்’’[57] என்கிறார் அருணாச்சலக் கவுண்டர்.

சித்தர்கள் பதினெண்மர் யார்? யார்? என்பது பற்றிப் பல்வேறு ஆசிரியாகளும் பல்வேறு கருத்துக்களைத் தெரிவிக்கின்றனர். இவற்றைச் ‘சித்தர்கள் கண்ட இறைமை’ எனும் நூலில் அந்நூலாசிரியர் விரிவாகக் கூறியிருக்கின்றார்’’[58] தாயுமானவர் சித்தர்கள் ஒன்பது பேர் என்று கூறி அவர்களை ‘நவநாதர்கள்’ என்கிறார். அவர்களை,

- சத்தியநாதர்
- சகோத நாதர்

- வகுதி நாதர்
- மதங்க நாதர்
- மச்சேந்திர நாதர்
- கடேந்திர நாதர்
- ஆதி நாதர்
- கோரக்க நாதர்

என்று குறிப்பிடுகிறார். திருமூலர் சொல்கின்ற சித்தர்கள் நந்தி அருள் பெற்ற சித்தர்கள். அவர்கள்,

- சனகர்
- சனந்தனர்
- சனாதனர்
- கனற்குமாரர்
- சிவயோகமுனி
- பதஞ்சலி
- வியாக்கியரபாதர்
- திருமூலர்

ஆகிய எண்மராவர். பதினெண் சித்தர்கள் எனப்படுவோர்,

- நந்தி
- அகத்தியர்
- மூலர்
- புண்ணாக்கீசர்
- புலத்தியர்
- பூனைக்கண்ணர்
- இடைக்காடர்
- போகர்
- புலிக்கையீசர்

- கருவூரார்
- சொங்கணர்
- காலங்கி
- அழுகண்ணர்
- அகப்பேயர்
- பாம்பாட்டியார்
- தேரையர்
- குதம்பையார்
- சட்டைமுனி

ஆகியோராவர்.

அபிதான சிந்தமாணி கீழ்க்கண்டவாறு சித்தர்களின் பெயர்களைப் பட்டியலிடுகிறது:

- “அகத்தியர்
- கோரக்கர்
- கைலாசநாதர்
- சட்டைமுனி
- திருமூலர்
- நந்தி
- கூக்கண்ணர்
- கொங்கணர்
- மச்சமுனி
- வாசமுனி
- கூர்மமுனி
- கமலமுனி
- இடைக்காடர்
- புண்ணாக்கீசர்
- சுந்தரானந்தர்

- உரோமரிஷி
- பிரம்மமுனி

இவர்களன்றி,

- தன்வந்திரி
- புலஸ்த்தியர்
- புகண்டர்
- கருவூரார்
- இராமதேவர்
- தேரையர்
- காலர்"[59].

இந்நூல் சித்தர்கள் பதினெண்மர் என்ற வரையறையைத் தாண்டிக் கூடுதல் நபர்களைச் சுட்டுகிறது.

ஆகமவழி வந்த சைவ சமய வித்தகச் சித்தர் கணம் என அருணாச்சலக் கவுண்டர் குறிப்பிடும் பதினெண்மர்,

- அப்பர்
- சுந்தரர்
- சம்பந்தர்
- மாணிக்கவாசகர்
- அவ்வையார்
- திருமூலர்
- சிவவாக்கியர்
- பட்டினத்தார்
- பத்ரகிரியார்
- அருணகிரியார்
- அகப்பேய்

- பாம்பாட்டி
- கடுவெளி
- இடைக்காடர்
- குமாரதேவர்
- முத்துத்தாண்டவர்
- இராமலிங்க சுவாமிகள்”[60].

போன்றோர் எனப் பதினெண் சித்தர்களை ஒவ்வொரு சாராரும் ஒவ்வொரு வகையில் வரிசைப்படுத்துகின்றனர்.

பிறகு காலப்போக்கில் சித்தர்களின் எண்ணிக்கை 31 வரை நீண்டது. ஆனால் இவற்றையெல்லாம் ஓர் ஆதாரமாகக் கொள்ளலாமேயன்றி முடிந்த முடிபாகக் கொள்ளல் இயலாது.

ஜென் குருக்களின் பெயர்கள் மற்றும் கருத்துக்கள் பற்றிய செய்திகளை, அவர்களால் சொல்லப்பட்ட குட்டிக்கதைகள், கவிதைகள் வழி அறிந்துகொள்ள முடிகிறது. சித்தர்களின் பெயர்களில் எப்படி மாற்றங்கள் இருக்கின்றனவோ அதைப்போலவே ஜென் குருக்களின் பெயர்ப்பட்டியலிலும் சில முரண்பாடுகள் காணப்படுகின்றன. எனினும் அவர்கள் யாவரும் ஜென் குருக்களே என்பதில் ஐயமில்லை. அதன்படி அவர்களை,

- இக்கியு
- ஜோஷீ
- சுவாங்-ட்சு
- போதிதர்மா
- ஹாகுயின் சோயின்ஜி
- ரின்சாய்

- உம்மன்
- மஞ்சுஸ்ரீ
- ஓபா
- சென் ட்சான்
- ஃபூடா ஸ்ரீஷிஜ்
- பங்கீய்
- ரோஷி தாஜி
- தாக்கள்
- நியோகின்
- தைகான்
- கிச்சிர் கோஜீன்
- ஆனந்தன்
- சாரிபுத்ரன்
- கீச்சு
- மஹா காஸ்யபன்
- சிகான் செஞ்சி
- நானின்
- லின் - சீ
- ஹோய்டீய்
- ககுவான்

என வரிசைப்படுத்துகிறார் கவிஞர் புவியரசு.

- “ஜோஷீ
- யிஷான்
- குடோ
- ஆனந்தன்
- மஹாகாஸ்யபன்
- போதிதர்மா
- ஹாகுய்ன்

- தெஸ்ஸீ
- ஹோஷின்
- ஹீனெங்
- செங்காய்
- இக்கியு
- ஷோன்
- கோசென்
- நான் -இன்
- சாரிபுத்ரன்
- யாஓஷன்
- சுவான் சியென்
- லிஞ்சி
- ஜீஹீ
- சுவாங்-ட்சு
- போகூஜி
- சீசெட்சு
- ஹோகன
- இசுன்

என சி.எஸ். தேவ்நாத் தம் நூலில் குறிப்பிடுகிறார்.

ஜென் இலக்கியத்தை இந்தியாவில் பரப்பிய தத்துவப் பேராசிரியரும் ஞானியுமான ஓஷோ தம் நூலில் பின்வரும் ஜென் குருக்கள் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

- பாஷோ
- சோசேகி
- நி-புட்சு
- புனான்
- இஸ்ஸா

- மிட்சுஹிரோ
- ஹியாகுசாய்
- டோஜென்
- கன்ஸான்
- மேயீஸிட்சு
- சோடொ
- சோஷீ
- குயன்
- தாயியோ
- செங்காய்
- ஸீசாய்
- போன்ச்சோ
- சேய்கின்சாய்
- யாகுசாய்
- திக்கான்
- ரோய்கன்
- புஸன்

## 2.4.2 துறவு வாழ்வில் பெண்கள்

துறவு வாழ்வில் பெண்களுக்கான இடம் குறித்து ஆராயும்போது, சித்தர்களில் பெண் சித்தர் ஒரே ஒருவர் மட்டும் இருந்ததாகத் தெரிகிறது. ஜென் குருக்கள் கணிசமான அளவில் வாழ்ந்திருந்தனர் என்றும், இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர் என்றும் அறியமுடிகிறது.

சித்தர்களின் எண்ணிக்கை பற்றிக் கூறும்போது அவ்வையார் பற்றிய செய்திகள் சில இடங்களில் காணப்படுகின்றன. சான்றுகள் இல்லாதது பெரும் குறையாகும். ''ஆண் - பெண் உறவை வளர்த்து, உயிர் தணிக்கைச் செய்யும்

காதலைப் போல் நுண்ணிய கருத்துக்களை எண்ணச் செய்து உண்மையோடு நம்மை இணைப்பதே யோகத்தின் ஆற்றல்”[61] எனும் அவ்வையாரின் கூற்று வழி அவரைப் பெண் என்று கருத இடமுண்டு என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

ஜென் குருக்களின் பட்டியலில் இரண்டு பெண் துறவிகளின் பெயர்கள் (ரெங்கட்சு, இசுன்) இடம் பெற்றிருந்தன. மூன்றாவதாக கிஸ்ஸீ எனும் பெண் துறவியின் பெயர் ஒரு நூலில் இடம் பெறுகிறது. “கிஸ்ஸு தன்னுடைய பத்தாவது வயதிலேயே கன்யாஸ்தீரியாக (NUN) மாற்றப்பட்டார். ஆண்களுக்குப் போதிக்கப்பட்டது போலவே அவளுக்கும் போதிக்கப்பட்டது”[62] என்று கூறப்படுகிறது. மேலும் கிஸ்ஸீ பற்றிக் கூறும்போது முஜாக்கு, டெட்சூமா எனும் இரு பெண் துறவியருக்குப் பின்வந்த மூன்றாமவர் என்றும் குறிப்பிடப்படுகிறார். மேலும், “கிஸ்ஸீ ஞான விளக்கம் பெற்ற பிறகு பான்ஸீ மாகாணத்துக்குச் சென்று தன்னுடைய ஜென் கோவிலை ஆரம்பித்து, இறக்கும்வரை நூறு கன்னியாஸ்திரிகளுக்கு ஜென்னைப் போதித்தாள்”[63] என்கிறார்.

மேற்குறித்தவர்கள் தவிர ரயோனின் எனும் பெண் துறவியைப் பற்றிய கதைகளும் ஆங்காங்கே ஜென் இலக்கியங்களில் காணக்கிடைக்கின்றன. மேலும் புகழ் பெற்ற ஐந்து பெண் ஜென் குருக்கள் எனும் தலைப்பில் இணையப் பக்கங்களில் குறிக்கப்பட்டிருக்கும் பெயர்கள்,

- ஜோங்சீ
- லிங்சுஹோ
- லியா டெய்மா
- மோஸான் லியோரன்
- மியாஸின்

போன்றவையாகும்”[64].

ஜென்னில் பெண்கள் பற்றிக் கூறும்போது “ஆண்-பெண் வித்தியாசம் என்பது பௌதீகத்துக்குத்தான்; ஆன்மீகத்துக்கு அல்ல”[65] எனும் மேற்கோள் இதனைத் தெளிவாக விளங்கச் செய்கிறது. எனினும் தொடக்கக் காலத்தில் பெண் ஜென் துறவிகள் சீடர்களாகக் குருக்களால் அவ்வளவு எளிதாக ஏற்றுக்கொள்ளப்பட மாட்டார்கள். இதனை ரயோனின் எனும் துறவியின் வரலாற்றினின்று அறிய முடிகிறது. இவரின் அழகால் டெட்சூயூ, ஹாக்கூ போன்ற குருக்களால் சீடராக ஏற்றுக்கொள்ள மறுக்கப்பட்டார். “இதனால் விரக்தியடைந்த ரயோனின் ஒரு பழுத்த இரும்புக் கம்பியை எடுத்துத் தன் முகத்தில் வைத்துத் தீய்த்துக் கொண்டாள். ஹாக்கூ இப்பொழுது அவளைத் தன் சீடராக ஏற்றுக் கொண்டார்”[66] எனும் குறிப்பு பெண் சீடர்களுக்கிருந்த மறுப்பையும் எதிர்ப்பையும் காட்டுகிறது.

### 2.4.3 குரு - சீடர் உறவுமுறை

நன்மை, தீமை எனும் இரு உணர்வுகளுமே மனிதனிடம் இயல்பாக இருக்கின்றன. விருப்பு வெறுப்புகளால் தோன்றும் கீழ்நிலை உணர்வுகள் மனித வாழ்வின் ஆன்மப் பயணத்திற்குப் பெருந்தடைக்கற்களாய் இருக்கின்றன. இம்முயற்சியில் வெற்றி பெற ஆன்மப் பயணத்திற்கு ஏற்புடைய சூழ்நிலைகளை உருவாக்கிக்கொள்ள வேண்டுமெனில் பயிற்சி அவசியமாகின்றது. அப்பயிற்சிக்குக் குருவின் துணை தேவைப்படுகிறது. “ஆன்மப் பயணத்திற்கான பயிற்சிகளைக் குருவின் துணைகொண்டே பெற முடியும். குருவின் துணையில்லாத ஆன்மப் பயணம் எளிதன்று. அறிவு முதிர்ச்சியும் ஆழ்ந்த பயிற்சியுமுடைய ஞானகுரு தம் மாணவனைச் சரியாக நெறிப்படுத்துவார்”[67].

குரு-சீடர் பயிற்றுவித்தல் முறை சித்தர் பரம்பரையிலும் உண்டு; ஜென் வழியிலும் உண்டென்பதை அவர்களின் இலக்கியங்களின் வழியாக அறிய முடிகிறது. சீன தேசத்து சித்தர்கள் என்று கருதப்படுகின்ற போகரும் புலிப்பாணி சித்தரும் தம் தாய்நாட்டினின்று வந்து தமிழ்நாட்டில் குருவாக இருந்திருக்கின்றனர். அதுபோலத் தமிழகத்தைச் சேர்ந்த காஞ்சியைத் தலைநகராய் கொண்டு ஆட்சி செய்த பல்லவ மன்னான போதிதருமன் சீன தேசத்திற்குச் சென்று ‘லங்காவதாரச் சூத்திரத்தை’ப் போதித்தார் என்பதும் முத்தாய்ப்பான செய்தியாகும்.

### 2.4.3.1 சித்த மார்க்கத்தில் குரு

வீரராகவ ஐயர் தம் கட்டுரையில், போகர் தமிழ்நாட்டுக்கு வந்த காலம் பற்றியும், குருவாகத் திகழ்ந்தமைப் பற்றியும் கூறும்போது, “போகர் தமிழில் பல வைத்திய நூல்களும் இரசவாத நூல்களும் எழுதினார். சீனத்தவரான அவர் கி.பி.3ஆம் நூற்றண்டில் இந்தியாவிற்கு வந்தாரென்பர். முதலில் பாட்னா, கயா முதலிய இடங்களுக்குச் சென்றபின் தென்னிந்தியாவுக்கு வந்து தமிழ்ச் சித்தரிடம் இரசவாதமும் வைத்தியமும் கற்றார். அவரும் இத்துறைகளைத் தமிழருக்கு போதித்தார். தென்னிந்தியாவிலிருந்து அரேபியாவுக்குச் சென்று, அங்கிருந்து தாயகம் திரும்பினர் என்பது ஐதீகம். அவருடன் சீனத்துக்குச் சென்ற தமிழ்ச் சீடர்கள் சிலர் பொறியியல் கலைகள் பயின்று வந்து தமிழ்நாட்டில் புகழெய்தினர். புலிப்பாணி என்பவர் போகருடன் வந்து தமிழ்நாட்டில் தங்கியிருந்தவர். அவரும் தந்திரம், இராசவாதம், வைத்தியம் முதலியனவற்றைப் பற்றிப் பல நூல்கள் எழுதியுள்ளர்”[68] என்று குறிப்பிடுகிறார்.

"போகர் என்பவர் தமிழ்நாட்டுச் சித்தர்களிலே ஒருவராகக் கருதப்படுகிறார். இவர் சீனத்திலிருந்து தமிழகத்துக்கு வந்தவர். பழனிமலையிலே தங்கியிருந்தவர். புலிப்பாணி என்பவரும் சீனர். இவரையே வியாக்ரபாதர் என்று குறிப்பிடுகின்றனர். இவர் போகரின் மாணவர் என்றும் கூறப்படுகின்றது"[69] போன்ற செவிவழிச் செய்திகள் இருப்பதாகத் தெரிகின்றன.

சித்த மார்க்கத்தில் குருவானவர் நமக்கு வழிகாட்டுவதோடு நம்மை வழிநடத்திச் செல்கிறவருமாவார் என்று நம்புவதுண்டு. "தம்மிடம் சீடனாகும் தகுதி உடையவர்களைக் குரு ஆராய்ந்து தேர்ந்தெடுக்க வேண்டும் என்று சித்தர்கள் வலியுறுத்துவர். யார் மெய்யான குருவோ அவரே மெய்ஞ்ஞானத்தைப் போதிக்க வல்லவர்"[70].

குருடனுக்கு வழிகாட்ட பார்வையுள்ளவனால்தான் முடியும். வழிகாட்டியும் குருடனாய் இருந்தால் இருவரும் பள்ளத்தில் விழ வேண்டியிருக்கும். அதுபோல அறிவுள்ள குருவால்தான் அறியாமையை நீக்க முடியும். இன்றேல் இருவரும் படுகுழியில் விழ நேரும் என்பதை,

*"குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்*
*குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்*
*குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்*
*குருடும் குருடும் குழி வீழுமாறே"*[71]

எனத் திருமூலர் பாடுகிறார்.

போகர் மற்றும் கொங்கணச் சித்தரிடம் பயிற்சி ஞானம் பெற்றவர் இடைக்காட்டுச் சித்தர் என்று கூறப்படுகின்றது. இதனை, "இவர் (இடைக்காடர்)

போகரின் மாணக்கர் என்ற கருத்தும் கொங்கணரின் மாணக்கர் என்ற கருத்தும் நிலவுகின்றது"[72] என்பதால் தெரியலாம். "இவர் அந்தணர் குலத்தில் பிறந்தவர் என்றும் போகரது மாணவராய் இருந்தார் என்றும் கூறுவர்"[73] எனப் பரிமளா ராஜகுமாரன் குறிப்பிடுகிறார்.

கோரக்கரை மச்சேந்திரச் சித்தரின் மாணக்கர் என்பர். சட்டைமுனிச் சித்தர் பற்றிய ஒரு குறிப்பு, "இவர் பிறப்பால் சேணியர் என்பர். போகருடன் இருந்தார் என்பர். மேலும் மதுரை வாலைசாமி என்பார் இவரைத் தம் குரு எனக் குறிக்கின்றார்.

*"எங்கள் குரு சட்டைமுனி யா ரிருநூறும் யாரடி*
*ஞானப் பெண்ணே"*

என்பது அவர் பாடல். இவரைப் பற்றிய வேறு கருத்துகள் கிடைக்கவில்லை"[74]. இவை போன்ற செய்திகள் மட்டுமே சித்தர்களின் குரு-சீடர் பரம்பரை பற்றிக் கிடைக்கின்றன.

### 2.4.3.2 ஜென் மார்க்கத்தில் குரு

ஜென் என்பது நாளையை நம்புவதில்லை. இன்று, இந்தக் கணம் விரும்பியதைச் செய்ய போதிப்பது ஜென் மார்க்கம். இதனைக் கதைகள், செய்கைகள், மவுனம் வழி குருக்கள் தம் சீடர்களுக்குப் போதிப்பர். இதில், குருவிற்கும் சீடனுக்கும் உள்ள வேறுபாடு, சிந்திக்கும் முறை ஜென்-குரு சீடர்கள் பற்றிய கதைகள் வழி அவர்கள்தம் பெயர்கள் கிடைக்கின்றன. இங்கே சில குருமார்களின் பெயர்களும் அவர்களின் சீடர்களின் பெயர்களும் பட்டியலிடப்படுகின்றன.

| வ. எண் | குருக்கள் | சீடர்கள் |
|---|---|---|
| 1 | புத்தர் | மகா காஸ்யபன் |
| 2 | மோக்குரை | டோயோ |
| 3 | ஹாக்குயின் | சூவு |
| 4 | புக்கோ | சியோனோ |
| 5 | மோக்கூசான் | என்கோ |
| 6 | நான் இன் | டென்னோ |
| 7 | உன்ஜான் | கிஸ்ஸீ |
| 8 | குக்கேய் | |
| 9 | இன்சான் | |
| 10 | குக்கேய் | ரயோனின் |
| 11 | இன்சான் | டெயிரோ |
| 12 | ஹாக்கூ | கோயோஜி |
| 13 | பேங்கேய் | காசன் |
| 14 | கூடோ | யமோக்கா |
| 15 | தெக்கிசூ | வென் |
| 16 | டாக்வான் | ஹூ, டெய்கூ |
| 17 | தோக்குசான் | வென், ஹூ |
| 18 | செங்கை | தாங்கென் |
| 19 | சோசன் | சீய |
| 20 | உம்மான் | தோஸன் |
| 21 | ரைட்டான் | டோக்குசான் |
| 22 | செங்காய் | லாங்சூ |

என ஜென் குருக்கள் - சீடர்களின் பட்டியல் தொடர்ந்து செல்கிறது. மேலும் ஒரு குருவிற்கு ஒன்றுக்கும் மேற்பட்ட சீடர்கள் இருந்திருக்கின்றனர். சில சீடர்களுக்கு ஒன்றக்கு மேற்பட்ட குருக்களும் இருந்திருக்கின்றனர் என்பதையும் அறிய முடிகிறது. ஜென் முறையைக் கற்றுக் கொடுக்கும் பள்ளிகள் இன்றும் ஜப்பான், சீனா போன்ற நாடுகளில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன.

“பொதுவாக, ஜென் குருமார்களும் சீடர்களும் வெளியில் வித்தியாசமாகவும் உள்ளே அன்பும் கருணையும் கொண்டுதான் பழகுவார்கள். வெளிப்பார்வைக்குக் குருமார்கள் கடுமையாக இருப்பது போலத்தான் தோன்றும். ஆனால் உண்மையில் அப்படியில்லை. சீடன் ஞான நிலைமை அடைந்துவிட்டான் என்று தெரிந்தால் அவனைத் தனக்குச் சரிநிகர் சமமாகவே குருமார்கள் கருதுவர். அதுவரையில் சீடனைப் பல வழிகளில் தூண்டி, ஞானத்தை அடையச் செய்ய முயற்சி செய்வார்கள்”[75] என ஓஷோ கூறுகிறார்.

“ஒரு ஜென் ஆசிரியர், ஒரு முக்கியமான கேள்விக்கு தவறான பதில் கூறியதால், கடுமையாகத் தண்டிக்கப்பட்டார். காரணம் ஜென் ஆசிரியர்கள் எப்போதும் விழிப்பாகவே இருக்க வேண்டும் என்று அது உணர்த்துகிறது”[76] எனும் கூற்றிலிருந்து குருக்களின் கடமையை எவ்வாறு போற்றி மதித்து செயல்பட வேண்டுமென உணரமுடிகிறது.

இப்படியாகப் பல குருமார்கள் வழியாக வளர்ந்து வந்த ஜென் வளம் பெற்று விளங்கியது. “ஒரு குரு தான் இறக்கும் முன் தனக்கான ஒரு வாரிசை ஜென் வழியில் தேர்ந்தெடுத்துவிட்டு மறைந்தார்”[77] எனும் கூற்றுவழி குருவின் கடமைகளில் ஒன்று தகுந்த, விழிப்புஞானம் பெற்ற சீடனைத் தேர்ந்தெடுத்து

அறிவிப்பதும் ஆகும் என அறியலாம். மேலும், ஜென் பரம்பரையில் சீடன் ஒருவன் குருவான பிறகும் தன்னை ஒரு சீடனாகவே பாவித்துக் கொண்டு, குருவிற்கு மரியாதை செய்வதும், குரு-சீடன் என்ற வேறுபாடு ஜென்னில் இல்லையென குரு விளங்கச் செய்ததும் உண்டு. இதனை,

“மகா காஸ்யபன், காலையிலும், மாலையிலும் புத்தர் இருக்கும் திசை நோக்கி மண்ணில் விழுந்து வணங்கினான். கைகளில் புழுதி படிய, கண்களில் கண்ணீர் வடிய, குரு வணக்கத்தை ஒரு பரவசத்தோடு செய்து வந்தான்.

அதையெலாம் கவனித்த மக்கள், மகா காஸ்யபரே, ‘நீங்களே ஞானகுரு தானே ஏன் இப்படி, இப்போதும் ஒரு சீடனைப் போல குருவணக்கம் செய்கிறீர்கள்?’ என்று கேட்டனர்.

புத்தர் பெருமான்தான் என் குரு. அவர் உயிர் தாங்கி இருக்கும் வரை, நான் அவருடைய சீடன்தான். இப்படிச் சீடனாக இருப்பது அற்புதமான அனுபவம், குருவின் நிழலில் குளிர்ச்சியாக இருப்பது போன்றது இது; குரு போய்விட்ட பிறகு, நானே குருவாகி விடும்போது, வெயிலில் இருப்பது போல ஆகிவிடும் அது; அப்போது எனக்கு நிழல் இல்லை.

‘என்னை தடுக்காதீர்கள். என்னைக் கேள்வி கேட்காதீர்கள். சீடனாக இருப்பது, குருவாக இருப்பதைவிட எந்த விதத்திலும் தாழ்ந்தாகாது. இரண்டிற்கும் வேறுபாடு இல்லை. ஒரு வினாடி நேரம் கூட என்னால் அவரை மறந்து இருக்க முடியாது. அப்படி இருப்பது இருளில் தடுமாறுவது போன்றது. என் வாழ்வில் அவர் ஓர் இனிய பாடலாக வந்தார்; ஓர் ஆடலாக வந்தார்; ஓர் ஒளியாக வந்தார்

என்னைப் புதுப்பிறவி எடுக்க வைத்தவர் அவர்' என்றான் காஸ்யபன்''[78] எனும் ஜென் கதை வாயிலாக அறியமுடிகிறது.

## 2.4.4 வாழ்க்கை முறை

உலகியல் வாழ்வை முற்றிலும் துறந்து சமூகத்தினின்று ஒதுங்கிச் செல்வது ஆன்ம நெறியின் அடிப்படைப் பண்பென கூறமுடியாது. உலகியலைக் கடக்க முயல்கின்ற ஆன்மீகவாதிகள் அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளையும் சமூகச் சிக்கல்களையும் எண்ணிப்பார்க்க மாட்டார்கள் என்று நினைப்பதும் தவறு. ''ஆன்மீகவாதி தனித்ததொரு தீவாக வாழ இயலாது. ஆன்மீகவாதிகளும் சமுதாய அமைப்பில் அங்கத்தினர்கள்தாம்''[79]. அவர்கள் சமூகத்தில் மக்களோடு மக்களாய்தான் வாழ்ந்திருந்தனர்.

சமூகத்தில் காணப்படும் அவலங்களையும் அபத்தங்களையும் சாடிய சித்தர்களை இச்சமூகம் புறக்கணித்தது. ''மெய்ம்மைவாதிகளான அவர்கள் கேவலம் காயசித்தர்கள், சுயநலமிகள், மாந்திரீகர்கள், சித்த சுவாதீனமற்றவர்கள் என்றெல்லாம் நிந்திக்கப்பட்டனர். தூஷிக்கப்பட்டனர். சமூகத்தில் புறக்கணிக்கப்பட்டனர். இவை யாவற்றின் விளைவாகவும் சித்தர்கள் சமுதாயத்திலிருந்து ஒதுங்கியும் ஒதுக்கப்பட்டும் வாழ்ந்தனர்''[80] எனும் கைலாசபதியின் கூற்று சித்தர்கள் சமூகத்தால் புறக்கணிக்கப்பட்டு வாழ்ந்திருந்தனர் எனச் சான்று பகர்கின்றது.

சித்தர்கள் பெரும்பாலும் மனிதர்களற்ற காடுகளிலும் மலைகளிலும் தனித்து வாழ்ந்தனர். ''சித்தர்களின் வாழ்க்கை பிற மக்களின் உலகியல் வாழ்க்கையிலிருந்து வேறுபட்டிருக்கும். தெளிந்த ஞானம் உடைய இச்சித்தர்கள்

உலகியல பற்றுகளை விட்டவர்களாக இருப்பர். இடம், பொழுது பாராமல் எங்கும் பேய்போல் திரிவர்; எதையும் பொருட்படுத்தாமல் பிணம் போல் கிடப்பர்; நாய் போல் அருந்துவர்; நரிபோல் உழல்வர்; பெண்களைத் தாயாக எண்ணுவர்; பிற மக்கள் அனைவரையும் தம் உறவாக எண்ணிப் பரிவு காட்டுவர்''[81] என்று சித்தர்களின் வாழ்வியல் குறித்து சித்தர் தத்துவம் எனும் நூலில் க. நாராயணன் விளக்கமளிக்கிறார்.

ஆனால் ஜென் துறவிகளோ, விழிப்புணர்வு பெற்ற பிறகும் சமூகத்தோடு இயைந்த வாழ்வை மேற்கொண்டிருந்தனர். உடலுழைப்பில் ஈடுபட்டனர். ஆனால் விழிப்புணர்வு ஏற்படுவதற்கு முன்னும் பின்னுமான அவர்களது பார்வையில் வேறுபாடு இருந்தது. இதனை,

''நீங்கள் ஞானம் பெறுவதற்கு முன் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'' என்று ஜென் குரு ஒருவரை ஒருவர் கேட்டார்.

''நான் கட்டில் மரம் வெட்டினேன். விறகு பிளந்தேன். அதை என் எஜமானர் வீட்டிற்கு சுமந்து வந்தேன். அப்புறம் என் எஜமானர் வீட்டிற்குத் தண்ணீர் சுமந்தேன்'' என்றார் குரு.

''இப்போது, ஞானம் பெற்ற பின், என்ன செய்து வருகிறீர்கள்?'' என்று கேட்டார் அவர்.

''மரம் வெட்டுகிறேன். தண்ணீர் சுமக்கிறேன். அதே வேலைதான்'' என்றார் குரு.

கேட்டவருக்கு வியப்பு.

“முன்பும் அதே செய்தீர்கள். ஞானம் பெற்ற பின்பும் அதே செய்கிறீர்கள் என்ன வித்தியாசம்?

குரு சிரித்தார்.

“வித்தியாசம் இருக்கிறது. அது எல்லையில்லாதது! முதலில் நான் ஒரு பிரக்ஞையும் இல்லாமல் மரம் வெட்டினேன். என்னைச் சுற்றி என்ன இருக்கிறது என்பதை நான் ஒரு நாளும் கவனிக்கவில்லை. இப்போதும் அதே வேலை செய்தாலும் நான் அதே ஆள் அல்ல. என் பார்வை பழைய பார்வை அல்ல. என் இதயத்துடிப்பு கூட மாறிவிட்டது. எல்லாவற்றிலும் ஓர் ஒத்திசைவு இருப்பதை நான் உணர்கிறேன்”[82] என்ற கதையின் வழியாக அறியமுடிகிறது.

ஜென் துறவிகளைப் பற்றிப் பார்க்கும்போது அவர்களில் சிலர் பிச்சையேற்று வாழ்ந்ததாகத் தெரிகிறது. இதனை, “வென்னும் ஹீவும் அரிசிக்காகப் பிச்சையெடுத்துக் கொண்டு ஒரு கிராமத்தின் வழியாகச் சென்றார்கள்”[83] என்பதன் வழி அறிய முடிகிறது. ஆனால் பல ஜென் துறவிகள் பிச்சையேற்று வாழ்வது அவமானம் எனக் கருதி சாமானியர்களைப் போலத் தோட்டக்கலை, தச்சுப் பணிகளிலும் ஈடுபட்டிருந்ததாக அறியமுடிகிறது. இது பற்றிய ஓஷோவின் விளக்கம், “அந்தக்காலத்து சந்நியாசிகளைப் போல, சந்நியாசிகள் பிச்சையெடுப்பதை நான் ஒருபோதும் விரும்பியதில்லை. உங்களுடைய உலக வாழ்க்கை தாமரை இலைத் தண்ணீர் போல ஒட்டியும் ஒட்டாமலும் பட்டும் படாமலும் இருக்கட்டும்”[84] என்பதாகும்.

ஜென் துறவிகள்

புத்தம் (தெளிவு)

தர்மம் (ஆச்சாரம்)

சங்கம் (தூய்மை)

என்கிற மூன்று பிரமாணங்களை எடுக்கிறார்கள். இவர்கள் நெறியான வாழ்க்கைக்குத் தங்களை அர்ப்பணிக்கிறார்கள்''[85]. மேலும் ''ஜென் பயிலுகிறவர்கள் கூடவே ஏதாவது ஒரு கலையும் பயிலும்படி இருக்கும் (தேயிலை தயாரிப்பது, தோட்டக்கலை, போர்க்கலை, ஓவியம், கவிதை, நாடகம், பூக்களை அடுக்கும் கலை) இப்படி''[86] என்பதன் வாயிலாகவும் அறியலாம். இதற்கு வலுச் சேர்க்கும் வகையில், ''இவர்கள் துறவிகளானாலும் அன்றாட உடலுழைப்பைத் தவிர்க்க இயலாது''[87] என்ற வரிகள் அமைந்திருக்கின்றன.

### 2.4.5. காலம்

சித்தர் பெருமக்கள் பல்வேறு காலங்களில் பல்வேறு நாடுகளில் உலகம் முழுவதும் வாழ்ந்துகொண்டுதான் இருக்கிறார்கள். உலகின் மற்ற பகுதிகளை விட நம் நாட்டில்தான் ஏராளமான சித்தர்கள் வாழ்ந்ததாகவும், அவர்களின் பரம்பரை அற்றுப்போகாமல் தொடர்ந்து தமிழ்நாட்டில் வளர்ந்து வந்ததாகவும் கூறப்படுகின்றது.

மகாகவி பாரதி கூட,

*''எனக்கு முன்னே சித்தர்பலர் இருந்தாரப்பா*
*யானும் வந்தேன்ஒரு சித்தன் - இந்த நாட்டில்''*

எனத் தம்மையும் ஒரு சித்தன் என்றே குறிப்பிடுகிறார்.

“பலகாலம் உலகிடை வாழ்ந்து அரிய பாடல்களை இயற்றிய சித்தர்களின் பிறப்பு, வளர்ப்பு, பழைய பெயர், பிறந்து வளர்ந்த காலம் இவற்றில் எதுவும் அறியப்படாமலேயே போய்விட்டன”[88] என்கிறார் அ.ச. ஞானசம்பந்தன். ஆனாலும் அறுதியிட்டுக் கூற இயலவில்லை. எனினும் அறிஞர்கள் சித்தர்களின் காலமாகச் சில ஊகங்களைத் தெரிவிக்கின்றனர். அதன் துணைகொண்டு சித்தர்களின் காலத்தை ஓரளவேனும் அறியலாம்.

தமிழ்நாட்டில் திருமூலரிலிருந்து சித்தர் பரம்பரை வளர்ந்து செல்கிறது. சித்தர் என்போர் சிவ வடிவினர் என்றும் அதனால் சித்த மரபு சிவனிடம் இருந்தே தோன்றியதென்றும் ஒரு பொது வழக்குண்டு. “சமணரும் அருகதேவனை, ‘சித்த பரமேட்டி’ எனும் சொல்லால் வழங்குவாராம். கி.மு. 200க்கு முற்பட்ட பதஞ்சலி என்பவர் யோகம், மருத்துவம், இரசவாதம் போன்ற நூல்களை இயற்றியிருப்பதும் எண்ணத்தக்கது. இவரையடுத்து தென்னகத்தில் தோன்றிய நாகார்ச்சுனர் (கி.பி.2) என்ற பௌத்த குரு சித்தராய் திகழ்ந்தார் என்று கூறுவர். இரசவாதம், யோகம் போன்றவை இவரால் பல நாடுகளுக்கும் பரவியது. இமய மலையைச் சேர்ந்த நவநாத சித்தர்கள் கி.பி. 2ஆம் நூற்றாண்டினர் என்பர்”[89] என்று தமது நூலில் அருணாச்சாலக் கவுண்டர் குறிப்பிடுகிறார்.

திருமூலரின் காலத்தை ஐந்தாம் நூற்றாண்டு என்பர். இதன் முன்னரும் பலர் வாழ்ந்திருக்கலாம். ஆனால் சித்தர் பரம்பரை திருமூலரிலிருந்துதான் தோன்றியதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சித்தர்களின் காலம் பற்றிக் கூறுகையில், “கி.பி. 14ஆம் நூற்றாண்டென திரு. இராதாகிருட்டிணப்பிள்ளையும் கி.பி. 15ஆம் நூற்றாண்டென அறிஞர் தெ.பொ.மீயும், கி.பி. 16,17 என நீலகண்ட

சாத்திரி, ஹண்டர், டாக்டர் கால்டுவெல் போன்றோரும் கூறுகின்றனர். கி.பி. 5 முதல் 10ஆம் நூற்றாண்டு வரை வெவ்வேறு காலங்களில் தோன்றினர் என்பர் ஆய்வாளர்கள்''[90] என வே. இரா. மாதவன் குறிப்பிடுகிறார்.

இறையைத் தம்முள் கொண்ட, கண்ட சித்தர்களை 'இக்காலத்தினர்' என்று வரையறுப்பது எளிய செயலன்று. அவர்கள் பலநூறு வருடங்கள் வாழ்ந்ததாகவும் கூறப்படுகின்றது. அவர்களின் காயகல்பம், அட்டமா சித்திகள்(விரிவாக பின்னிணைப்பில்) வழி இறப்பைத் தள்ளிப் போட்டனரே அன்றி தவிர்க்கவில்லை என்பதையும் நினைவுகூர வேண்டும்.

சித்தர்களைப் பற்றிய உண்மைகளைத் தெரிந்து கொண்டவர்களைத் தவிர பிறருக்கு இது வேடிக்கையாகத்தான் தோன்றும். ஆனாலும் எல்லையற்ற ஆற்றலைப் பெற்ற சித்தர்களில் பலர் இன்னும் இருக்கின்றனர் என்பது உலகோர் நம்பிக்கை.

ஜென் காலக்கட்டம் பற்றிப் பார்க்கும்போது, இந்தியாவிலிருந்து சீனாவிற்குப் புத்த மதத்தின் 'லங்காவதார சூத்திர' உண்மைகளைப் போதிக்கச் சென்ற போதிதர்மாவிடமிருந்து தொடங்கியது என்று கூறலாம். இதனை, ''சீனாவில் ஜென் தோன்றிய காலத்தைச் சரியாகக் கணக்கிட முடியாதென்றாலும் அது இந்தியாவிருந்து புத்த மதத்தைச் சீனாவுக்குள் பரப்பச் சென்ற புத்தரின் 28வது பிரச்சார சீடராக இருந்த போதிதருமரின் காலத்திற்கு (கி.பி.520) பின்னர்தான் இருக்க வேண்டும் என்று வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்''[91] என்ற கூற்றுவழி அறியலாம்.

“பல குருமார்கள் வழியாக வளர்ந்து வந்த ஜென் கி.பி. 700 முதல் கி.பி. 906 வரை தாங் சாம்ராஜ்யத்தில் வளம் பெற்றுத் திகழ்ந்தது”[92] என்றும் கூறப்படுகிறது. ஜென் தோன்றியது சீனா என்றாலும் அது வளர்ந்து செழித்திருப்பது ஜப்பானில்தான். இதனை, “சீனாவில் இருந்து ஜப்பானுக்கு கி.பி. 1191 முதல் கி.பி. 1227க்குள் அறிமுகமான ஜென், ஜப்பான் மக்களின் அரசியல் மற்றும் சமூக சூழ்நிலைகளுக்கு ஏற்றதாக அமையவே அந்த மக்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இவர்கள் முதலில் ஜென் முறைகளை ‘சாமுராய்’ எனப்படும் தன்னலம் கருதாப் போர் வீரர்களை உருவாக்கப் பயன்படுத்தினர்”[93] என்பதன் வழி அறியலாம் ஆனால் இன்று ஜப்பானியர்களின் வாழ்வில் இரண்டறக் கலந்துவிட்டது என்றுதான் கூற வேண்டும். “தினந்தோறும் பல இயற்கை அழிவுகளைச் சமாளித்துக் கொண்டு ஜப்பானியர்கள் இன்று செய்துவரும் சாதனைக்கு ஜென் வழியில் பண்பட்ட அவர்களின் சிந்தனையே காரணம் என்பது மறுக்கமுடியாத உண்மை”[94] எனும் கூற்றின் வழிப் புலனாகும் உண்மையை ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது.

### 2.4.6 பொய்மைச் சித்தர்களும் ஞானம் பெறா ஜென் துறவிகளும்

உலகத்துப் படைப்புகள் அனைத்தும் பார்ப்பதற்கு ஒன்று போலத் தோன்றினாலும் வெவ்வேறானவை. அவை ஒரே மாதிரியாக இருப்பதில்லை. இயற்கையைப் பொறுத்தவரையில் அசல், நகல் என்ற பிரிவே கிடையாது. எல்லாம் அசல் மட்டுமே. ஒரு மரத்தின் பல்லாயிரக்கணக்கான இலைகளும் பார்ப்பதற்கு ஒன்று போலக் காட்சியளித்தாலும் அவற்றை ஆழமாகப் பார்த்தால் ஏதாவது ஒரு வித்தியாசம் அவைகளில் இருக்கும். அதைப் போலத்தான் மனிதர்களும் மிருகங்களும் என்பார் ஓஷோ. உருவத்தில் மட்டுமல்ல சிந்தனையாற்றலிலும்,

செயலாக்கத் திறனிலும் மனிதர்கள் அனைவரும் ஒருவருக்கொருவர் வேறுபட்டவரே. ஆனால் சிலர் பிறரைப் போல வேடம் புரிதல் வாழ்வில் ஒருபோதும் வெற்றியைத் தேடித் தராது.

சித்தர்களும் ஜென் துறவிகளும் அறிவிற் சிறந்தோர், ஞானம் பெற்றோர் ஆவர். அவர்களைப் போலப் புறவேடம் பூண்டு திரியும் நபர்களை அடையாளங் காணத் தெரிந்திருக்க வேண்டும். ஏனெனில் சிந்தை பிறழ்ந்த நிலையில் வீதிகளில் இயல்புக்கு மாறாகத் திரியும் பித்தர்களின் தோற்றமும், எல்லை மீறிக் கள் குடித்த சிலரின் நிலையும் சித்தர்களைப் பற்றி மரபாகத் தரப்படுகின்ற வருணனை போன்று அமைகின்றன. இதனைப் பற்றிக் கூறுமுன்னர் சித்தர்களின் புறத்தோற்றம் பற்றிய அறிமுகம் தருவது பொருத்தமாகவும், பயனுள்ளதாகவும் அமையும்.

### 2.4.6.1 புறத்தோற்றம்

நடை, உடை, பாவனைகளால் பிற மக்களிடமிருந்து சித்தர்கள் வேறுபட்டிருந்தனர். நம் நாட்டு சித்தர்கள் பலரும் தலையில் சடைமுடியும் முகத்தில் நீண்ட தாடியும், கந்தலாடையும், கழுவா மேனியும் தாங்கியவர்களாகவே காணப்படுகின்றனர்.

*“உடைக் கோவணம் உண்டு*
*உறங்கப்புறத் திண்ணையுண்டு உணவிற்கு*
*அடைக்காய் இலையுண்டு*
*அருந்தத் தண்ணீருண்டு அருந்துணைக்கே”*[95].

என்ற பாடலும், இப்பொருளிலமைந்த,

*"ஆறுண்டு; தோப்புண்டு; அணிவீதி அம்பலம் தானுண்டு;*
*நீறுண்டு; கந்தை நெடுங் கோவணம் உண்டு;*
*நித்தம் நித்தம்*
*மாறுண்டு உலாவி மயங்கும் நெஞ்சே!*
*மனைதொறும் சென்று,*
*சோறுண்டு தூங்கிப்பின் சும்மா இருக்கச் சுகமும் உண்டே"*
*"வடுக்கக் கவிக்கக் குளிர்காற்று; வெய்யில் ஒடுங்கி வந்தால்*
*தடுக்கப் பழையஒரு வேட்டியுண்டு; சகம் முழுதும் வந்தால்*
*படுக்கப் புறத்திண்ணை எங்கெங்கும் உண்டு, பசித்து வந்தால்*
*கொடுக்கச் சிவனுண்டு; நெஞ்சே! நமக்குக் குறைவில்லை"[96].*

போன்ற பட்டினத்துச் சித்தரின் பாடல்களின் வழிச் சித்தர்கள் மேற்கொண்ட எளிமையான புறவாழ்க்கையை அறிய முடிகிறது. சித்தர்களின் வாழ்க்கை முறை, உலகியலுக்கு மாறாக இருக்கிறது என்பதும் இப்பாடல்களின் வழிப் புலனாகிறது. மரபாகக் காட்டப்பெறுகின்ற சித்தர்களின் புறத்தோற்றத்திற்கு மாறானதொரு தோற்றம் இராமலிங்க சுவாமிகளிடம் காணப்படுகிறது. தூய உடலும், அவ்வுடலை மூடிய வெண்ணிற ஆடையும், எல்லோருடனும் இயல்பாகப் பேசிப் பழகி இருந்து வாழ்ந்த தன்மையும் உடையவராகத்தான் வாழ்ந்தார் என்பதை, "இராமலிங்கர் முகமும் முன்னங்கைகளும் மட்டும் தெரிகின்ற வகையில் முக்காடிட்டவாறு துவராடை அணிந்து வந்தார். தமிழகப் பக்தி மரபில் யாரும் அத்தகைய உடையமைப்பை முன்னர் பெற்றிருக்கவில்லை"[97] என மலர்விழி மங்கையர்க்கரசி குறிப்பிடுகின்றார் (பின்னிணைப்பு - இராமலிங்கர் படம்) ஜென் குருமார்களுக் கென்று தனியாக எவ்விதமான ஆடைக் கட்டுப்பாடுகளும் இல்லை எனலாம். ஆனால், கடுமையானவர்களாய்த் தம்மைக் காட்டிக் கொள்பவர்கள் ஜென்

துறவிகள் என்கிறார் ஓஷோ. இதனை, “பொதுவாக ஜென் குருமார்களும், சீடர்களும் வெளியில் வித்தியாசமாகவும் உள்ளே அன்பும் கருணையும் கொண்டு தான் பழகுவார்கள். வெளிப்பார்வைக்குக் குருமார்கள் கடுமையாக இருப்பது போலத்தான் தோன்றும். ஆனால், உண்மையில் அப்படி இல்லை”[98] என்பதன் வழியறியலாம்.

### 2.4.6.2 பொய்மைச் சித்தர்கள்

புறவேடம் புனைந்து கொண்டு சித்தர் எனச் சொல்லித் திரியும் பொய்யர்கள் எல்லாக் காலத்தும் இருக்கின்றனர். உண்மைச் சித்தர்கள் தங்கள் பாடல்களின் வழிப் பொய்யர்களை அடையாளங் காட்டி எச்சரிக்கின்றனர். பொய்மைச் சித்தர்களைப் பற்றிக் கூறும் வான்மீகர்,

“*தானென்ற வுலகத்தில் சிற்சில வோர்கள்*
*சடை புலித்தோல் காசாயம் தாவடம் பூண்டு*
*ஊனென்ற வுடம்பெல்லாம் சாம்பல் பூசி*
*உலகத்தில் யோகியென்பார் ஞானியென்பார்*
*தேனென்ற சிவபூசை தீட்சை யென்பார்*
*திருமாலைக் கண்ணாலே கண்டோ மென்பார்*
*காரணத்தை யறியாமல் கதறுவாரே*”[99]

என்று பாடுகிறார். மேலும்,

“*விரிவான வேடமிட்டு காவிபூண்டு*
*வெறும்பிலுக்காய் அலைந்திருவான் நாயைப் போலே*
*பரியாச மாகவுந்தான் தண்டு மேந்திப்*
*பார்தனிலே குருடிட்டு நடப்பாரென் பாரே*”.

*"பாரப்பா சீடர்களை அழைப்பான் பாவி*
*பணம் பறிக்க வுபதேசம் பகர்வோ மென்பான்*
*ஆரப்பா பிரமநிலை காட்ட மாற்றான்*
*ஆகாசப் பொய்களையு மவன்தான் சொல்வான்"[100].*

என்ற காகபுசுண்டரின் பாடல்களும் போலிச் சித்தர்களின் தன்மையைச் சுட்டுகிறது.

'மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை எனும் மூவாசைகளையும் உலகப்பற்று, பாசங்களையும் விடுங்கள்' என ஊருக்கு உபதேசம் செய்துவிட்டு, பொன்னையும் பொருளையும் மலையெனக் குவித்துக்கொண்டு போதை, பெண்ணின்பம் எனக் காமக் களியாட்ட வாழ்க்கை நடத்துவோர் பொருள் சேர்க்கவும் அழுக்கு நிறைந்த தமது அந்தரங்க வாழ்வைத் திரை போட்டு மறைத்துக் கொள்ளவும் 'சித்தர்' எனும் போர்வைக்குள் புகுந்து கொள்கின்றனர். அப்பாவி மக்களின் அறியாமையைக் கேடயமாகக் கொண்டு குளிர்காய்கின்றனர். எனவே, சித்தர்களைப் புறவோடங் கொண்டு முடிவு செய்தல் கருத்தளவும் தவறானது மட்டுமன்றிச் சமூக அளவிலும் பெருந்தீங்காய் முடியும் என்றே கூறவேண்டும்.

### 2.4.6.3 ஞானம் பெறா ஜென் துறவிகள்

ஜென் என்பது வாழ்க்கை நெறியல்ல, அதுவே வாழ்க்கை. அது கடவுளை வெளியே தேடுவதில்லை. அதுவே கடவுளாகிறது. ஜென்னில் தியானம் என்று தனியாக எதுவுமில்லை. இருந்தாலும் நடந்தாலும் உண்டாலும், உறங்கினாலும் எல்லாமே தியானமாகத்தான் கருதப்படும். ஒரு குருவிடம் ஞானம் பெற்ற சீடன்

குருவாகிப் போதிக்கத் தொடங்குவான். ஆனால், ஞானம் அடைய இத்தனை நாட்கள், மாதங்கள், வருடங்கள் ஆகும் என யாராலும் கூறமுடியாது. ஏன் குருவால் கூட முடியாது.

ஞானம் என்பது சட்டென ஒரு நொடியில் ஏற்படும் என்றாலும் அதற்கான தயாரிப்புடன் ஒருவர் இருக்க வேண்டும். இதனை,

‘‘சந்நியாசினி சியோனோ ஜென்குரு புக்கோவிடம் ஜென்னைப் பற்றிப் படிக்கும்பொழுது நீண்ட நாட்கள் தியானத்தில் ஈடுபட்டும், அதன் முடிவான பலனை அடைய முடியவில்லை.

கடைசியில் ஒரு முழு நிலவு இரவில் ஒரு பழைய மூங்கிலால் பின்னப்பட்ட தூக்கியின் மூலமாக அவள் நீரை நிரப்பித் தூக்கிக்கொண்டு வரும்பொழுது அதன் அடிப்பாகம் விரிசல் கண்டு கீழே விழ அவள் விடுதலை அடைந்தாள் என்றொரு நிகழ்வு ஜென் கதையாக் கூறப்படுகிறது. இதற்கு விளக்கம் தரும் ஓஷோ, ‘‘மனம் ஒரு கண்ணாடிதான். ஆகவே அவரவருடைய கருத்துக்கு ஏற்ப அது இந்த உலகத்தைப் பலவிதமாகப் பிரதிபலித்துக் காட்டுகிறது. மனமற்ற நிலை என்பது திடீர் என்று ஏற்படக்கூடாது. எப்படி நீர் 100 டிகிரியில் திடீர் என்று கொதிக்க ஆரம்பிக்கிறதோ அப்படி’’[101] என்று கூறுகிறார்.

இது போன்று அல்லாமல், ஞான விழிப்புப் பெறாத சிலரும் தம்மை ஒரு குருவாக பிரகடனப்படுத்திக் கொள்வதும் உண்டு. இதனை, ‘‘நான் பொருள் வசதியினடிப்படையில் மனிதர்களைத் தேர்வு செய்வதில்லை. அவர்களுடைய கண்டுணரும் திறனைக் கருத்தில் கொள்கிறேன். அப்படியிருந்தால் ஒரு கோடைகாலத்தை அல்லது குளிர்காலத்தை அவர்களுடன் கழிப்பேன். அவர்கள்

அருவருக்கத்தக்க மனம் உடையவர்களாயின் இரண்டு, மூன்று நாட்களிலேயே புறப்பட்டு விடுவேன். நான் அறுபதுக்கும் மேற்பட்ட ஆசான்களைச் சந்தித்திருக்கிறேன். அவர்களில் 2, 3 பேர்தாம் சிறப்பான கண்டுணரும் திறனுடையவர்கள் மற்றவர்கள் உண்மையிலேயே மெய்யறிவு உடையவர்களா என்பது சந்தேகந்தான். அவர்களுக்குத் தேவை உங்களுடைய நன் கொடைகள்"[102] என்கிறார் தா.சூய் (Ta-Sui).

மேலும் ஜென்னைப் புரிந்துகொள்வது கடினமானது என்று பழக்கப்பட்டுப் போனதாலும், அதைத் தவறாகப் புரிந்துகொள்வதாலும் அதன் உள்ளார்ந்த உண்மையை அறியத் தவறிவிடுவோம். இதனைக் காரணங்காட்டி ஞானம் பெறாதவர்கள் கூடத் தம்மைக் குருவாகக் காட்டிக்கொண்டு போதிக்கத் தொடங்கிவிடுகின்றனர் என்றும் அறியமுடிகிறது. இதற்குச் சான்றாக உன்.ஃபெங் (Yun-Feng) என்னும் குருவின்,

'சமீப காலத்திய ஜென் குருமார்கள் அடுத்தவரால் சொல்லப்பட்டவைகளில் அக்கறை காட்டாதீர்கள்' என்று சொல்லியே புகழ் பெற்றிருக்கிறார்கள். இதனை 'ஒலி மற்றும் வடிவத்தைக் கடந்து செல்வது' என்று அவர்கள் அழைக்கிறார்கள். நீங்கள் கிழக்கைப் பற்றிக் கேட்டால் மேற்கைப் பற்றிச் சொல்வார்கள். இந்தக் கோணலான அறிதலின் மூலம் ஜென் போதனையை அவர்கள் குழப்பிவிட்டார்கள். சிதைத்துவிட்டார்கள் என்றே சொல்ல வேண்டும். இளைய தலைமுறைகளை முட்டாளாக்கி ஏமாற்றுகிறார்கள் என்றும் சொல்லலாம்" என்று அமைகிறது.

இதே கருத்தை அடியொற்றி அமைந்த ஜென் கதை,

''அறிவியல் மேதாவி என்று பெயர் பெற்ற.... ஜென் குரு ஒருவர் இருந்தார்.

ஆனால், ஆள் போலி மோசடிக்காரர். தன்னடைய பேரும், புகழும் பரவ வாக்குச் சாதுரியம் மிக்க இரு துறவிகளைத் தன்கூட வைத்திருந்தார்.

குரு வாயே திறக்க மாட்டார்! 'மௌனகுரு' என்று எல்லாரும் கருதும்படியாக, வேஷம் போட்டு வந்தார் அவர். அவருடைய ஜென், 'மௌன ஜென்' என்று சொல்லப்பட்டது.

ஒருநாள் அவர் தனியே இருந்தபோது, ஒருவர் அரை சந்தித்தார். உதவியாளர்கள் இருவரும் அப்போது அங்கே இல்லை. ''குருவே, புத்தர் என்றால் என்ன?'' என்று கேட்டார், வந்தவர்.

குருவுக்கு ஒன்றுமே தெரியவில்லை, திருதிருவென்று விழித்தார். உதவிக்கு யாராவது கிடைக்கமாட்டார்களா என்று சுற்றும் முற்றும் பார்த்தார்.

அதைக் கவனித்த அந்த மனிதர், மௌன மொழியைப் புரிந்து கொண்டவர் போல, ''தர்மம் என்றால் என்ன, சுவாமி?'' என்று கேட்டார்.

குரு என்ன செய்வார்? நிலைமை இப்படியாகிவிட்டதே! பெரிய இக்கட்டில் மாட்டிக் கொண்டோமே! என்று விட்டத்தைப் பார்த்தார். பிறகு தரையைப் பார்த்தபடி குனிந்தவாறு அமர்ந்துவிட்டார்.

அடுத்ததாக ஒரு கேள்வி பிறந்தது.

''ஜென் என்றால் என்ன?''

என்ன செய்வார் குரு! இப்படி வசமாக மாட்டிக் கொண்டோமே என்று கண்களைக் மூடிக் கொண்டார்.

கடைசியாக, வந்தவர் கேட்டார்.

‘‘ஆசீர்வாதம் என்பது என்ன?’’

‘எனக்கு ஒன்றுமே தெரியாது’ என்கிற பாவனையில் இரு கைகளையும் விரித்துக் காட்டினார் மௌனகுரு!.

அவர் மிகவும் மகிழ்ச்சியும், மனநிறைவும் பெற்றவராய்ப் புறப்பட்டார்.

வழியில், மௌன ஜென் குருவின் உதவியாளர்கள் இருவரையும் எதிர்பாராமல் சந்தித்தார். என்ன நடந்தது என்பதை அவர்களிடம் விரிவாகச் சொன்னார் அவர். அதோடு, ‘‘எவ்வளவு பெரிய மகாஞானி அவர்’’, என்றும் புகழ்ந்தார்.

‘‘எப்படி?’’ என்று கேட்டார்கள், உதவியாளர்கள். அவர் சொன்னார்:

‘‘புத்தர் என்றால் என்ன என்ன கேட்டேன். அதற்கு அவர் அப்படியும் இப்படியும் பார்த்தார். ‘மக்கள் புத்தரை இங்கும் அங்கும் தேடுகிறார்கள். உண்மையில் அவரை இங்கும் அங்கும் தேடிக் காணமுடியாது’’ என்பதை அவர் உணர்த்துகிறார் என்பதை நான் புரிந்து கொண்டேன்.

‘அதன்பிறகு, தர்மம் என்றால் என்ன?’ என்று கேட்டேன். அவர் மேலும் கீழும் பார்த்து, தர்மம் சமமானது, அதில் உயர்வு தாழ்வு இல்லை என்பதை உணர்த்தினார்.

‘பிறகு, ஜென் என்றால் என்னவென்று கேட்டேன், கண் மூடிக் காணும் அற்புதம் என்பதைத் தம் கண்களை மூடியதன் மூலம் உணர்த்தினார்.

‘கடைசியாக, ஆசிர்வதிக்கப்படுவது பற்றிக் கேட்டேன். கைகள் நீட்டி, உதவுவது என்பதை இருகை விரித்து உணர்த்தினார். எவ்வளவு பெரிய மகான் அவர்!’

‘மடப் பசங்களா! எங்கே போய்த் தொலைந்தீர்கள்? நான் ஓர் ஆளிடம் மாட்டிக் கொண்டு, ஒன்றும் தெரியாமல் படாத பாடு பட்டுவிட்டேன்’ என்றார்!

இப்படித்தான் மிக அற்பமான பெரிய மனிதர்களின் புறவேடங்களில மயங்கி, அவர்கள் மொழிகளில் பெரிய தத்துவங்கள் இருப்பதாக நாம் கற்பித்தும் கொள்கிறோம்.

உண்மையில் அந்தத் தத்துவங்கள், அந்த ஞானிகளுடையவை அல்ல; நம்முடையவையே. நம்மை நாம் அடையாளம் கண்டு கொள்வதில்லை. அவ்வளவுதான்”![103].

## 2.4.6.4 அகநிலையும் சித்தாடலும்

உள்ளத்தில் நிகழும் மாற்றங்களாலும், உள்ளத்தே ஊறும் உணர்வுகளின் சிறப்பாலும் புறத்தோற்றங்களில் மாறுபாடுகள் இருக்கலாம். ஆனால் புறத்தோற்றத்தை மட்டும் கொண்டு ஒருவரின் அகநிலைய அனுமானிப்பது பெரும்பாலும் தவறாகிவிடக் கூடும். புறத்தோற்றம் என்பது உண்மையான வெளிப்பாடாக அமைவதில்லை. அதனால் சித்தர்கள் மற்றும் ஜென் துறவிகளின் அகநிலை பற்றி ஆய்வதும் அறிவின் பாற்பட்ட செயலாகும்.

உலகியலில் இருந்தாலும் சித்தர்களின் மனம் பற்றுக்களின் தாக்கத்தால் அதிர்வதில்லை. இக்கருத்தினை,

*"வம்படிக்கும் மாதருடன் வாழ்ந்தாலும் மன்னுபுளி*
*யம்பழமும் ஓடும்போல் ஆவதினி எக்காலம்*
*பற்றற்று நீரில் படர்தாமரை இலைபோல்*
*சுற்றத்தை நீக்கி மனம்தூர நிற்பது அக்காலம்"*[104].

என்ற பத்ரகிரியாரின் மெய்ஞானப் புலம்பல் வெளிப்படுத்துகிறது.

உண்மைச் சித்தர்களை அடையாளம் காண வழி கூறும் சிவவாக்கியர் உடல் தூய்மையை விட மனத்தூய்மையே மனிதனுக்கு மிகவும் வேண்டப்படுவது என்கிறார். சித்தத்தின் பண்பட்ட நிலைக்கேற்பவே ஒரு மனிதனின் சிந்தனையும் செயலும் அமையும். எனவே சித்தர்களுக்குச் சித்த ஒருமைப்பாடு உயிர் மூச்சு ஆகும்.

*"சிந்தை தெளிந் திருப்பா னவனே சித்தன்*
*செகமெல்லாஞ் சிவமென்றல் யறிந்தோன் சித்தன்"*[105].

எனும் வான்மீகர் சூத்திரமும் மேற்கூறிய கருத்திலேயே அமைந்திருக்கின்றது. எனவே தெளிந்த சித்தமும், அச்சித்தத்தில் இறையுணர்வும் சித்தர்களின் அகநிலையைப் புலப்படுத்தும் எனலாம்.

ஜென் துறவிகள் பற்றிக் கூறும்போது அவர்கள் நேற்று, நாளை என்று சிந்திப்பதே இல்லை. 'இன்று', இன்னும் தெளிவாகச் சொன்னால், 'இந்தக் கணம்' என்ற சுய பிரக்ஞையுடன் வாழ்கின்றனர். இவர்கள், ஜென் போதித்தாலும்

சாதாரண வாழ்க்கையையே மேற்கொண்டனர். இவர்கள் தமக்கென எதையும் விரும்புவதும் இல்லை; ஏற்க மறுப்பதும் இல்லை.

“சாதாரண வாழ்க்கையை அசாதாரண அறிவோடும் சிறந்த அறிவிலான விழிப்புணர்வோடும் அவர்கள் வாழ்கிறார்கள்”[106] என்று கூறுவர். மேலும் அவர்களும் சித்தர்களைப் போலவே சமூகத்தில் தாமரை இலைத் தண்ணீர் போல நிறமற்றவர்களாய் வாழ்கின்றனர். இதனை, “தாமரை இலையில் இருக்கும் பனித்துளி தானும் பச்சையாகி விடுவதில்லை. ஆனால் பார்ப்பதற்குப் பச்சையாகத் தெரியும். தாமரை இலைபோன்று ஜென் வழி வாழ்வோர் மற்றவர்களைப் போல் பெண்டாட்டி, பிள்ளை என வாழ்ந்தாலும் நிறமற்றவர்களாக வாழ்கிறார்கள். நிறமற்றிருப்பது பனித்துளியின் தனித்தன்மை. நாம் எந்தவொரு நிலையிலும் எந்தவொரு இடத்திலும் நம் தனித்தன்மையை இழந்து விடக்கூடாது”[107] என்பதன் வழி அறிய முடிகிறது.

இயற்கைக்கு அப்பாற்பட்ட செயலை ‘சித்தி’ என்பர். ஆன்மப்பாதையில் பயணிப்போர் அடையும் பேறுகளுள் சித்து கைவரப் பெறுதலும் ஒன்று. சித்தாடல் எனும் நிகழ்ச்சி சித்தர்களின் வாழ்க்கையில் பரவலாகக் காணப்படுகின்றது. சித்தர்கள் அனைவருமே சித்தாடும் திறன் உடையவர்களாய் இருந்தபோதிலும் சிலர் அத்திறனை வெளிப்படுத்தவும், சிலர் வெளிப்படுத்தாமலும் அல்லது வெளிப்படுத்தியதற்கான குறிப்புகள் இல்லாமலும் இருந்திருக்கின்றனர்.

சித்தர்கள் வாழ்வில் நிகழ்ந்ததாகவும் சித்தர்கள் நிகழ்த்தியதாகவும் கூறப்படும் சித்துக்கள் எனும் அற்புத நிகழ்வுகள் பற்றிய செய்திகள் யாவும் செவிவழிச் செய்திகளாகவும், அவற்றின் குறிப்புகளாகவும் கிடைக்கினற்ன.

"பட்டினத்தார், இடைக்காடர், கோரக்கர், காலங்கி நாதரின் மாணவரான போகர், மச்சேந்திரர் போன்ற சித்தர்களின் வாழ்வில் சித்தாடல் நிகழ்ச்சிகள் நடைபெற்றதாகக் கூறப்படுகின்றது"[108]. (பின்னிணைப்பில் விரிவாக) அவற்றை வரலாற்றுச் சான்றுகளாக ஏற்க இயலவில்லை. எனினும் பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து சொல்லப்பட்டு வரும் இச்செய்திகளில் ஓரளவேனும் உண்மை இருக்கக் கூடும் என நம்பலாம்.

சித்தர்களின் சித்தாடும் வல்லமை பற்றி சித்தர்களுள் ஒருவரான பாம்பாட்டிச் சித்தர், "கட்டுக்கடங்காத பாம்பைக் கட்டுவோம்; இந்திரன் உலகை இங்கே காட்டுவோம்; தூணைத் துரும்பாகவும், துரும்பைத் தூணாகவும் ஆக்குவோம்; கடலைக் குடிப்போம்; மண்டலங்களைக் கையால் மறைப்போம்; வானத்து வில்லை வளைப்போம்; நெருப்புக்குள் மூழ்கி விடுவோம்; நீருக்குள் மூச்சை அடக்குவோம்; வன்புலியைத் தாக்குவோம்; இப்பெரும் உலகை இல்லாமல் செய்வோம்; செங்கதிரைத் தண்கதிராய் மாற்றுவோம்; பிரம்மாதி தேவர்களை ஏவல் செய்யச் செய்வோம் ; படைக்கும் தொழில் செய்குவோம் ; கலைகள் யாவும் அறிவோம்; நாதனுடன் சமமாக வாழ்வோம்"[109] என பதினைந்து பாடல்களில் தம்மைப் போன்ற சித்தர்களின் வல்லமையைப் பற்றிக் கூறுகிறார்.

இடைவிடா யோகப் பயிற்சியினால் சித்துக்கள் கைவரப் பெறலாம் என யோக இலக்கியங்கள் கூறுகின்றன. ஆன்மீகப் பயணத்தின் இடையிடையே கிடைக்கும் நற்பேறுகளே 'சித்தி' ஆகும். வள்ளலார் சித்திகளைக் கரும, யோக, ஞானம் என முப்பிரிவுகளாக்கிக் கூறுகிறார். யோக இலக்கியங்களும் சித்தர் இலக்கியங்களும் சித்திகளை 'அட்டமா சித்திகள்' என எண்வகைப்

படுத்துகின்றன. அவ்வெட்டு ஆற்றல்களை அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, வசித்துவம், பரகாயபிரவேசம், ஈசத்துவம் எனப் பெயரிட்டு அழைத்தனர். (பின்னிணைப்பில் - விரிவாக). ஆனால் இவ்வகைச் சித்துக்களில் கைவரப் பெறுதலே சித்தர்களின் முழுமுதற் குறிக்கோள் என்றோ, சித்தர்களின் அடையாள நிலை என்றோ கூறுதல் பொருந்தாது. 'அட்டமா சித்தி' எனப்படும் எண்வகைச் சித்திகளும் இலட்சியமாகவன்றித் துணைப்பேறாகவே கொள்ளப்பட்டன"[110].

சித்தாடல் என்ற பேச்சுக்கே ஜென்னில் இடமில்லை. உள்ளதை உள்ளவாறு ஏற்பதுதான் ஜென்னின் தனித்துவம். இயற்கையின் படைப்பை எவ்வித முரணும் எதிர்ப்புமின்றி அப்படியே ஏற்றுக்கொள்வதுதான் ஜென். இதனை, "ஜென்னிலிருந்து அறியப்படுவது என்ன; அதன் மூலம் பெறப்படுவது என்ன என்று கேட்டால் ஒன்றும் பெரிதாக இல்லை என்று கூறவேண்டியுள்ளது"[111] என்பதன் வழி அறியலாம்.

ஜென்னில் ஞானம் பெற்ற ஒரு ஜென் துறவியான 'சிங்யுவான்' தன் அனுபவம் பற்றிக் கூறும்போது, "முப்பது வருடமாக, ஞான் ஜென் படிப்பதற்கு முன்பு மலைகளை மலைகளாகவும், நீரோடையை நீரோடையாகவும் பார்த்தேன். ஆனால், ஜென் வழியில் வாழ்க்கையைப் பார்க்கத் துவங்கியதும் மலைகளை மலைகளாகவும் ஓடையை முழுமையாகப் புரிந்து கொண்டுவிட்ட நிலையில் மீண்டும் மலைகளை மலைகளாகப் பார்க்கிறேன். ஓடையை வெறும் ஓடையாகப் பார்க்கிறேன்"[112] என்கிறார். இதுதான் ஜென். இதில் இயற்கைக்கு மாறாக எதுவுமே இல்லை. நம் இயல்பு நிலையில் நாம் இருப்பதே ஜென். இதனால் என்ன

பயன் என்று நமக்குத் தோன்றலாம். “நம் இயல்பில் நாம் இருக்கப் பழகினால் அது ஓர் அற்புத அனுபவம் என்று ஜென் சொல்கிறது. இந்த அற்புதத்தில் மாயாஜாலங்கள் இருக்காது. மிகச் சாதாரணமாக நாம் செய்யும் செயல்களில் ‘நான்’ செய்கிறேன் என்று நினைக்காமல் செய்வதே இங்கு அற்புதம். அப்படி ஒரு காரியத்தை நாம் செய்யும்போது அந்த செயல் மிக சிறப்பான ஒரு செயலாக இருக்கும் என ஜென் சொல்கிறது”[113].

மேற்குறித்த இக்கருத்துக்களுக்கு அரண் சேர்க்கும் வகையில் “ஜென் குருமார்களும் சாதாரணமானவர்களைப் போலத்தான் வாழ்கிறார்கள். அவர்களும் கதவைத் திறந்து கொண்டுதான் வெளியே வருகிறார்கள். சுவற்றைத் தாண்டி குதித்து வருவதில்லை”[114] எனும் கருத்து அமைந்திருக்கின்றது.

## 2.5 முடிவுரை

1. சித்தர்களைச் சைவ சமயத்தைப் பரப்பிச் சிவன் புகழைப் பாரெங்கும் பரப்பிய பெரியோர் என்று மட்டும் கூறிவிட முடியாது. சமயம் கடந்த சிந்தனைகளை இவர்தம் பாடல்களில் காணமுடிகிறது.
2. பௌத்த மதத்தை மட்டும் பரப்பும் நோக்கோடு உருவானதல்ல ஜென். இதுவும் சமயங் கடந்த வாழ்க்கை நெறியை மக்களுக்குப் போதிக்கின்றது.
3. சித்தர் என்ற சொல்லின் பொருளை வரையறுக்க இயலாது. ஏனெனில் சொற்களனைத்தும் வெறுங் குறியீடுகளே. அவை தோன்றிய காலத்தில் அவற்றுக்கு அமையும் பொருள் காலப்போக்கில் மாறுகின்றது. பல விசித்திரமான

காரணங்களுக்காகப் பலரைச் சித்தர் என மக்கள் அழைத்திருக்கின்றனர்.

4. ஜென், சொல்வதற்குப் பிரத்யேகமாக ஒன்றுமில்லை எனும் ஒரே பொருளிலேயே கையாளப்பட்டு வருகின்றது.
5. சித்தர் என்ற சொல் தமிழ் இலக்கியங்களில் திடீரென்று நுழைந்து விடவில்லை. இச்சொல்லின் பொருளில் பிற சொற்கள் தமிழ் இலக்கியங்களில் கையாளப்பட்டு வந்திருக்கின்றன.
6. ‘ஜென்’ என்ற சொல் ‘தியான்’ என்ற வடமொழிச் சொல்லிலிருந்து தோன்றியதாகும்.
7. சித்தர்களுள் பதினெண் சித்தர்கள் என வெவ்வேறு பட்டியல்கள் கிடைக்கின்றன. தமிழ் மரபின்படி மங்கலத்தின் பொருட்டு 18 என்று அழைக்கப்பட்டிருக்கலாம். இதைத்தவிர இதற்கெனச் சிறப்பான காரணம் ஏதும் இருந்ததாகத் தெரியவில்லை.
8. ஜென் துறவிகளின் எண்ணிக்கை பற்றிப் பார்க்கும்போது, போதிதர்மாவிற்குப் பிறகே ஜென் துறவியரின் காலம் தொடங்குகிறது.
9. சித்தர் மார்க்கத்திலும் ஜென் மார்க்கத்திலும் குருவின் வழியாகச் சீடர்கள் ஞானம் பெற்ற நிலை இருந்ததை அறிய முடிகிறது. குரு-சீடர் உறவுமுறை சுமூகமாகவும் அறிவுத்தேடலுடனும் இருந்திருக்கின்றது.

10. சித்தர்களும் ஜென் துறவிகளும் சமூகத்தில் வாழ்ந்திருந்தாலும் ‘தாமரை இலை மேல் தண்ணீர்’ போலச் சமூகத்துடன் ஒட்டியும் ஒட்டாமலும் வாழ்ந்திருக்கின்றனர்.
11. பெண் நிந்தனையாளர்கள் எனச் சித்தர்களையும் ஜென் துறவியரையும் கூறிவிட முடியாது. ஏனெனில் ‘அவ்வையார்’ எனும் பெண் சித்தர் பாடிய பாடல்களும் சித்தர் பாடல்களின் தொகுப்பின்கீழ் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. அதுபோலவே பெண்களை ஜென் மடத்தில் சேர்த்துக் கொண்டால் ஒழுக்கம் பாதிக்கப்படும் எனும் மனப்போக்கு மாறி பெண்களும் குருக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டனர் என அறிய முடிகிறது.
12. சித்தர்கள் இன்றளவும் வாழ்ந்து வருகின்றனர். எனினும் கி.பி.5ஆம் நூற்றாண்டிற்கு முதலாகவே பெரும்பான்மையான சித்தர்கள் வெவ்வேறு இடங்களில் வாழ்ந்திருந்தனர் என்பது ஆய்வாளர்களின் கருத்து.
13. ஜென் மார்க்கம் கி.பி. 520 முதல் கி.பி. 906 வரை சீனாவிலும், கி.பி.1191 முதல் கி.பி.1227க்குள் ஜப்பானிலும் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. இன்று ஜென் பயிற்றுப் பள்ளிகள் உலகெங்கும் இயங்கிக் கொண்டிருக்கின்றன.
14. பொய்மைச் சித்தர்களை அடையாளம் காட்டும் வகையிலும் சித்தர் பாடல்கள் புனையப்பட்டுள்ளன. ஞானம் பெறா ஜென் துறவிகளும் குருக்களாக இருந்திருக்கின்றனர் என்றும், அவர்களை எளதில் இனங்காண முடியும் என்றும் தெரிகின்றது.

15. சித்தர்களின் அகநிலை ‘சமூக’ உணர்வுடன் இருந்திருக்கின்றது. சித்தாடுவதிலும் அவர்கள் வல்லவர்களாய் விளங்கியிருக்கின்றனர். எனினும் அதை ஒரு முதன்மைப் பேறாக அவர்கள் கருதியதே இல்லை. ஆனால் ஜென்னில் சித்தாடுதல் பற்றி எவ்விதக் குறிப்பும் கிடைக்கவில்லை.
16. ஜென் மார்க்கத்தில் நேற்று, நாளை என்பது வீண். இன்று, இக்கணத்தில் முழுமனதுடன் வாழப் பயிற்சி அளிப்பதுதான் இம்மார்க்கத்தின் தனித்தன்மை எனலாம்.

## குறிப்புகள்

1. க. கைலாசபதி, **ஒப்பியல் இலக்கியம்,** ப.35.
2. பரிமேலழகர் (உ.ஆ.) **திருக்குறள்,** நூ. 346.
3. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.39.
4. கழகத் தமிழகராதி.
5. திருமூலர் திருமந்திரம், பா.1490
6. கோவேந்தன் (ப.ஆ.) சட்டைமுனிநாயனார், **சித்தர் பாடல்கள்,** ப.13.
7. அகஸ்தியர், **அகஸ்தியர் ஞானம்,** பா.13.
8. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், **கலைக்களஞ்சியம்,** தொகுதி. 4 சித்தர்கள், ப.643.
9. மேலது, பக்.643-644.
10. மு.அருணாசலம், **திருக்குறளும் சித்தர் பாடல்களில் உறுதி பொருள்களும்,** பக்.7-10.
11. க. நாராயணன், **சித்தர் சிவவாக்கியர்,** ப.16.
12. இரா. மாணிக்கவாசகம், **நம்நாட்டுச் சித்தர்கள்,** ப.23.
13. இரா.மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** ப.38.
14. அ.ச. ஞானசம்பந்தன், (ப.ஆ.) **திருமந்திரம் - முன்னுரை,** பக்.7-8.
15. க. கைலாசபதி, **ஒப்பியல் இலக்கியம்,** ப.139
16. க. நாராயணன், **சித்தர் சிவவாக்கியர்,** ப.11.
17. **தொல்காப்பியம்,** செய். நூ., ப.480.
18. **குறள்,** 28.
19. பேராசிரியர் (உ.ஆ.) **தொல்காப்பியம்,** நூ. 480.
20. **குறள்,** 28.
21. **குறுந்தொகை,** பா.260.
22. உ.வே. சாமிநாதய்யர், (உ.ஆ.) **குறுந்தொகை,** ப.260.
23. புலியூர் கேசிகன் (உ.ஆ). **புறநானூறு,** பா.192.
24. க. நாராயணன், **சித்தர் சிவவாக்கியர்,** பக்.11-12.

25. புலியூர் கேசிகன் (உ.ஆ.) **திருக்குற்றாலக் குறவஞ்சி, குறவஞ்சி நாடகம்,** 7.
26. இராமலிங்க சுவாமிகள், **திருவருட்பா உபதேசப் பகுதி.**
27. ஸ்ரீதாயுமான சுவாமிகள், **ஸ்ரீதாயுமான சுவாமி பாடல்கள் - சித்தர் கணம்,** பா.7:1.
28. சித்பவானந்தர் (உ.ஆ) **பகவத்கீதை,** பக்.571-573.
29. இரா. மாணிக்கவாசகம், **நம் நாட்டுச் சித்தர்கள்,** ப.24.
30. அகத்தியர், **அநுபோக சூத்திரம்,** சூ.2.
31. திருமந்திரம், பா.1507, 1513
32. மேலது, பா.1870
33. கு. அருணாச்சாலக் கவுண்டர், **சித்தர் பாடல்களும் அவர்தம் தத்துவமும் - ஒரு கண்ணோட்டம்,** பக்.9-10.
34. சி.எஸ். முருகேசன், **சித்தர்கள் கண்ட இறைமை,** ப.9.
35. வே.இரா. மாதவன், **சித்தர் பாடல்கள்,** ப.309.
36. சி.எஸ். தேவநாதன், **ஜென் வழியில் தன்னைத்தானே அறிதல்,** ப.8.
37. சி.எஸ். தேவநாதன், **ஜென் தத்துவ விளக்கக் கதைகள்,** ப.7
38. புவியரசு, **ஜென் கதைகள்,** முன்னுரை, ப.7.
39. சதா ஆனந்த் விக்னேஷ், **ஜென் வாழ்வியல் கலை - மௌனத்தின் ஓசை,** ப.57.
40. சி.எஸ். தேவநாதன், **ஜென் வழியில் தன்னைத்தானே அறிதல்,** ப.7.
41. கலைச் சொல்லகராதி (விக்கிபீடியா), ஜென் (Zen).
42. சக்தியின் உணர்வுகள் (வலைப்பூ), இணைய ஆதாரம், 16 ஆகஸ்ட் 2009. ஜென் என்றால் என்ன?
43. சதா ஆனந்த் விக்னேஷ், **ஜென் வாழ்வியல் கலை - மௌனத்தின் ஓசை,** பக்.49-50.
44. சுவாமி ஆனந்த் பரமேஷ், **ஜென்னும் ஜென் தியானமும்,** ப.9.
45. மேலது, பக்.11-12.
46. AMA samy **Zen: awakening to your original face**, pg.13-14
47. சுவாமி ஆனந்த் பரமேஷ், **ஜென்னும் ஜென் தியானமும்,** ப.10.

48. மேலது, ப.47.
49. மேலது, ப.50.
50. மேலது, பக்.55-56.
51. AMA samy **Zen: awakening to your original face**, p.13.
52. எஸ்.ஏ.பி. **ஜென்னும் ஜென் தியானமும்**, ப.48
53. சி.எஸ். தேவ்நாத், **ஜென் தத்துவ விளக்கக் கதைகள்,** ப.37
54. புவியரசு, **ஜென் கதைகள்,** , ப.23.
55. புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** ப.105.
56. சுவாமி ஆனந்த் பரமேஷ், **ஜென்னும் ஜென் தியானமும்,** பக்.14-18.
57. கு. அருணாச்சலக் கவுண்டர், **சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் - ஒரு கண்ணோட்டம்,** ப.7.
58. சி.எஸ். முருகேசன், **சித்தர்கள் கண்ட இறைமை** ப.9.
59. சிங்காரவேலு முதலியார், **அபிதான சிந்தாமணி,** ப.638.
60. கு. அருணாச்சலக் கவுண்டர், **மு.நூ.,** ப.78.
61. தா. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்,** ப.83.
62. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்**, ப.33.
63. மேலது, ப.34.
64. www. buddhism about.com **Five Women Zen Masters**
65. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்**, ப.34.
66. மேலது, ப.55.
67. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.208.
68. க. கைலாசபதி, **ஒப்பியல் இலக்கியம்,** ப.149.
69. மேலது, ப.148
70. சி.எஸ். தேவ்நாத், **உள்ளொளி பெருக்கும் சித்தர்கள்,** ப.14.
71. மேலது, ப.15.
72. சம்பந்தம், **திருமந்திர விருந்து,** ப.445.
73. பரிமளா ராஜகுமாரன், **சித்தர்களின் வரலாறு,** ப.51.
74. மேலது, ப.70.
75. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்**, ப.36.

76. மேலது, ப.199.
77. க. கைலாசபதி, **ஒப்பியல் இலக்கியம்,** ப.147.
78. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** பக்.28-29.
79. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.175.
80. க. கைலாசபதி, **ஒப்பியல் இலக்கியம்,** ப.147.
81. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.45.
82. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** பக்.33-34
83. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்,** ப.127.
84. மேலது, ப.49.
85. சி. எஸ்..தேவ்நாத், **ஜென் வழியில் தன்னைத் தானறிதல்,** ப.11.
86. மேலது., ப.11.
87. சதா ஆனந்த் விக்னேஷ், **மௌத்தின் ஓசை ,** ப.57.
88. அ.ச. ஞானசம்பந்தன்(ப.ஆ.) **மு.நூ.,** ப.15.
89. கு. அருணாச்சலக் கவுண்டர், **மு.நூ.,** பக்.1-2.
90. மாதவன், வே.இரா. **சித்தர் பாடல்கள்,** ப.308.
91. சதா ஆனந்த் விக்னேஷ், **மௌத்தின் ஓசை ,** ப.49.
92. மேலது, ப.57.
93. மேலது, ப.58.
94. மேலது, ப.59.
95. பட்டினத்தார் **சித்தர் பாடல்கள்,** பா.1.
96. பட்டினத்தார் , **சித்தர் பாடல்கள்,** பா.16,17.
97. மலர்விழி மங்கையர்க்கரசி, **ஒப்பியல் சமய நோக்கில் திருவருட்பா,** ப. 101.
98. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்,** ப.20.
99. வான்மீகர், **சித்தர் பாடல்கள்,** பா.6.
100. காகபுசுண்டர், **சித்தர் பாடல்கள்,** பா.27-28
101. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்,** ப.121.
102. தேவ்நாத், சி.எஸ்., **ஜென் வழியில் தன்னைத் தானறிதல்,** ப.117.
103. **மேலது,** ப.126.
104. பத்ரகிரியார், **சித்தர் பாடல்கள் ,** பா.53-54.

105. வான்மீகர், மேலது., பா. 234.

106. சி.எஸ். தேவ்நாத், **ஜென் வழியில் தன்னைத் தானறிதல்,** ப.102.

107. மேலது, ப.23.

108. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.45.

109. பாம்பாட்டியார், **சித்தர் பாடல்கள்** பா.25-39.

110. ப. அருணாசலம், **திருமந்திரக் கோட்பாடு,** ப.125.

111. சதா ஆனந்த் விக்னேஷ், **மௌத்தின் ஓசை ,** ப.77.

112. மேலது, ப.78.

113. மேலது, ப93.

114. சி.எஸ்.தேவ்நாத், **ஜென் வழியில் தன்னைத் தானறிதல்,** ப.22.

# 3. சமூக நோக்கில் சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும்

## 3.0 முன்னுரை

தனிமனிதன் குடும்பம் என்ற அமைப்பின் மூலமாகச் சமுதாயத்தில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்கின்றான். தனி மனிதர்களையும் குழுக்களையும் தன்னகத்தே கொண்டதோர் அமைப்பாகச் சமுதாயம் திகழ்கின்றது. தமிழகத்து மரபுப்படித் தொடக்க காலம், சங்க காலம், களப்பிரர் காலம், பல்லவர் காலம், இக்காலம் என மக்கள், மக்களைச் சுற்றியுள்ள நகரங்கள், தொழில்கள், வழிபடு தெய்வங்கள், மன்னர்கள் சிறப்பு அனைத்தும் சமுதாயத்துள் பேசப்படுகின்றன. சமுதாயம் என்பது குறித்து சமூகவியலாளர்கள் பல்வேறு விளக்கங்களை அளிக்கின்றனர். இவ்விளக்கங்களையும் இவற்றின் அடிப்படையில் சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும் கூறும் சமூகவியல் செய்திகள் இவ்வியலில் ஆராய்ந்து கூறப்படுகின்றன.

## 3.1 சமுதாயம்

தனிமனிதர்களின் கூட்டுறவாலான அமைப்பே சமுதாயம் எனப்படுகிறது. “குறிப்பிட்ட எல்லைக்குள் (Specific Territory) வாழ்கின்ற மக்களால் மேற்கொள்ளப்பெறும் செயலெதிர் செயல்களின் (Interactions) அனைத்து முறைகளையும் சமுதாயம் எனக் கூறலாம். தனிப்பட்டவர்களின் கூட்டமைப்பு, உரிமை மற்றும் ஒற்றுமை உணர்வு, ஏகதேசன் நிரந்தர இயல்பு முதலான சிறப்புத் தன்மைகளைக் கொண்டது சமுதாயம் ஆகும்”[1] எனச் சமுதாயம் குறித்த விளக்கத்தை ஈசுவர பிள்ளை பட்டியலிடுகிறார்.

‘‘ஒரு குறிப்பிட்ட நிலை எல்லைக்குள் உள்ள மக்கள் தங்களுக்குள் சமூக உறவுகளை வளர்த்துக் குறிப்பிட்ட பண்பாடுகளையும், மதிப்பீடுகளையும் கொண்டு வாழ்ந்து வரும் அமைப்புக்குச் சமுதாயம் என்று பெயர்’’[2].

பொதுவான உடற்கூறியல்புகளையம் பொதுவான விருப்பங்களையும், பொதுவான வாழ்க்கை நோக்கங்களையும், பொதுவான விதிகளையும் கொண்டுள்ள உறுப்பினர்களை ஒன்றிணைக்கும் சிறியதும் பெரியதும் நிரந்தரமானதுமாகிய அமைப்பைச் சமுதாயம் என்று கூறலாம்’’[3].

‘‘சமுதாயம் என்பது நெறிமுறைகளையும் மரபுகளையும் பழக்கவழக்கங்களையும் கொண்ட ஓர் அமைப்பு. இவ்வமைப்பு அதிகாரமும், ஒருவர் மற்றொருவருக்கு உதவும் இயல்பும் கொண்டதாகக் காணப்படுகிறது. அது மக்கள் இனத்தின் பல்வேறு பிரிவுகளையும் குழுக்களையும் கொண்டு விளங்குவதாகும்’’[4]. இவ்வாறாக சமுதாயம் குறித்து பல்வேறு விளக்கங்கள் கூறப்படுகின்றன.

## 3.2 புதிய சமூக ஆக்கத்திற்கு வழிமுறை

சமுதாயத்தில் வழிவழியாகப் பின்பற்றப்படும் சில பழக்கவழக்கங்கள் மனித மனத்தை மழுங்கடித்தன. சித்தர்கள் ஆன்மீகவாதிகள் என்றாலும் ஆன்மீகம் எனும் தனிமனித உணர்வைக் கடந்து சமுதாயக் கேடுகளை எண்ணி வருந்தினர். சமுதாய நலனுக்குத் தொண்டு செய்தனர். ஏற்றத்தாழ்வற்ற சமூகத்தை உருவாக்கவும், போரும் பூசலும் இன்றி மக்கள் அமைதியாக வாழவும் சித்தர்கள் வழி கூறினர்.

உலகியல் வாழ்வை உதறி, தனித்து, ஒதுங்கி வாழ்வது ஆன்ம நெறியின் அடிப்படையே அல்ல. உலகியலைக் கடக்க முயலும் ஆன்மீகவாதிகள் அன்றாட வாழ்க்கையின் பிரச்சினைகளையும், சமூகம் எதிர்நோக்கும் சிக்கல்களையும் நினைத்துப்பார்க்க மாட்டார்கள் என்று எண்ணுவது தவறு. தான் வாழும் சமூகத்தின் சூழலைச் சிறிது எண்ணிப்பாராமல் இயற்கையை, அதன் அழகை இரசிக்கும் மனம் இருந்தாலும் அது வீணாகும். உண்மையான ஆன்மீகவாதி என்போன் தான் அனுபவித்த பேரின்பத்தை மக்களோடு மக்களாய்க் கலந்து பழகி அவர்களையும் அப்பேரின்பம் அடையத் தூண்ட வேண்டும். அதனை விடுத்துத் தனித்து வாழ்தல் ஆகாது. இக்கருத்தினை க. நாராயணன் ‘‘ஆன்மீகவாதி தனித்ததொரு தீவாக வாழ இயலாது. ஆன்மீகவாதிகளும் சமுதாய அமைப்பில் அங்கத்தினர்கள்தாம். ஆன்ம விடுதலை மூலம் தான் மட்டும் தனித்துப் பேரின்பம் சுவைப்பதை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டவர்கள் ஞானிகளாகக் கருதப்படமாட்டார்கள். சமூக ஒழுங்கையும் பாதுகாப்பையும் பயன்படுத்திக் கொண்டு அச்சமுதாயத்திற்கு எவ்வகையிலும் பயன்படாமல் ஒதுங்கி விடுவோர் சமூகக் குற்றவாளிகளாகவே கருதப்படுவர்’’[5] என்று சித்தர் தத்துவம் எனும் நூலில் கூறுகிறார்.

துறவு என்ற பெயரால் சமூகத்தை விட்டு ஒதுங்கி வாழ்பவர்களும், சமுதாயச் சீர்கேடுகளைக் கண்டும் காணாமல் கண்மூடிச் செல்பவர்களும் துறவிகள் அல்லர்; சமூகத்தில் நிகழ்த்தப்பெறும் பொய்யான சில மரபுகளைக் கண்டு கொதித்து சற்று காரசாரமான சொற்களால் எளிய நடையில் பல பாடல்கள் புனைந்து பாமரரும் புரிந்துகொள்ளும் வகையில் பாடி சித்தர்கள் அறிவுறுத்தினர்.

## 3.3 சமுதாயத்தில் சாதி பெறுமிடம்

சமுதாயத்தில் தனியொரு மனிதன் தன்னைச் சமுதாயத்தில் அடையாளப்படுத்திக் கொள்வதற்குரிய முக்கிய காரணி சாதி அமைப்பு முறையாகும். சமுதாயக் குழுக்களிடையே காணும் பிரிவுகள் சாதி என்னும் சொல்லால் வழங்கப்பட்டு வருகின்றன. சமுதாாயத்தில் சாதி பெறும் இடம் குறித்து அறிஞர்கள் தரும் விளக்கங்கள் பின்வருமாறு:

‘‘அக மணமுறையுடைய, அதனால் பிறப்பு வழிப்பட்ட சாதியப் படிநிலைகளை குறிப்பாகப் பார்ப்பன மேலாண்மையை ஏற்றுக்கொள்கின்ற குறிப்பிட்ட தொழிலோடும் நிலத்தோடும் பிணைக்கப்பட்ட சடங்கு சாத்திர அடையாளங்களுடைய ஒரு மக்கள் திரளையே சாதி என்கிறோம்’’[6].

சமுதாயத்தில் சாதி அமைப்பானது பல்வேறு படிநிலைகளைக் கொண்டுள்ளது. அவற்றுள் ஒரு பிரிவு சடங்கு சாத்திர அடையாளங்களோடு கூடிய பார்ப்பண ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டிருக்கின்ற மக்களைக் குறிக்கின்றது.

‘‘எந்தப் பிரிவினரும் எவ்விதத் தொடர்பும் கொள்ளாமல் அகமண முறையை மட்டும் மேற்கொண்டு உணவு, நீர் முதலியவற்றைப் பிற பிரிவினரிடமிருந்து பெறாது தம் சொந்தப் பிரிவினருடன் மட்டுமே உறவு கொள்ளும் மக்கள் பிரிவைச் சாதி முறை என்று கூறலாம்’’[7].

சமுதாயக் குழுக்களிடையே காணப்படும் மற்றொரு பிரிவு தாங்கள் சார்ந்திருக்கும் சாதிப் பிரிவுக்குள்ளேயே பண்ட பரிமாற்றங்களைச் செய்து கொள்ளும் அமைப்பினைக் குறிக்கிறது.

“சாதி முறை என்பது பிறப்பினால் தீர்மானிக்கப்பெற்று அகமண முறையினால் பேணப்பெற்று, சலுகை மற்றும் உரிமைகளால் வரையறை செய்யப் பெற்று, தீட்டு உணர்வுகளால் ஊட்டம் பெற்று, மதக் காரணங்களாலும் தத்துவங்களாலும் முத்திரையிடப் பெற்று இயங்கும் ஒரு சமுதாய நிறுவனமாகும்”[8].

பாராமை, நெருங்காமை, தீண்டாமை, கோயில், குளம், சாலை முதலிய பொது உடைமைகளிலும், நலன்களிலும், சம அளவில் பொது உரிமையின்மை, சமநீதியின்மை, அனைவருக்கும் கல்வி வாய்ப்புகள் சம அளவில் இல்லாமை, விரும்பிய தொழிலை மேற்கொள்ள அனுமதியின்மை, சாதிகளுக்கிடையே நெருங்கிப் பழகாமை, கலந்துறவு கொள்ளாமை, திருமணம் செய்யாமை ஆகிய இவை அனைத்தும் சாதியத்தை அடையாளப்படுத்தியும் நிலைப்படுத்தியும் வருவதாக அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

சாதி முறை மனித இனத்தை இழிவுபடுத்துவதற்காகக் கண்டுபிடிக்கப்பட்ட கொடிய மனமுடைய சமூக முறை (Hard hearted Social System) என்றும், சாதி அமைப்பு ஏற்படுத்தும் ஒற்றுமையின்மைக்கு இணையாக மனித வரலாற்றில் வேறு எதையும் ஒப்பிடமுடியாது என்றும் சாதியின் தன்மை குறிக்கப் பெறுகிறது.

இந்தியச் சமுதாயம் அரசியல், பொருளாதார, பண்பாட்டு ரீதியாகத் தாழ்ந்த நிலையை அடைந்ததற்குச் சாதியமே காரணமாக அமைந்தது என்பர். இச்சமுதாயத்தில் பலவகையான சாதியப் பிரிவுகள் தோன்றி மக்களிடையே ஒற்றுமையைக் குலைத்து வேறுபட்ட உணர்ச்சிகளைத் தோற்றுவித்துள்ளன. இன்றளவும் சாதியின் பெயரால் சண்டைகளும் சச்சரவுகளும் நிகழ்ந்து வருவதே

இதற்குச் சான்றாகும். இத்தகைய சாதிய அமைப்பை உருவாக்கி அதனைச் சமுதாயத்தில் நிலை நிறுத்தியதன் பின்னணியில் இந்து சமயமும் அதன் வருண தருமமும் அதிகார வர்க்கமும் முக்கியப் பங்கு வகித்தன. இந்து சமயத்தோடு தொடர்புடையதாக இந்திய சமுதாய சாதி அமைப்பு அமைந்துள்ளது.

### 3.3.1 நால்வகை வருணமும் சாதியும்

| | |
|---|---|
| பிராமணர் | வருண அமைப்பு முறையும், கல்வி கற்றல், வேள்வி செய்தலும், பிராமணர்களுக்கே உரியதாக்கப்பட்டிருந்தது. |
| சத்திரியர் | குடிமக்களைக் காக்கின்ற தொழில் மற்றும் குலத்தொழிலுக்குக் கற்பது மட்டுமே உரியது. கல்வியும், வேள்வி செய்தலும் தடை செய்யப்பட்டது. |
| வைசியர் | கல்வி கற்றலோடு, வேள்வி செய்தல் மட்டுமல்லாது கால்நடை வளர்த்தல், பயிர் செய்தல், வாணிபம் செய்தல் ஆகியவை இவர்களுக்குரியதாய் இருந்தது |
| சூத்திரர் | மேற்கூறப்பட்ட மூன்று வருணத்தாருக்கும் தொண்டு செய்வதற்குப் பணிக்கப்பட்டனர். |

இத்தகு வருணப் பாகுபாட்டையும், சமுதாய சமத்துவத்தையும், சமூக நீதியையும் சமய சான்றோர்களும் சமுதாயச் சீர்திருத்தவாதிகளும் இலக்கியவாதிகளும் காலந்தோறும் எதிர்த்தே வந்துள்ளனர். இந்து சமயத்தின் ஏற்றத்தாழ்வினை, சமுதாய அமைப்பை எதிர்த்து தொடக்கக் காலத்தில் புத்த, சமண சமயங்கள் போராடின. புத்தம் மனித சமத்துவத்தை வலியுறுத்தியது. இவர்களுக்குப் பின் இடைக்காலத்தில் சித்தர் முதலான சமயம் கடந்த ஞானியர்களும் புத்த துறவிகளும் சாதியத்தை எதிர்த்தனர். சாதியம் என்பது சமுதாயத்தில் இன்றும், நாளையும் தொடர்ந்து இருக்கும் என்பதில் ஐயமில்லை. அந்த அளவிற்கு சமுதாயத்தோடு கலந்துவிட்ட ஒன்றாகும்.

தமிழ்ச் சமுதாயம் தொடக்க காலத்தில் நிலவுடைமைச் சமுதாயமாக இருந்தது. பிறப்பால் எவ்விதப் பாகுபாடும் வழக்கத்தில் இல்லை. சங்க காலத்தின் பிற்பகுதியில் இனக்குழு அமைப்பு சிதைந்து நிலவுடைமை அரசு என்ற நிலையில் சாதியம் தோற்றம் பெற்றது.

"*வேற்றுமை தெளிந்த நாற்பாலுள்ளும்*
*கீழ்ப்பால் ஒருவன் கற்பின்*
*மேற்பால் ஒருவன் அவன்கண் படுமே*"[9]

அதாவது பிராமணர் முதல் சூத்திரர் முறையே உயர்ந்த குலத்தினர் தாழ்ந்த குலத்தினர் என்ற வேற்றுமைக் கூறுகள் சமுதாயத்துள் தெளிவாகக் காணப்படினும் கல்வி நிலையில் இத்தகு வேறுபாடு களைந்தெறியப்படுகின்றது என்பதை மேற்கூறப்பட்ட பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

சங்க காலத்தை அடுத்த அறநெறிக் காலத்தில் களப்பிரர்களின் ஆட்சி நடைபெற்றது. இவர்கள் சமண, புத்த சமயத்தை ஆதரித்தனர். சமயச் சார்பற்ற நிலையில் நின்று அனைவருக்குமான பொது நீதியை வலியுறுத்தினர்.

"*பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்*"[10]

எனும் அடிகளில் கல்வியோடு அவரவர் செய்யும் தொழிலால் வேற்றுமை தோன்றும் என்றும், கல்வியும் ஒழுக்கமும் உயர்வு தாழ்வைப் போக்கும் என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

"*மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்*
*கற்றார் அனைத்திலார் பாடு*"[11]

*"மேலிருந்தும் மேலல்லார் மேலல்லார் கீழிருந்தும்*
*கீழல்லார் கீழல் லவர்".*

எனும் குறட்பாக்கள் வழி கற்றோர் மேலோர், கீழோர் என்பது உரைக்கப்பட்டுள்ளது.

*"தோணி இயக்குவான் தொல்லை வருணத்து*
*காணின் எனப்பட்டான் என்று இகழார்*
*காணாய்அவன் துணையா ஆறுபோயிற்ரே நூல் கற்ற மகன்*
*துணையா நல்ல கொளல்"[13].*

*களர்நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர்*
*விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வார்*
*கடைநிலத்தோ ராயினும் கற்றறிந் தோரைத்*
*தலை நிலத்து வைக்கப்படும்"[14].*

போன்ற அற இலக்கியச் செய்திகளும் காட்டுதற்குரியன. பல்லவர் காலமும் ஏற்றத்தாழ்வு இல்லாத சமுதாயத்தை எதிர்நோக்கியது. இத்தகைய சமுதாயப் பின்புலத்திலிருந்தே பக்தி இயக்கம் தோற்றம் கொண்டது. நாயன்மார்களும், ஆழ்வார்களும் முன்னின்று நடத்திய இவ்வியக்கமானது இறைவன் முன் அனைவரும் சமம். மனிதர்களுக்கிடையே ஏற்றத்தாழ்வு கிடையாது என்ற கருத்தினை வலியுறுத்தியது. நாயன்மார்களுள் ஒருவரான அப்பரின் பாடல்கள் கடவுள் முன் அனைவரும் சமம் என்பதை வலியுறுத்துகின்றன.

*"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்*

*கோத்திரமுங் குலமுங் கொண் டென் செய்வீர்"[15].*

சமூகத்தில் நிகழ்த்தப் பெறும் பொய்யான சில மரபுகளைக் கண்டு கொதித்து சற்று காரசாரமான சொற்களால் எளிய நடையில் பல பாடல்கள் புனைந்து பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் பாடி சித்தர்கள் அறிவுறுத்தினர்.

### 3.3.2 ஜென் சமூகம்

மஹாயான புத்த மதத்தின் ஒரு கிளையாக ஜென் மார்க்கம் சீனாவில் உருவெடுத்தது. மஹாயான புத்த மதம் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் சீனாவில் அதிகம் பரவியிருந்தது. தாவோ, கன்பூசியக் கொள்கைகளுடன் இணைந்து புதிய பரிமானம் பெற்ற புத்த மதம் ஜப்பான், கொரிய நாடுகளுக்கும் பரவியது. அக்காலக் கட்டத்தில் உண்டானது தான் ஜென் மார்க்கம்.

சீனர்களின் ஆக்கப்பூர்வமான உள்ளுணர்வுடன் இந்தியர்களின் தியானத்தையும் இணைத்துக் கொண்டு உருவானதே ஜென் பிரிவு.

நான்காவது ஜென் குருவான தாவோவின் காலத்தில் சிலர் தங்கள் குடும்பங்களைத் துறந்து தங்களை 'ஜென்'னில் இணைத்துக் கொண்டனர். அவ்விதமாக முதல் ஜென் சமூகம் உருவானது.

மாரு என்பாரது சீடரான பாய்சாங் (Pai-Chang) ஜென் துறவிகளுக்கான விதிகளைத் தோற்றுவித்தார். நீங்கள் ஒழுக்கமான வாழ்வு வாழ வேண்டும். யோகப் பயிற்சியோடு வேலைகளும் செய்ய வேண்டும். வேலை செய்யாத நாள்

உணவில்லாத நாள்' என்றார் அவர். ஜென் துறவிகளால் ஒழுக்கம் எனும் அறமும் உழைப்பு எனும் அறமும் வலியுறுத்தப்படுகின்றன.

நாம் தனித்தனியானவர்கள் அல்ல. நம்மில் மற்றவர்கள் இருக்கிறார்கள். மற்றவர்களில் நாம் இருக்கிறோம். எல்லோரும் இப்பிரபஞ்சத்தின் பகுதி என்கிறது ஜென். இன்று நிலவும் சமூகப் பிரச்சினைகள் பலவற்றுக்கும் ஒரு நல்ல தீர்வாய் ஜென் அமையும் என்ற நம்பிக்கைக்கு உரியதாகிறது.

இத்தகைய சமுதாயப் பின்னணியிலிருந்தே சித்தர்களின் சமுதாயச் சிந்தனைகளும், அதனைத் தொடர்ந்து ஜென் இலக்கியச் சிந்தனைகளும் தோற்றம் பெற்றன.

## 3.4 திருமணமும் சமய வாழ்வும்

தனிமனிதன் ஒருவனை சமூகத்தில் ஐக்கியப்படுத்துகின்ற கருவியாகத் திகழ்வது குடும்பம் என்ற அமைப்பே ஆகும். குடும்பம் என்ற அமைப்பு திருமணம் என்ற பந்தத்தின் மூலம் கட்டமைக்கப்பட்டதாகும். தமிழர்களது தொன்மையான நூலான தொல்காப்பியத்தில் திருமணத்தின் சிறப்பினை,

*"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்*
*கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்*
*கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"*[16]

என எடுத்தோதியுள்ளார். திருமணத்தின் மூலம் ஒன்று சேரும் ஆணும் பெண்ணும் தத்தம் மனச்சாட்சிக்கு உண்மையாக வாழ்வதைக் கற்பு என்ற நிலையில் வைத்தனர் முன்னோர்.

இல்லறம் என்ற நிலையில் விருந்தோம்பல் பண்பு என்பது உயர்வாகக் கருதப்படுகிறது. விருந்தோம்பலைத் தமிழ் இலக்கியங்கள் பலவும் போற்றியுள்ளன. ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து வாழ்நாளைப் பயனுள்ள வகையில் கழித்து நாட்டுக்கும் வீட்டுக்கும் சிறந்த பிள்ளைப் பேறுகளைத் தருவதுதான் இல்லறத்தின் நோக்கம். இந்நிலை மாறி சிற்றின்ப சுகம் தேடும் வாயிலாகத் திருமணம் அமையக்கூடாது என்பது இலக்கியங்கள் காட்டும் நன்னெறி.

சமயத்தின் வழி சமுதாயத்திற்கே முக்கியத்துவம் வழங்கப்பட்டிருப்பதைச் சித்தர்களின் இலக்கியங்களின் வாயிலாகவும், ஜென் இலக்கியங்கள் மூலமாகவும், சேக்கிழாரின் பெரியபுராணத்தின் வழியாகவும், திருமூலரின் திருமந்திரத்தின் வாயிலாகவும, இன்னும் பல சமய இலக்கியங்கள் மூலமாகவும் அறிய முடிகின்றது.

### 3.4.1 திருமணம் பொய்த்தல்

திருமணம் என்பது பல்வேறு காரணங்களால் பொய் எனக் கருதப்படுகின்றது. சில நேரங்களில் வீண் எனவும் கருதப்படுகின்றது. திருமணம் என்பது தவறான இல்லறத்தின் வழி பொய்த்ததாகிறது என்பதைச் சித்தர்களின் பாடல்கள் உணர்த்துகின்றன.

> ***“கைப்பிடி நாயகன் தூங்கையிலே அவன் கையெடுத்து***
> ***அப்புறம் தன்னில் அசையாமல் முன்வைத்து அயல்வளவில்***
> ***ஒப்புடன் சென்று துயில்நீத்துப் பின்புவந்து உறங்குவளை***
> ***எப்படி நான் நம்புவேன்? இறைவா கச்சி ஏகம்பனே”[17].***

என்ற பாடல் மூலம் பட்டினத்தார் தவறான சில இல்லறத்தைச் சுட்டுகிறார்.

சிற்றின்பத்தையே வாழ்வின் நோக்கமாய் கொள்ளாது, வாழ்வின் ஒரு பகுதியாய் கொண்டு இல்லறக் கடமைகளை இனிதே ஆற்ற வேண்டும் எனவும் கூறுகிறார். இக்கடமை தவறிய திருமணம் பொய்யானதே என்கிறார். இதனை,

*"நானும் உடலை நரிப்பொதி சோற்றினை நான்தினமும்*
*சோறும் கறிபும் நிரம்பிய பாண்டத்தைத் தோகையர்தம்*
*கூறும் மலமும் இரத்தமும் சோருங் குழியில் விழாது*
*ஏறும்படி அருள்வாய் இறைவா! கச்சி ஏகம்பனே"!*[18]

என்ற பாடல் வழி அறியலாம். மேலும்,

*"இல்லறமே அல்லலாம் என்று ஆடுமயிலே - பத்தி*
*இல்லவர்க்கு முத்திசித்தி இல்லை மயிலே"*[19].

என்ற இடைக்காடர் பாடல் இல்லறமே வேண்டும் என்கிறது.

இல்லறம் நல்லறமாய் அமையாது போவதும் உண்டு. இல்லறமே இகபரமாய் வாழ்ந்து 'பாசம்' என்ற மாயைக்குள் சிக்கி, சுயநலப் பேய்களாக மனிதர்கள் மாறுவதும் உண்டு. அப்பாச விலங்கில் இருந்து மனிதர்களைக் காக்கும் பொருட்டுக் குடும்பம் என்ற அமைப்பில் மூழ்கிவிடாதீர்! என சித்தர்கள் எச்சரிக்கின்றனர். குடும்பம் என்ற வட்டத்திற்குள் சிக்காமல் வெட்டவெளியில் கலக்க சித்தர்கள் ஆலோசனை தருகின்றனர். இதனை,

*"…. பெற்றதாய் இருந்தென்? மடப்பெண் கொடியாள்*
*சீர் இருந்தென்ன? சிறப்பிருந்தென்ன? இத்தேயத்தினில்*
*ஏர் இருந்தென்ன?…"*[20]

*"தாயாரும் சுற்றமும் பெண்டிரும் கைவிட்டுத் தாழ்ந்திடுநாள்*
*நீ யார்? நானார்? எனப் பகர்வார் அந்த நேரத்திலே*
*நோயாரும் வந்து குடிகொள்வாரே கொண்ட நோயும்ஒரு*
*பாயாரும் நீயுமல்லாமல் பின்னையே நட்பாம் உடலே"!*[21]
*"பெண்டு பிள்ளை தந்தையர் பிறவியுடன் சுற்றம்இவை*
*உண்டென்று நம்பி உடல் அழிந்தேன் பூரணமே"*[22]

போன்ற பட்டினத்தார் பாடல்களின் வழியாகவும்,

*"தந்தைச் தாய் மக்கள் சகோதரரும் பொய்யெனவே*
*சிந்தை தனில் கண்டு திருக்கறுப்பது எக்காலம்?"*[23]

என்ற பத்ரகிரியாரின் பாடல் வழியாகவும்,

*"தாயைச் சதமென்றே தந்தையரை ஒப்பென்றே*
*மாயக் கலவிவந்து மதிமயக்க மானேனடி*
*மாயக் கலவி விட்டு மதிமயக்கம் தீர்ந்தக்கால்*
*தாயும் சதமாமோஎன் கண்ணம்மா தந்தையரும் ஒப்பாமோ?"*[24]

எனும் அழுகணிச்சித்தரின் பாடலின் வழியாகவும் அறிய முடிகின்றது. மனைவி மக்கள் போன்ற உறவுகள் அனைத்தும் மாயை. இம்மாயையில் சிக்கி உழல வேண்டாம் எனச் சித்தர்கள் சமூகத்திற்கு எச்சரிக்கை விடுகின்றனர்.

ஜென் தத்துவக் கதைகளில் 'மரணம்' எனும் தலைப்பில் அமைந்த கதையின் மூலமாக, "ஜென் ஞானி ஷ்வாங்-ட்ஸூ மனைவி காலமானார். தனது மனைவியின் இறப்புக் குறித்து சிறிதும் வருத்தம் இல்லாமல் தெம்மாங்கு பாடிக் கொண்டிருந்தார் ஞானி. அங்குள்ளவர்களுக்கு மிகுந்த வருத்தமும் கோபமும்

எழுந்தன. கூட்டத்தில் துணிந்து ஒருவன், ‘சுவாமி! என்ன இது? நீங்களே இப்படிச் செய்யலாமா?’ என்றான்.

பிறப்பில் சிரிக்கவோ, இறப்பில் அழவோ என்ன இருக்கிறது? இரண்டும் நம்மிடம் இல்லை. உயிர், உடல் யாவும் இடையிலே வந்தவை. இடையிலேயே போயின? வருத்தப்பட என்ன இருக்கிறது?”[25] என்று ஞானி சொன்னர்.

சித்தயோகிகள் இல்லறத்தில் இருந்தாலும் தாமரை இலையும் நீரும் போலவே உலகியல் வாழ்க்கையில் தங்களை ஆட்படுத்திக் கொள்ளாமல் வாழ்வார்கள். அந்நிலையிலேயே ஜென் ஞானிகளும் வாழ்ந்திருக்கின்றனர். உலகம் அனைத்தும் மாயையில் கட்டுண்டது. மரணம் என்பது சாதாரண ஒன்று. வாழும்போது எப்படி வாழ்கிறோம் என்பதில்தான் அவர்கள் கவனம் இருக்குமே தவிர இறப்பின் துன்பமோ, துயரமோ அவர்களை அணுகுவதில்லை.

சன்னியாசம் என்ற துறவும் அறம்தான் என்றும், குடும்பத்துக்கு ஒரு ஆண்பிள்ளையாவது வேதத்துக்கு வழங்குங்கள் என்றும் ஆதிசங்கரர் வேண்டுகோள் விடுத்ததிலிருந்து உறவும் அறமே, சன்னியாசம் என்ற இல்லறப் பற்றைத் துறந்ததும் அறமே என்று மொழியப்பட்டுள்ளது.

சமுதாயத் தொண்டு என்று வந்துவிட்டால் தன்னலம் இல்லாத சேவையே பாராட்டப்படும். எனவேதான் ஜென் துறவிகள் இல்லறத்தைப் பெரிதும் போற்றவில்லை என்று கூறலாம். ஜென் என்பது வெறும் தத்துவமல்ல! அது ஒரு வாழ்க்கை வழிகாட்டி என்றே கூறப்படுகிறது.

*"மையோடு கண்ணியும் மைந்தரும் வாழ்வும் மனையும் செந்நீ*
*ஐயாநின் மாயை உருவெளித் தோற்றம் அகிலத்துள்ளே*
*மெய்யாயிருந்தது நாள்செல நாள்செல வெட்ட வெறும்*
*பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே"!*[26]

எனப் பட்டினத்தாரும்,

*"மக்கள் பெண்டிர் சுற்ற மெனும்*
*மாயை காணும் இவை யெல்லாம்*
*மறலி வந்தழைத்த போது வந்துகூடல் ஆகுமோ?"*[27]

எனச் சிவவாக்கியரும் பாடுகின்றனர். மேலும் குடும்ப வாழ்வில் ஈடுபடுவோருக்கு உவமையாக,

*"காப்பதற்கும் வகையறியீர் கைவிடவும் மாட்டீர்*
*கவர்பிளந்த மாத்துளையில் கால்நுழைத்துக் கொண்டே*
*ஆப்பத்தனை அசைத்துவிட்ட குரங்கதனைப் போல*
*அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீரே"!*[28]

என்ற பாடல் வழிப் பட்டினத்தார் சம்சார சாகரத்தில் சிக்கி உழல்வோரை குரங்கிற்கு ஒப்பிடுகிறார். இப்பாடல் வழி மனிதர்களில் சிலர் குடும்பம் எனும் கட்டுக்குள் சிக்கிக் கிணற்றுத் தவளைகளாய் மாறிப்போவதால் குடும்ப வாழ்வைச் சித்தர்கள் வெறுத்தனர் எனும் கருத்து புலப்படுகின்றது.

## 3.5 சுற்றமும் உறவும்

திருமணமும் சம்சார வாழ்வும் வீண்; சுற்றமும் உறவும் வெளிமயக்கமே என்ற கொள்கைப் பிடிப்பு சித்தர்களிடம் இருந்தது. இதனை நிறுவும் வகையில் ஆங்காங்கே பல பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

*“இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழில்உடம்பும்*
*எல்லாம் வெளிமயக்கே இறைவா? கச்சி ஏகம்பனே”*[29]

எனும் பட்டினத்தாரின் பாடல் உறவுகள் மயக்கம் தரக்கூடியது என்ற கருத்தையே வலியுறுத்துகின்றது.

கட்டிய மனைவியின் மீதும், பெற்ற பிள்ளைகளின் மீதும் அளப்பறிய பாசம் கொண்ட மனிதன் இவ்உறவுகளின் மேல்கொண்ட பாசமெனும் மாயையின் பொருட்டே தன்னிலை இழக்கின்றான். எனவே அவர்கள் யாவரும் நீ இறக்குங்கால் உன்னோடு வருவதில்லை என்ற கருத்தைச் சித்தர்கள் வலியுறுத்துகின்றனர். இதனை,

*“ஊருஞ் சதமல்ல; உற்றார் சதமல்ல; உற்றுப்பெற்ற*
*பேருஞ் சதமல்ல; பெண்டீர் சதமல்ல; பிள்ளைகளும்*
*சீருஞ் சதமல்ல; செல்வம் சதமல்ல; தேசத்திலே*
*யாருஞ் சதமல்ல; நின்தாள் சதம் கச்சிஏகம்பனே”*[30].

என்ற பாடல் வழி அறியலாம். ‘இறைவன் அருளே நிலையானது; அதனை பின்பற்றுக’ என்று அறிவுறுத்தலையும் இப்பாடல் வழிப் புலப்படுத்துகின்றது. மேலும் மனைவியும் மக்களும்தான் உலகம் என்று நினைப்போருக்கு, அவர்கள் உன்மேல் கொண்ட பாசத்தினால் நீ இறந்தவுடன் உன்னோடு கூட இறப்பதில்லை. அவர்கள் துணை மயானம் வரை மட்டுமே’ என்று கூறுகின்றனர். இது குறித்த,

*“கட்டி யணைத்திடும் பெண்டிரும் மக்களம் காலத்தச்சன்*
*வெட்டி முறிக்கும் மரம்போல சரீரத்தை வீழ்த்திவிட்டால்*

*கொட்டி முழக்கி அழுவார் ; மயானம் குறுகிஅப்பால்*

*எட்டிஅடி வைப்பாரோ இறைவா கச்சிஏகம்பனே”*[31]

*“மனையாளும் மக்களும் வாழ்வும் தனமும் தன்வாயில் மாட்டே*

*இனமான சுற்றமும் மயானம் மட்டே வழிக்கேது துணை?”*[32]

என்றும் பட்டினத்தாரின் பாடலடிகள் காட்டத்தக்கன.

மேற்கூறப்பட்ட பாடல்கள், உறவு என்பது எப்போதும் உடன் வரப்போவதில்லை. ‘இறைவனைத் தெளிதலே’ என்பது தான் வாழ்வின் உன்னதம், யோகிகளின் தாரக மந்திரம். இறைவனைத் தவிர மற்றைய உயிர்கள், உறவுகள் எல்லாம் சிறிது காலமே என்பது சித்தர்களின் சிந்தனையாகும்.

‘வாழுங்காலத்து விழிகளில் அன்பொழுக வாழ்ந்த மனைவியும் நீ இறந்தால் வீதி வரைதான் துணைவருவாள். இறப்புத் துயர் தாங்காது விம்மி விம்மி அழுகின்ற பிள்ளைகளும் சுடுகாடு வரைதான் துணைவருவர். உன்னைப் பற்றித் தொடர்ந்து வருவது உன்னுடைய புண்ணிய பாவமாகிய இருவினைகள் தாம். இவ்வினைகள் தொடருங் காரணத்தால் சிவனைச் சரணாகதி அடைந்து உய்யுங்கள்’[33] என்று பட்டினத்தார் மட்டுமின்றி பிற சித்தர்களும் கூறுகின்றனர்.

உறவும் சுற்றமும் நிலைத்தவை அல்ல என்ற கருத்து விளங்கும்படியான ஜென் கதை ஒன்று வருமாறு:

யோக வித்தைகளை நன்கு அறிந்த குரு ஒருவருக்குச் சீடன் ஒருவன் அடிக்கடி வந்து பணிவிடைகள் புரிவான். அப்போது அவர் சொல்லும் தத்துவங்களைக் கேட்டுக்கொண்டிருப்பான்.

திடீரென்று ஒருநாள் அவன் சொன்னான்: ‘குருவே! எனக்கு வாழ்வு கசந்துவிட்டது. மனம் வைராக்கியம் பெறத் துடிக்கிறது. நான் வாழ்வின் உண்மைகளைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்’.

‘அப்படியா’ என்றார் குரு அமைதியாக.

‘ஆம். நான் துறவறம் பூண விரும்புகிறேன்’ என்றான் அந்தச் சீடன்.

குரு அதற்கு எதுவும் பேசவில்லை. சீடன் மேலும் தொடர்ந்து,

‘நான் துறவியாக வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். ஆனால் என் வீட்டில் உள்ளவர்கள் அதற்கு விடமாட்டார்கள் என்றுதான் பயப்படுகிறேன்’ என்றான் மிகுந்த வருத்தத்துடன்.

‘ஏன்?’

‘அவர்களுக்கு என்மீது அளவில்லாப் பாசம்; கொள்ளை அன்பு; என்னைப் பிரிந்து அவர்களால் இருக்கவே முடியாது’என்றான் அவன் சற்றே கர்வத்துடன்.

‘அதைச் சோதித்துப் பார்க்கிறாயா?’ என்றார் குரு நிதானமாக.

சீடன் அதற்கும் சம்மதித்தான். குரு அவனுக்குச் செத்தது போலவே கிடக்கும் ஒரு யோக வித்தையைக் கற்றுக் கொடுத்து வீட்டிற்குப் போய் அதைப் பிரயோகிக்குமாறு கூறினார்.

மறுநாள் அவன் தன் வீட்டில் செத்தது போலவே கிடந்தான். செய்தியறிந்து உற்றார், உறவினர்கள், நண்பர்கள் என எல்லோரும் அங்கே கூடிவிட்டனர். வீட்டின் அழுகுரல் தெரு முழுவதுமாய் கேட்டது.

குரு அந்த வீட்டை அடைகிறார். அவர்களைப் பார்த்துச் சொன்னார்.

'இவனுக்குப் பதிலாக உங்களில் யாராவது ஒருவர் உயிரைத் தர முன்வந்தால் போதும் இப்போது இவனை உயிர்ப்பிக்க என்னால் முடியும்'.

அதைக் கேட்டு ஒவ்வொருவராகப் பின்வாங்கினார்கள். தாங்கள் வாழ வேண்டியதன் அவசியம் பற்றி ஒவ்வொருவரும் பலவிதக் காரணங்களைக் கூறி அவருக்கு விளக்கினார்கள்

கடைசியில் அவன் மனைவி உரத்த குரலில் சொன்னாள்:

'அவருக்குப் பதில் யாரும் சாக வேண்டாம். அவர் இல்லாமலேயே நாங்கள் காலத்தைக் கழிப்போம்''[34].

இக்கதையின் வழி,

'தந்தை தாய் தமர் தாரம் யாவும்
சந்தையிற் கூட்டம் அதிலோர் சந்தேகமில்லை'.

உறவும் சுற்றமும் எப்பொழுதும் யாருக்கும் நிலைத்தவை இல்லை. 'இறைவன் அருள்' ஒன்றே உண்மையானது என்ற கருத்தும் விளங்குகின்றது.

சிவனே உண்மை; சிவனை அடைதலே வீடுபேறு நிலை என்று பக்தி இலக்கியங்கள் பகர்கின்றன. உதாரணமாக, சேக்கிழார் இயற்றிய பெரியபுராணத்தில் நாயன்மார்கள் சிவத்தொண்டு புரிந்து முத்தி நிலை பெறுவதையே வாழ்வின் உண்மை என்றிருந்தனர். சிவன் மீது கொண்ட பக்தியினால் நாயன்மார்கள் தமது மனைவியரின் உறவைத் துறக்கக் கூடத்

தயங்கினர் சிலர். அத்தகு நிலையில் இறைவனைத் தவிர எந்த உறவும் பெரிதாகக் கருதப்படவில்லை என்பது புலனாகிறது.

***"அறிந்துணர்ந் தேனிவ் வகலிட முற்றும்***
***செறிந்துணர்ந் தோதித் திருவருள் பெற்றேன்***
***மறந்தொழிந் தேன்மதி மாண்டவர் வாழ்க்கை***
***பிறந்தொழிற் தேனிப் பிறவியை நானே"***[35]

திருவருள் துணையால் உலகியல் உண்மை முற்றும் அறிந்துணர்ந்தேன். சிவன் திருவடிக்குப் பேரன்பு வைத்துத் திருமுறையும் சித்தாந்த நூல்களும் ஓதியுணர்ந்து திருவருள் பெற்றேன். மற்ற உலகியல் வாழ்வில் உறவுகளைப் பிணைத்திருக்கும் பெருவாழ்வையும் மறந்தொழிந்தேன் எனத் திருமூலர் உலகப்பற்று பற்றி எடுத்துரைக்கின்றார்.

***"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்***
***ஆகுல நீர பிற"***[36]

என்ற குறளின் பொருளுக்கேற்ப உலகப் பற்றற்று வினைபுரிபவன் எளிதில் எதனின்றும் விடுபட்டு விடுகிறான். மனதினுள் குற்றமற்றவனாய் விளங்கும் ஒருவனிடத்தில் எல்லா அறங்களும் இணைந்திருக்கின்றன.

"ஒரு ஜென் குரு பயணம் முடிந்து தன் குடிலை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். அவருடன் அவரது சீடனும் நடந்து கொண்டிருந்தான். அவர்கள் சென்ற வழியில் ஓர் ஆறு குறுக்கிட்டது. அது ஒரு காட்டாறு. அதில் திடீர் திடீரென வெள்ளம் பெருகி ஓடும். சிறிது நேரத்தில் அந்த வெள்ளம் வடிந்தும் விடும். குரு அந்த ஆற்றிலே இறங்கி நடந்தார். அவருக்குச் சற்றுத்

தூரத்தில் ஓர் இளம்பெண் நடந்து போய்க்கொண்டு இருந்தாள். அப்போது திடீரென ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுக்க ஆரம்பித்தது. கிடுகிடுவென நீர்மட்டம் கழுத்துவரை உயர்ந்தது. அந்த இளம்பெண் வெள்ளத்தைச் சமாளிக்க முடியாமல் திக்கு முக்காடினாள். சட்டென்று அவளை நெருங்கிய குரு தனது இரு கைகளாலும் அந்தப் பெண்ணை அப்படியே தூக்கினார். பிறகு தன் தலைக்கு மேல் அவளைத் தூக்கியபடியே ஆற்றைக் கடந்தார். மறுகரையை அடைந்ததும் அவளைக் கீழே இறக்கி விட்டுவிட்டு மேலே நடக்க ஆரம்பித்தார்.

கூடவே வந்த சீடனுக்கோ பகீர் என்றிருந்தது. 'ஐயோ! என்ன அநியாயம் இது. நம் குரு ஒரு கன்னிப்பெண்ணைத் தொட்டுத் தூக்கிவிட்டாரே!' என்று மனத்துள் எண்ணி எண்ணி அதிர்ச்சியடைந்தான் அவன். என்றாலும் குருவைக் கேள்வி கேட்கத் தயங்கியவனாய் மவுனமாக இருந்தான்.

'சீடன் ஏதோ கேட்க நினைப்பதையும், பிறகு மவுனமாவதையும் கண்ட குரு, அவன் மனதில் ஏதோ சந்தேகம் இருப்பதைப் புரிந்துகொண்டார். ஆனாலும் அவனாக வாய்விட்டுக் கேட்கட்டும் என்று மவுனமாயிருந்தார். ஆனால் சீடனோ அவரைவிட அழுத்தமானவன். தன் சந்தேகத்தைத் தன் மனதிலேயே இறுக்கமாகப் பூட்டி வைத்துக் கொண்டான். சீடனின் தவிப்பைக் கண்டு பொறுக்கமாட்டாதவராய் கடைசியில் குரு சீடனிடம் கேட்டார். உன் மனத்தை ஏதோ ஒரு சந்தேகம் அரித்தெடுக்கிறது போல இருக்கிறதே' என்று கேட்டார்.

'ஆம் குருவே!' என்றான் சீடன் சிறிது தயக்கத்துடன்.

'என்ன சந்தேகம்? தயங்காமல் கேள்' என்றார் அவர். முதலில் தயங்கிய சீடன் கடைசியில் சற்றுத் துணிச்சல் பெற்றவனாகக் கேட்டான்.

'குருவே! இன்று காலை நிகழ்ந்த சம்பவம்...?'

'இன்று காலை என்ன? என்ன.... நடந்தது?' என்று கேட்டார் வியப்புடன்.

'தாங்கள் ஓர் இளம் பெண்ணைத் தங்கள் கைகளால் தொட்டுத் தூக்கினீர்களே!' என்று நெளிந்தான் சீடன் சங்கடத்துடன். இதைக் கேட்ட குரு கடகடவென்று சிரித்தார். பின்னர், 'அட முட்டாளே! அவளை நான் அங்கேயே இறக்கிவிட்டு விட்டேனே! இன்னுமா நீ அவளைச் சுமந்துகொண்டு திரிகிறாய்!''[37] என்றார்.

சீடன் இந்தப் பதிலால் வாயடைத்துப் போனான். பற்றற்ற நிலையில் வாழ்வது துறவு வாழ்வு. இந்நிகழ்வில் குருவின் செயல் சமூக அக்கறை கொண்ட மனிதாபிமான செயல்.

> ***''மக்கள் பெண்டிர் சுற்றம் மருமக்கள் மற்றவர்***
> ***மாளும் போதுகூட அவர் மாள்வ தில்லையே''[38].***

> ***''மாடும் மனைகளும் மக்களும் சுற்றமும்....***
> ***தேடும் பலபண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே''[39]***

என்று பட்டினத்தாரும் இடைக்காட்டாரும் வாழ்வில் இறைவனை அடைவதற்கு, மனத்தூய்மை பெறுவதற்கு உறவுகள், சுற்றத்தின் மீதான பற்றுகளை விடுத்திருப்பதே மேலான செயல் எனக் கூறுகின்றனர்.

''பற்றுகளைத் துறப்பதே ஞானவாயிலின் திறவுகோல் என்றனர் பலர். அவர் தன் உடமைகளை உதறினார். தன் சொத்துக்களை உதறினார். இருக்கும் இடம்

என்றுகூட ஒரு பற்றுதல் கூடாதென்று ஊர் ஊராக அலைந்து திரிந்தார் ஒருவர். அப்படியும் அவர் மனம் அமைதியுறவில்லை. வழியில் ஜென் குருவைச் சந்தித்தார்.

குருவை வணங்கி, 'குருவே நான் ஞானத்தைத் தேடி அலைகிறேன்'! என்றார்.

'அப்படியா'! என்றார் குரு.

'ஆம். நான் பாசங்களை உதறிவிட்டேன். உடைமைகளை உதறிவிட்டேன். பற்றுக்களைத் துறந்துவிட்டேன். இப்போது என் மனம் நிச்சலனமாய் இருக்கிறது' என்றார்.

'அப்படியா? சரி. அதை விட்டுவிடு'! என்றார் குரு

அவர் முகத்தில் பெரும் திகைப்பு.

'குருவே! நான்தான் எல்லாவற்றையுமே விட்டு விட்டதாகச் சொன்னேனே! இப்போது என் மனதில் வெறுமைதானே குடி கொண்டிருக்கிறது?'

'சரி. அதையும் விட்டுவிடு'! என்றார் குரு.

'அதை எப்படி விடமுடியும் சுவாமி?' என்றார் வந்தவர்.

'விடமுடியாதா? நல்லது. அப்படியானால் அதனைச் சுமந்து கொண்டு திரி'! என்றார் குரு"[40].

ஞானம் என்பது எதுவும் தன்னிடம் இல்லை என்று விலக்குதலே ஆகும். எல்லாவிதமான பற்றுக்களையும் அதாவது ஆசை, ஆசையின்மை, உறவுகளைத் துறந்திருத்தல் 'சூனியம்' என்ற நிலையில், அதுவும் இல்லாதிருத்தலே ஞானம்

பெற வழி என்ற கருத்து மேற்கூறப்பட்ட ஜென் கதையின் மூலமாக விளக்கமுறுகிறது.

### 3.6 சிற்றின்ப வெறுப்பு

இல்லறத்தின் இன்றியமையாப் பயன்கள் பல இருந்தாலும் சிற்றின்பம் நுகர்தலே முதன்மையாகக் கொண்டவர்களுக்கு அவ்வின்பத்தில் வெறுப்பு ஏற்படச் செய்யும் நோக்கில் பல்வேறு பாடல்கள் இடம் பெறுகின்றன. இக்கருத்தினை,

*“காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டிஎன்கண் எதிரே*
*மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட*
*தூதென்றெண்ணாமல் சுகமென்று நாடும்இத் துர்புத்தியை*
*ஏதென் றெடுத்துரைப்பேன்? இறைவா கச்சிஏகம்பனே”*[41]

எனப் பட்டினத்தாரும்,

*“சீறும் வினையது பெண்உருவாகி திரண்டுருண்டு*
*கூறும் முலையும் இறைச்சியும்ஆகி கொடுமையினால்”*[42]

என இடைக்காடரும்,

*“முட்டற்ற மஞ்சளை எண்ணெயிற் கூட்டி முகமினுக்கி*
*மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை ஓலை விளக்கிட்டுப்*
*பட்டப்பகலில் வெளிமயக்கே செய்யும் பாவையர் மேல்*
*இட்டத்தை நீ தவிர்ப்பாய்.....”*[43].
*“......சிற்றின்பம் விட்டு*
*ஏறும் பதந்தருவாய் திருக்காளத்தி ஈசுவரனே”*[44].

போன்ற பட்டினத்தாரும் பாடிய பாடல்களின் வழி அறிய முடிகின்றது.

இதனால் சித்தர்கள் பெண்ணையே அன்றி, பெண்மையையே இழித்துரைக்கின்றனர் என்பதில்லை. பெண்ணியல்பு கடந்த பெண்ணின் உடலையும், சிற்றின்பத்தையும் மட்டுமே முடிவு என்றிருக்கும் ஆடவரை எச்சரிக்கின்றனர் என்பதே உண்மை. அத்தகு ஆடவர்களையும், 'மோகத்தினால் மாதரிடம் சிக்கிப் பின்னர் பேய்பிடித்தவர் போல் சாவர்' என்றும் சாடுகின்றனர்.

### 3.6.1 காமக்குருடர்

பெண்ணாசை கொண்டோருக்குப் பிறவற்றை நினைக்கத் தெரியாது என்பதை உணர்ந்த சித்தர்கள்,

*"வாய்நாறும் ஊழல்; மயிர்ச்சிக்கு நாறிடும்; மையிடுங்கண்*
*பீநாறும்; அங்கம் பிண வெடி நாறும்; பெருங்குழிவாய்ச்*
*சீநாறும்; யோனி அழல் நாறும் இந்திரியச் சேறுசிந்தி*
*பாய் நாறும் மங்கையர்க்கோ இங்ஙனனே மனம் பற்றியதே"*[45].

*"கால்காட்டிக் கைகாட்டிக் கண்கள் முகம்காட்டி*
*மால்காட்டும் மங்கையரை மறந்திருப்பது எக்காலம்?"*[46]

என்றும் பாடியுள்ளனர். பெண்ணின்பத்தைத் தாண்டி வெளியே வாருங்கள், என்று அழைப்பும் விடுக்கின்றனர். சான்றாக,

*"பெண்ணாசையைக் கொண்டு பேணித் திரிந்தக்கால்*
*விண்ணாசை வைக்க விதியிலையே கல்மனமே"*[47].

என்ற இடைக்காடரின் பாடலில், பெண்ணாசை இருந்தால் விண்ணாசை தோன்றாது. எனவே அவ்வாசையை விட்டு வெளியே வா' எனும் கருத்து வெளிப்படுகின்றது.

*"மைவிழி யாரைச் சாராதே - துன்*
*மார்க்கர்கள் கூட்டத்தில் மகிழ்ந்து சேராதே"*[48]

*"பிச்சையென்று ஒன்றும் கேளாதே - எழில்*
*பெண்ணாசை கொண்டு பெருக்கமா ளாதே"*[49].

போன்ற பாடல்களின் வழி கடுவெளியாரும்.

*"சிற்றின்பம் நீக்கினேன் மற்றின்பம் நோக்கினேன்*
*சிற்பரம் சேர்ந்திட்டேன் தற்பரம் சார்ந்திட்டேன்"*[50].

என இடைக்காடரும் பாடிய பாடல்கள் மேற்கூறிய கருத்துக்களை வலியுறுத்துவனாகவே அமைகின்றன.

*"ஆமா றறியாதோன் மூடன் அதிமூடன்*
*காமாதி நீங்காக் கலதி கலதிகட்கு*
*ஆமா றசத்தறி விப்போன் அறிவிலோன்*
*கோமா னலனசத் தாகுங் குரவனே"*[51].

பிறப்பற்றுச் சிறப்புறுவதற்கான் வழிவகைகளை அறியாதோன் ஆமாறறி யாதோனானவன் அவனையே மூடன் என்று சொல்லும் உலகம் காமம், வெகுளி, மயக்கம் முதலிய குற்றம் நீங்கா வீணர்கள். பாவிகள் ஆதிமூடராவார். அத்தகைய பெரும்பாவிகளை ஒத்தவனே பொய்ப்பொருளை மெய்ப்பொருளென அறிவிக்கும் அறிவிலாக் குருக்கள் என்று திருமூலர் உலக இன்பம் கொண்ட மனிதன் எத்தகைய நிலையில் எண்ணப்படுகின்றான் என்பதை விளக்குகின்றார்.

### 3.6.2 பொது மகளிரைக் கண்டித்தல்

பொருட்பெண்டிரைப் பற்றிக் கூறும் வள்ளுவர், அவர்களின் பொய்மை முயக்கத்திற்கு, "பொருளை மட்டும் மதிக்கின்ற பரத்தையின் பொய்யான தழுவல் இருட்டறையில் ஒரு பெண் பிணத்தைத் தழுவுதல் போன்றது"[52] என்று கூறுகிறார். பொது மகளிரது உறவு ஆன்மப் பயணத்திற்குப் பெருந்தடைக்கல் என்பதைச் சித்தர்கள் உணர்ந்திருக்கின்றனர். அத்தகு பெண்களை 'மாயப்பிசாசு' என்று கடிந்துரைக்கின்றனர். பெண்ணாகி வந்ததொரு மாயப்பிசாசாம் பிடித்திட்டென்னை"[53] என்று சாடும் பட்டினத்தார்,

*"எத்தனைபேர் நட்டகுழி - எத்தனை பேர் தொட்ட முலை*
*எத்தனை பேர் பற்றி இழுத்த இதழ், நித்த நித்தம்*
*பொய்யா பேசும் புவியில் மடமாதரை விட்டு*
*உய்யடா உய்யடா உய்"*[54]

என்றும் பாடுகிறார்.

இத்தகு புன்மாதர்கள் கண்ணுக்கு அழகாகத் தெரிந்தாலும் அவர்கள் பற்றிய நினைவுகளே இறைவனை மனத்திற்குள் நினைய வொட்டாது என்று பாம்பாட்டிச் சித்தர் தனது பாடலில் கூறுகிறாள்.

*"சிக்குநாறுங் கூந்தலையே செழுமை மேகமாய்ச்*
*செப்புவார்கள் கொங்கைதனைச் செப்புக் கொப்பதாய்*
*நெக்குநெக்கு உருகிப் பெண்ணை நெஞ்சில் நினைப்பர்*
*நிமலனை நினையார் என்று ஆடுபாம்பே"!*[55].

*"மலக்குடம் மீதினிலே மஞ்சள் பூச்சென்றும்*
*மல்கும் புழுக்கூட்டின் மேல் வண்ணத்தோல் என்றும்*
*சலக்குழிக்குள்ளே நாற்றஞ் சார்ந்த சேறெயென்றும்*
*தான் அறிந்து தள்ளினோம் என்று ஆடுபாம்பே"[56].*

என ஞான நெறிச் செல்லத் தடையாகும். விலை மகளிரைக் கண்டிக்கிறார் பாம்பாட்டியார்.

மேலும் இத்தகு போக மாதரை, 'நரக வாயில்' என்றும் இழித்துரைக்கின்றனர். "பொன்னையும் பொருளையும் தேடி அப்பாவையருக்கு இறைத்துப் பேரின்பத்தை மறந்து சிற்றின்பத்தின் மேல் மையலாகப் புன்மாதருக்கும் உறழவோ இறைவா என்னை இம் மண்மீது படைத்தாய்?"[57] என இறைவனை வினவுகிறார் பட்டினத்தார். ஏகநாதனை இணையடி யிறைஞ்சுமின் போக மாதரைப் போற்றுதல் ஒழிந்தே"![58] எனும் பாடல் வழி எச்சரிக்கின்றார்.

*"நெக்குநெக்கு உருகிப் பெண்ணை நெஞ்சில் நினைப்பார்*
*நிமலனை நினையார் என்று ஆடுபாம்பே"[59].*

என்று பாம்பாட்டிச் சித்தர் சிவனை நினையாதார் தன்மையை எடுத்தோதுகின்றார். இதனால் சித்தர்கள் குலப்பெண்களை வெறுப்பவர்கள் அல்லர் என்பதும், பக்தி நெறி சார்ந்து முக்தி அடைவதற்குத் தடையாக நிற்கும் காதளவோடிய பாதக் கன்னியரையே கடிந்துரைக்கின்றனர் என்பதும் தெரிகின்றது.

## 3.7 பெண்கள் நிலை

சமுதாயம் என்பது ஆண், பெண் இருபாலரையும் உள்ளடக்கிய அமைப்பு. இந்த அமைப்பில் ஆண் அதிகாரம் வாய்த்தவனாகவும், பெண் அவனுக்குப் பணிவிடை செய்பவளாகவும் உருவகிக்கப்படுகின்றனர். இதற்குப் பல்வேறான விளக்கங்கள் கூறப்படுகின்றன. சமய நூல்களில் பெண்களின் நிலை பரிதாபத்திற்குரியதாகவே படைக்கப்பட்டிருக்கிறது. இல்லறம் துறந்து இறைவனை அடைதல் என்ற நிலையில் பெண்கள் தாழ்வாகவே கருதப்பட்டிருக்கின்றனர். இத்தன்மையினை சமண, பவுத்த இலக்கியங்களில் காணலாம்.

இறைவனுக்குத் தொண்டு புரிதல், கணவனுக்கு வேள்விச் சடங்கு செய்வதல் என்று எல்லா நிலைகளிலும் பெருத்த துணையாக விளங்குபவள், இல்லாள். சிவத்தொண்டு புரிதலில் இல்லாள் செய்யக்கூடிய வினைகள் தீட்டாகக் கருதப்பட்டு ஒதுக்கப்படுதலும் உண்டு. இந்நிகழ்வினை நாயன்மார்களின் வரலாற்றினைக் கொண்டு அறிய முடிகின்றது.

பெண் மாயை, மலம், மறலி விட்ட தூது, வெளிமயக்கு செய்பவர்கள் என்றெல்லாம் சித்திரிக்கப்படுகின்றனர். சித்தர்களில் பெண்ணாசையை முற்றிலுமாக விலக்கல் வேண்டும் என்று கடிந்துரைப்பவர் பாம்பாட்டிச் சித்தராவார்.

### 3.7.1 சித்தர்கள் பெண் வெறுப்பாளர்களா?

சித்தர்கள் அனைவரும் பெண் வெறுப்பாளர்கள் என்றொரு தவறான கருத்து மக்கள் மனதில் உண்டு. ஆனால் அவர்களைப் போன்று பெண்ணின் பெருமையைச் சிகரத்தில் ஏற்றியோர் யாருமில்லை என்றுதான் கூற வேண்டும்.

*'மங்கையராய்ப் பிறப்பதற்கே - நல்ல*

*மாதவம் செய்திட வேண்டுமம்மா'!*

என்ற கவிமணியின் பாடல் வரியும், 'பெண்ணின் பெருந்தக்க யாவுள' என்ற வள்ளுவரின் வரியும், 'கற்புடை மகளிரைக் கடவுளரும் வெல்லுதல் அரிது' என்ற கலித்தொகைப் பாடலடியும் பெண்மையைச் சிறப்பித்துக் கூறுகின்றது.

ஆண்மையும் பெண்மையும், சிவமும் சக்தியும் போலும் ஆண், பெண் இரண்டும் சேர்ந்ததுதான் வாழ்க்கை என்பதைச் சித்தர்கள் உணராதவர்கள் அல்லர். சித்தர்கள் பெண்மையை இழித்தும் பழித்தும் பாடியுள்ளனர் என்று நினைத்தல் தவறு. அவர்கள் கற்புநலம் வாய்ந்த உயர்ந்த இல்லறப் பெண்களை அங்ஙனம் பாடியதில்லை. ஆனால் வாழ்க்கையே அதுதான்; உலகமே அதுதான் என்று வாழவேண்டாம் என வலியுறுத்துகின்றனர்.

*"மாதர்தோள் சேராத தேவர் மாநிலத்தில் இல்லையே*

*மாதர்தோள் புணர்ந்தபோது மனிதர் வாழ்வு சிறக்குமே"*[60]

என்று சிவவாக்கியரும் பாடியிருக்கின்றனர்.

உலகில் ஓர் ஆண் ஆணாகப் பிறந்து ஆணாகவே மாய்கிறான். ஆனால் ஒரு பெண் பெண்ணாகப் பிறந்து தாயாக மாறி இறுதியில் தெய்வமாகிறாள். இந்தத் தாய்மையே பெண்ணை மென்மேலும் உயர்த்தி இமயமாக்கி விடுகின்றது. அந்த தாய்மையின் சிறப்பினை மிக உயர்ந்த முறையில் உலகுக்கு உணர்த்தியவர்கள் சித்தர்களே ஆவார்கள்.

*"பெண்கள் கூட்டம் பேய்கள் என்று*
*பாடிச் சென்ற சித்தர்களும்*
*ஈன்ற தாயும் பெண்ணே என்று*
*எண்ணிடாத வித்தர்களே...."*[61]

போன்ற வரிகள் திரைப்படப் பாடலொன்றில் இடம் பெறுகின்றன. இது சித்தர்களைப் பற்றிய மேலோட்டமான சிந்தனையே என்பதற்கும் பட்டினத்தாரின் பாடல் ஒன்று சான்றாய் அமையும். பெண்ணால் பெருந்தடைகள் பல என்று கடிந்துரைக்கும் பட்டினத்தார் தன் அன்னை இறந்த போது,

*"ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்றுப்*
*பையலென்ற போதே பரிந்தெடுத்துச் செய்ய இரு*
*கைப்புறத்தில் ஏந்திக் கனமுலை தந்தாளை*
*எப்பிறப்பில் காண்பேன் இனி?*
*வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலும்*
*கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து - முட்டச்*
*சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ*
*விறகிலிட்டுத் தீ மூட்டுவேன்"*[62].

எனத் தன்னைப் பெற்று வளர்த்தெடுத்த அன்னையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

தாயின் மீது அன்பு காட்டுவது துறவிற்குத் தடையாகாது எனும் பொருளில் அமைந்த ஜென் கதை,

'ஷோன்' என்ற ஞானி 'சோட்டோ ஜென்' ஜென் என்ற பிரிவின் குருவாக விளங்கியவர். இளமைப்பருவத்தில் தந்தையை இழந்து தாயின் பராமரிப்பில் வாழ்ந்தவர். தாயின் மீது எல்லைலயற்ற பாசம் கொண்டிருந்தவர் அவர்.

கடைசிகாலம் வரை தாய்ப்பாசத்தை அவரால் துறக்கமுடியவில்லை. பட்டினத்தாரைப் போல, எங்கு சென்றாலும் தம் தாயை அழைத்துக் கொண்டே தான் செல்வார். தியான மண்டபத்திற்கு செல்லும்போது தாய் உடனிருக்க வேண்டும்.

ஞானம் பெற மடாலயங்களுக்கு சென்றபோதும் தாயை அழைத்துத்தான் சென்றார். பெண்களுக்கு அங்கே அனுமதி இல்லையென்றால், தனி வீடு ஒன்று ஏற்பாடு செய்து கொண்டு தாயுடன் வசிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அங்கிருந்து மடத்திற்குச் செல்வார். பௌத்த நூல்களைப் பிரதி எடுப்பார். கிடைத்த கூலியைக் கொண்டு எளிய வாழ்வு வாழ்ந்து வந்தார். அவர் தம் தாய்க்கு மீன் வாங்கி வருவது வழக்கம். அதைக் கண்ட துறவிகள் அரைக் கண்டித்தார்கள். சிலர் கேலி செய்தார்கள். துறவி அங்கே மீன் உண்பதில்லை.

இதையெல்லாம் கவனித்த அவருடைய அன்னை வேதனைப்பட்டார். ‘‘ஒருநாள் தன்மகனிடம் நானும் துறவியாகி விடுகிறேன்பா. இனிப் புலால் உணவு எனக்கு வேண்டாம்’’[63] என்று சொல்லிவிட்டார்.

அதன்பிறகு தாயும் மகனும் துறவறம் மேற்கொண்டு கற்கத் துவங்கினார்கள்.

***‘‘வட்டமுலை யென்றுமிக வற்றுந் தோலை***
***மகமேரு என்றுஉவமை வைத்துக் கூறுவார்***
***கெட்ட நாற்றமுள்ள யோனிக்கேணியில் வீழ்ந்தார்***
***கெடுவார் என்றேநீர் துணிந்துஆடு பாம்பே’’![64].***

*"மயில்என்றும் குயில்என்றும் மாணிக்கம் என்றும்*
*மானேயென்றும் தேனேயென்றும் வான் அமுதென்றும்*
*ஒயிலான வன்னமயிற்கு ஒத்தவளென்றும்*
*ஓதாமற் கடிந்தேதாம் என்று ஆடுபாம்பே"*[65]

*"பூவையென்றும் பாவையென்றும் பொன்னேயென்றும்*
*பூத்திருவே என்றும் என்றன் பொக்கிசம் என்றும்*
*கோவையென்றும் கோதையென்றும் கோகிலம் என்றும்*
*கூறாமல் துறந்தோம் நாம்என்று ஆடுபாம்பே"!*[66]

பெண்ணெனும் கடலில் மூழ்காது முத்திநிலை பெறும் வழியறிந்தோம் எனக் கூறிப் பெண்ணை விலக்கல் வேண்டும் என்கிறார்.

பெண்ணிற்கு ஆதரவாகப் பாடிய சித்தர்களில் திருமூலர் தம் திருமந்திரத்தில்,

*"பத்தினிப் பத்தர்கள் தத்துவ ஞானிகள்*
*சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்*
*அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடுஞ்*
*சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே"*[67]

இத்தகைய பத்தினிப் பெண்களையும், பக்திசேர் பத்தர்களையும் மெய்யுணர்வு கைவரப் பெற்றாரையும் சித்தங் கலங்கத் தீமைகள் செய்த கொடியோர் பொருளும் உயிரும் ஓராண்டினுக்குள் நீங்க நரகத்தின் கண்ணே நந்தியின் ஆணை. ஆளுடைய பிள்ளையாரின் திருவுள்ளம் கலங்கச் செய்த அமணரும் வரும் வழி தடுத்த புத்தரும் அப்பொழுதே வாழ்வு இழந்தமை

இதற்கொப்பாகும். பத்தினிப் பெண்களின் சிறப்பு கண்ணகி வரலாற்றாலும் அறியப்படுகின்றது.

வாழ்வின் இன்ப துன்பங்களில் பங்கு கொண்டு வாழ்க்கையைச் சீரமைக்கும் பெண்மை சித்தர்களால் பெரிதும் மதிக்கப்பட்டது. கணவனின் நலம் நாடித் தன்னைக் கரைத்துக் கொள்ளும் தியாக தீபமே பெண் என்பதைச் சித்தர்கள் உணர்ந்திருந்தனர்.

*"மாது நல்லாருட் மணாள் இருந்திடப்*
*பாதி நல்லாளும் பகவனு மானது*
*சோதி நல்லாளை துணைசெய்ய வல்லீரேல்*
*வேதனை தீர்தரும் வெள்ளிடை யாமே"*[69].

என்ற பாடலில் ஆணிலும் வடிவமாக இருப்பது பெண்ணே என்ற திருமூலர் கருத்து பெண்ணின் பெருமையைச் சிகரமளவு உயர்த்துகின்றது.

*"மாதரைச் சேர்ந்து இல்லறம் கண்டால்தான் மாநிலத்தில்*
*மனிதர் வாழ்வு சிறக்கும்"*[61].

என்கிறார் சிவவாக்கியார். எனவே பெண்களையும் அவர்தம் துணையில் நடத்தும் இல்லறத்தையும் சித்தர்கள் வெறுத்தனர் எனப் பொதுவாகக் கூறுவது பொருந்தாது. உடற்கூறுகளையும், இயல்பையும், மருத்துவத்தையும் நன்றாகவே உணர்த்திருந்த சித்தர்கள் 'இல்லறம் இன்றேல் மானுட உலகியல் வாழ்வே இல்லை என்ற உண்மையை உணர்ந்தவர்கள் ஆவர்.

சித்தர் களஞ்சியம் எனும் நூல், 'உறவிலே காணுகின்ற உண்மையான நிலைத் தெளிவுதான் துறவு'. 'ஞானத்தைப் பெறுவதற்கு இல்லறம் ஒரு

தடையல்ல'. இவைதான் சித்தர்களின் கொள்கைகள் ஆகும். வள்ளுவர் வாசுகியையும், யக்ஙவல்கியார் மைத்ரேயியையும், அகத்தியர் உலோப முத்திரையையும், அத்திரி மகரிஷி அனுசூயா தேவியையும் மணந்து வாழ்ந்து இல்லறம் துய்த்ததை, இங்கு உதாரணமாகக் கொள்ளலம். வெறுத்து ஒதுக்குவதைச் சித்தர்கள் துறவறம் என்று ஏற்றுக் கொள்வதில்லை. ஒரு மனிதன் தனி மனிதனாக மனைவியோடு இல்லாமல் வாழ்வதைச் சித்தர்கள் ஏற்றுக் கொள்வது இல்லை. மகான்களும், ரிஷிகளும், சித்தர்களும், முனிகளும், புங்கவர்களும், மகாசித்தர்களும் அவதரித்தது. ஆண், பெண் என்ற உடல் இணைப்பில்தான் தனிமனிதன், குடும்பம், சமுதாயம் என்ற முக்கோணத்தில்தான் வாழ வேண்டியுள்ளது. துறவியாக இருந்தாலும் துறவிக்கான பொருட்கள் சமுதாயத்தில் இருப்பவர்களால்தான் கொடுக்கப்படுகின்றன. ஒவ்வொரு மனிதனும் இந்த சமுதாயத்திற்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதுதான் சித்தர்களின் நோக்கம். இச்சமுதாயத்துக்கு ஒவ்வொரு மனிதனும் தங்கள் வம்சக் குழந்தைகளை அறிமுகம் செய்து தொண்டாற்ற வேண்டும் என்பதே சித்தர்களின் நோக்கம்.

### 3.7.2 பெண்ணென்னும் மாயை

பெண் எனும் உயிர், பிற உயிர்களை உருவாக்கும் ஆற்றல் படைத்தது. எனினும் அதனை வாழ்வின் முடிவாக, முழுமையாக எண்ணிச் சிற்றின்ப மோகத்தில் அலையும் ஆண்களிடம்,

> "*காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டிஎன் கண்எதிரே*
> *மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட*
> *தூதென் றெண்ணாமல் சுகமென்று நாடும்இத் துற்பத்தியை*
> *ஏதென் றெடுத்துரைப்பேன்? இறைவா கச்சிஏகம்பனே*"[70].

எனப் பாடி நல்வழிபடுத்துவது சித்தர் பாடல்கள்.

*“சீறும் வினையது பெண்உரு வாகித் திரண்டுருண்டு*
*கூறும் முலையும் இறைச்சியும் ஆகிக் கொடுமையினால்*
*பீறும் மலமும் உதிரமும் சாயும் பெருங்குழிவிட்டு*
*ஏறுங்கரை கண்டிலேன் இறைவா கச்சிஏகம்பனே”[71].*

*“பெண்ணாகி வந்ததொரு மாயப்பிசாசும் பிடித்திட்டன்னைத்*
*கண்ணால் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத்துப்*
*புண்ணாம் குழியிடைத் தள்ளிஎன் போதப்பொருள் பறிக்க*
*எண்ணாது உனைமறந்தேன் இறைவா! கச்சிஏகம்பனே”[72].*

என்று ‘பெண் மயக்கம் ஏற்பட்டதால் உனை மறந்தேன் இறைவா! மீண்டும் உனது திருவடி அடைந்திடக் காத்தருள்வாய்’ என்று பட்டினத்தார் பெண் மயக்கம் குறித்துப் பேசுகின்றார். தாய், தந்தை, மனைவி, மக்கள், சுற்றம் என்று வாழுகின்ற இல்லற வாழ்க்கையானது பொய் என்றும், அவை இறையருளைப் பெறத் தடையாகும் என்றும் கூறும் பட்டினத்தார் அவற்றையெல்லாம் கைவிட்டால் மெய்யறிவு கிட்டும் என்றும் கூறுகிறார்.

*“மாய நட்போரையும் மாயமல மென்றும் மாதரையும்*
*வீய விட்டோடி வெளியே புறப்படடு மெய்யருளாம்”[73].*

என வரும் பாடல் வெளிப்படுத்துகின்றது.

பெண் என்பவள் இறைநாட்டத்திற்குத் தடையாக விளங்குபவள். உடலைப் பழித்தல் என்பது சித்தர்களின் நோக்கமன்று. உடலோடு முத்தி அடைவதே

சித்தர்களின் நோக்கமாதலால் உடலைப் பேண வலியுறுத்துவர். பட்டினத்தார் மட்டும் அதிலிருந்து மாறுபட்டவராக விளங்குகிறார்.

பெண்ணை இழிந்த பிறவியாகக் கருதியதுடன், பெண்ணாசை இறையருள் கிடைக்கத் தடையாக அமையும் என்றும் குறிப்பிட்டுள்ளார் வள்ளலார்:

***"மருவு பெண்ணாசையை மறக்க வேண்டும்"[74].***

***"தெவ்வின் மடவரைத் திளைக்கின்றாய் தீவிடத்தை***
***வவ்வினும் அங்கோர் மதியுண்டே"[75].***

***"கண்ணைக் காட்டி இருமுலை காட்டி மோகத்தைக்***
***காட்டி அதைக் கொண்டே அழி***
***மண்ணைக் காட்டிடும் மாய வனிதைமார்"[76].***

***"மின்னும் நுண்ணிடை பெண்பெரும் பேய்கள்"[77].***
***"பாவம் ஓர் உருவாகிய பாவையர்"[78].***

பெண்ணாசையை மறக்க வேண்டும் என்றும் கொடிய விடத்தைக் காட்டிலும் பெண்ணாசை தீங்கானது என்றும் குறிப்பிடுகிறார்.

"நகரத்திற்கு வெகு அருகிலேயே ஆசிரமம் ஒன்று இருந்தது. தள்ளாத வயதிலும் ஆசிரமத்தின் குரு ஓடியாடித் தமது அலுவல்களைச் செய்து வந்தார்.

அவரது சீடர்களோ மிகவும் இளைஞர்களாக இருந்தனர். அதனால் சமையல் வேலை உட்பட அனைத்து வேலைகளையும் அவரே செய்தார். சீடர்கள்

கூடமாட ஒத்தாசை செய்தனர். ஆனால் அதற்கு அவர்களுக்கு சோம்பலாயிருந்தது.

ஒருநாள் சீடர்கள் ஒன்றுகூடிக் குருவிடம், 'குருவே! சமையல் வேலைக்கு மட்டுமாவது ஆள் போட்டுக் கொள்ளலாமே!' என்று வேண்டினர்.

'நம்மால் செய்யக் கூடியவற்றை நாமேதான் செய்ய வேண்டும். அதுதான் எப்போதும் சிறந்தது'! என்றார் குரு.

'குறைந்தபட்சம் பாத்திரங்களைத் தேய்ப்பதற்காவது ஓர் ஆளைப் போடலாமே'! சீடர்கள் விடுவதாயில்லை.

அதற்கும் குரு சிரித்தார்.

'அவற்றிற்கு மட்டும் வேலைக்கு ஆட்கள் வருவதில்லை. வந்தாலும் அவர்கள் செய்யும் வேலை அவ்வளவு சுத்தமாயிராது'.

'பாத்திரங்கள் தேய்க்கப் பெண்களை நியமிக்கலாமே' சீடர்களின் கோரிக்கை தொடர்ந்தது.

'தேவையில்லாத தொல்லை'! என்றார் குரு. 'நீங்கள் வந்திருப்பது மன ஒருமைப்பாட்டிற்காக இது நேர் எதிராகச் செயல்பட்டு உங்கள் கவனத்தைச் சிதறடிக்கும். எண்ணங்களை அலைபாய வைக்கும்'.

'ஒரு வயதான பெண்மணியை நியமித்தால் கூடவா?' என்றான் ஒரு சீடன்.

உணவு முடித்துச் சீடர்கள் உறங்கச் சென்றதும் குரு மெல்ல எழுந்தார். கதவை வெளிப்புறம் பூட்டிக்கொண்டு எங்கோ சென்றுவிட்டார்.

நள்ளிரவு வேளையில் சாப்பிட்ட உணவின் உப்பு வேலை செய்ய ஆரம்பித்தது. சீடர்கள் ஒவ்வொருவராக எழுந்தனர். கதவைத் தள்ளினால் அது வெளிப்புறம் பூட்டப்பட்டிருந்தது தெரிந்தது. அறையின் உட்புறம் தண்ணீர் ஒரு சொட்டுகூட இல்லை. உள்தொட்டியில் பாத்திரம் கழுவிய அழுக்கு நீர் மட்டுமே இருந்தது.

இதற்குள் பலருக்கு விக்கல் எடுக்க ஆரம்பித்துவிட்டது. அவர்களில் ஒருவன் தொட்டியில் கைவிட்டு மேலாகத் தெளிந்திருந்த நீரை அள்ளிப் பருகினான். அதைப் பார்த்து அடுத்தவன் மேலோட்டமாக நீரைப் பருகினான். அவனைப் பின்பற்றி இன்னொருவன்... அப்படியே தொட்டிநீரும் தீர்ந்துவிட்டது.

மறுநாள் காலை தாங்கள் பட்ட கஷ்டத்தைக் குருவிடம் கூறினார்கள்.

குரு சிரித்தார்.

'கொஞ்ச நேரத்திற்குத் தொண்டை வறண்டு போனதுமே அழுக்குத் தண்ணீரையே குடிக்கத் தயாராகிவிட்டதே உங்கள் மனம்! இந்நிலையில் வயதான ஒரு பெண்ணை வேலைக்கு அமர்த்தினால் என்ன நேரிடும்? தாகத்திற்கு எது கிடைத்தாலும் போதும் என்ற நிலையில் அல்லவா உங்கள் மன உறுதியை வைத்திருக்கிறீர்கள்'.

***சீடர்கள் வெட்கித் தலைகுனிந்தனர்"*** [79].

ஞானத்திற்கு, முத்தி பெறுதற்குப் பெரும் தடையாகப் பெண்ணாசை வாய்த்திடல் உண்டு. எனவே பெண்ணைத் துறவுக் காலத்தில் விலக்கி இருப்பதே சிறந்தது என ஜென் இலக்கியக் கதை உணர்த்துகின்றது.

> ***"பெண்ணினல்லார் ஆசைப் பிறப்பினை விட்டொழித்துக்***
> ***கண்ணிரண்டும் மூடிக் கலந்திருப்பது எக்காலம்"[80].***

என்று பத்திரகிரியாரும்,

> ***"வாளான விழியுடைய பெண்ணைச் சேரும்***
> ***மயக்கமுற்று நிற்ப தெப்போ"[81].***

என்று சட்டைமுனியும் பெண்ணாசை கூடாதென்றனர். பெண் என்பவள் மாயை என்று இடித்துரைக்கும் சித்தர்களின் கருத்துக்களுக்கு மாறாகத் திருமூலர், சிவவாக்கியார், பத்திரகிரியார் போன்றோர் பெண்மைக்கு ஆதரவு கொடுத்திருப்பது சித்தர்களின் முற்போக்கான சிந்தனையைக் காட்டுகிறது.

## 3.8 மூடநம்பிக்கைகளுக்கு மறுப்பு

சமுதாய முன்னேற்றத்தில் சமுதாயக் குறைகள் களையப்பட வேண்டும். திருத்தம் பெற்ற சமுதாயம் மற்றும் குறை நீக்கிய சமுதாய முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட சித்தர்கள் மக்கள் பின்பற்றிய மூடநம்பிக்கைள் பலவற்றை மறுக்கின்றனர்.

இறந்தவர்கள் மீண்டும் பிறப்பார்கள் என்ற மூடநம்பிக்கையானது மக்களிடையே நெடுங்காலமாக இருந்து வந்துள்ளது. சமயத்தின் பெயரால் நம்பிக்கையைப் பரப்பினர். சிவவாக்கியர் தமது பாடலில்,

*"கறந்தபால் முலைப்புகா கடைந்த வெண்ணெய் மோர்புகா*
*உடைந்துபோன சங்கினோசை உயிர்களும் உடற்புகா*
*விரிந்த பூ உதிர்ந்தகாயும் மீண்டும் போய் மரம்புகா,*
*இறந்தவர் பிறப்பதில்லை இல்லைஇல்லை இல்லையே"*[82]

என மறுபிறப்புப் பற்றிய மூடநம்பிக்கை குறித்துப் பேசுகின்றார்.

*"என்னகத்துள் எங்குநான் எங்குநாடி ஓடினேன்?*
*என்னகத்துள் என்னைநான் அறிந்திலாத தாகையால்*
*என்னகத்துள் என்னைநான் அறிந்துமே தெரிந்தபின்*
*என்னகத்துள் என்னைஅன்றி யாதுமொன்றும் இல்லையே"*[83].

*"பேய்கள் பேய்கள் என்கிறீர் பிதற்றுகின்ற பேயர்காள்*
*பேய்கள்பூசை கொள்ளுமோ பிடாரி பூசை கொள்ளுமோ*
*ஆதிபூசை கொள்ளுமோ அனாதி பூசை கொள்ளுமோ*
*காயமான பேயலோ கணக்கறிந்து கொண்டதே"*[84]

எனும் சிவவாக்கியாரின் பாடல்கள் பேய், பிசாசு எனப் பிதற்றும் மூடர்களின் வாதங்களைப் பொய்யுரை என நிறுவும் வகையில் இருக்கின்றன.

*"அந்தணருக்கு ஆவை அளித்தோர்கள் ஆவிக்குச்*
*சொந்தமோ முந்தியடி குதம்பாய்*
*சொந்தமோ முத்தியடி"*[85].

*"தந்தைதாய் செய்வினை சந்ததிக்கு ஆகுமென்பார்*
*சிந்ததை தெளிந்திலரே குதம்பாய்*
*சிந்தை தெளிந்திலரே"*[86].

தந்தை, தாய் செய்த நல்வினையும் தீவினையும் அவர்களின் சந்ததியினருக்குச் சென்று சேரும் என்ற நம்பிக்கையை மறுத்துரைப்பதுடன், அப்படிக் கூறுபவர்கள் தெளிந்த அறிவில்லாதவர்கள் என்றும், அவரவர் செய்த வினை அவரவர்க்கு உரியதாகும் என்றும் குதம்பைச் சித்தர் குறிப்பிடுகிறார்.

## 3.9 சாதி எதிர்ப்பு

சித்தர் இலக்கியங்கள் தாம் வாழ்ந்த சமுதாயத்தில் நிலவிய பல்வேறு கொடுமைகளுக்கு எதிராகச் சித்தர்கள் எழுப்பிய கண்டனக் குரலுக்குச் சான்று பகர்கின்றன. சித்தர்கள் தமது இலக்கியங்களில் கண்டித்த சமுதாயக் கொடுமைகளுள் சாதியப் பாகுபாடு முதன்மையானது. சாதிய அமைப்பை வேரோடு களைய வேண்டும் என்ற கருத்து அவர்களுடைய பாடல்களில் மையம் கொண்டுள்ளது. கடவுள், சமயம், சாத்திரம், வேதியர் குறித்த பாடல்களில் சித்தர்களின் சாதி மறுப்பு பேசப்படுகின்றது.

'பிறப்பால் வேறுபாட்டை நீக்கி மனித குலம் அனைத்தும் ஒன்றே என்ற சமுதாயச் சிந்தனையை வலியுறுத்தினர். வேதங்கள், சாத்திரங்கள், புராணங்கள் போன்ற சமய நூல்களையும், சடங்கு சம்பிரதாயங்களையும் எதிர்க்கக் காரணம் மக்களிடையே ஏற்றத்தாழ்வினை கற்பித்ததே. சமயத்துறையில் சித்தர்கள் வெளிக்காட்டி எதிர்ப்பு உண்மையில் சமூகத் துறையில் இருந்த முரண்பாட்டின் விளைவேயாம்' என க. கைலாசபதி சித்தர்களின் சாதி எதிர்ப்பு குறித்துப் பேசுகின்றார்.

'ஒன்றே குலம்' என்று கூறிச் சென்ற திருமூலரை அடியொற்றி வந்த சித்தர்களுள் சிவவாக்கியர் குறிப்பிடத்தக்கவராகிறார். சமுதாயத்தின் மேல்தட்டு

மக்களின் நலனுக்காக ஏற்படுத்தப்பட்ட சமத்துவமற்ற சாதி அமைப்பைக் கடுமையாக எதிர்த்ததுடன் அந்த அமைப்பிலுள்ள முரண்பாட்டை அறிவுப்பூர்வமாகக் கேள்விக்குட்படுத்தியுள்ளார் சிவவாக்கியர்.

"*சாதியாவது ஏதடா? சலம் திரண்ட நீரெலாம்*
*பூதவாசல் ஒன்றல்லோ! பூதம் ஐந்தும் ஒன்றல்லோ!*
*காதில் வாளி காரை கம்பி பாடகம் பொன் ஒன்றலோ*
*சாதி பேதம் ஓதுகின்ற தன்மைஎன்ன தன்மையே!*[87].

அனைத்து மனிதர்களின் பிறப்பையும் தீர்மானிப்பது சுக்கிலம் ஆகும். இந்த உண்மையை உணராத அறிவிலிகள்தான் மனிதர்களைச் சாதி, குலம், கோத்திரம் என்று பாகுபடுத்துகின்றனர்.

"*பறைச்சியாவது ஏதடா? பனத்தியாவது ஏதடா?*
*இறைச்சி தோல் எலும்பிலும் இலக்கமிட்டு இருந்ததோ!*
*பறைச்சி போகம் வேறதோ? பனத்திபோகம் வேறதோ?*
*பறைச்சியும் பனத்தியும் பகுத்துப் பாரும் உம்முளே*"[88].

சமுதாயம் சீராகச் செயல்படச் சமுதாயத்திற்குள் பல்வேறு நிறுவனங்கள் காணப்படுகின்றன. ஒழுக்கப்பூர்வமானதாகவும் சமூகப்பூர்வமானதாகவும் நிர்ணயிக்கத்தக்கவை எனக் கருதத்தக்க சமூக நடவடிக்கைகளின் சாதாராண முறையே நிறுவனம் ஆகும். சமுதாயத்தில் பல்வேறு நிறுவனங்கள் காணப்பெறுகின்றன. அவற்றுள் ஒன்று சாதி முறை எனலாம்.

'சாதி என்ற சொல்லுக்குப் பொருள் கூறும் வகையில், Caste என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நிகராச் சாதி என்ற சொல் தமிழில் பயன்படுத்தப்படுகிறது. இவ்ஆங்கிலச் சொல் "காஸ்டா" என்ற போர்ச்சுகீசிய

சொல்லினின்று உருவாக்கம் பெற்றதென்பர். டார்வின், சாதி என்பது சமுதாயப் பிராணிகளின் பலதரப்பட்ட பிரிவுகளைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது' என தா. ஈசுவரப்பிள்ளை கூறுகின்றனர்.

இது சாதி முறையின் தோற்றம் பற்றிக் கூறுகையில் திடீரெனத் தோன்றிய புரட்சி இயக்க விளைவு அன்று என்றும் அது படிப்படியாகவும் காலங்காலமாகவும் நிகழ்ந்துள்ள மாற்றம் என்றும் சமூகவியலாளர்கள் கூறுவர்.

மிகப் பழங்காலத்திலேயே இந்தியாவில் காணப்பட்ட சாதி எனும் சமூக நிறுவனம் படிப்படியாக வளர்ச்சி பெற்று ஒரு சமுதாயத் தீங்கு விளைவிக்கும் நிறுவனமாகவும், பல கொடிய தன்மைகளைக் கொண்ட நிறுவனமாகவும் மாறியது. மேலும் இது சமுதாய மக்களிடையே தரப்பிரிவுகளைத் தோற்றுவித்த இன்றியமையாக் காரணியாகவும் மாறியது. சமுதாய நல விரும்பிகளான சித்தர்கள் இம்மாற்றத்தைச் சுட்டிக்காட்டி மக்களைத் திருத்தும் பணியில் பெரும் பங்காற்றினர்.

சாதியம் எனும் அமைப்பு இந்திய சமூகத்தை அடிப்படையாகக் கொண்டது. சாதியின் பொருட்டு எழுந்த பிரச்சினைகளையும் அதற்கான தீர்வுகளையும் இந்தியச் சூழலில் வாழ்ந்த சித்தர்களின் பாடல்களில் காணமுடிகிறது. சீனா, ஜப்பான் போன்ற பிற ஆசிய நாடுகளில் தோன்றி வளர்ந்த ஜென் இலக்கியங்களில் சாதியைப் பற்றிய குறிப்புகளைத் காண முடியவில்லை. ஆனால், மனிதர்கள் அனைவரும் ஒரே தரத்தினர் எனும் கருத்திலமைந்த கதையினைக் காணமுடிகின்றது.

“வருணங்களுக்கிடையே ஏற்பட்ட கலப்புத்தான் பல்வேறு சாதிப் பிரிவுகள் தோன்றக் காரணமாய் இருந்தது என்று மனு சுருமிதி கூறுகிறது. மண உறவுகள் தொடர்பான தடை இருந்தபோதிலும் வருணங்களுக்கிடையே கலப்பு ஏற்பட்டு, அந்தக் கலவில் பிறந்தவர்கள் வருணக் கலப்பிற்கு ஏற்பத் தனித்தனிப் பிரிவுகளாய் அமைத்தனர். அந்தக் கலப்புப் பிரிவுகள் வருணங்களுடன் கலந்தபோதும், தம்முள் கலந்த போதும் அத்தகைய கலப்புகளின் விளைவாக மேலும் பல்வேறு கலப்புப் பிரிவுகள் தோன்றின. கலப்புகள் பெருகப் பெருக ஒவ்வொரு கலப்புப் பிரிவுகள் தோன்றின. கலப்புகள் பெருக பெருக ஒவ்வொரு கலப்பு வகைக்கும் ஒரு தனிப்பிரிவு அமைவதால் எண்ணற்ற கடைபிடிக்கத் தொடங்கியபோது அவை சாதிகளாக உருவெடுத்தன என்பது மனுசுருமிதியின் கருத்து”[89].

சங்ககால இலக்கியங்களிலும் தொல்காப்பியத்திலும் பிறப்பால் உயர்வு தாழ்வு சொல்லப்படவில்லை என அறிஞர்கள் கூறுகின்றனர். என்னும் தமிழகத்தில் சாதிக் கொடுமை கொடிகட்டிப் பறந்தது என்பது வரலாற்று உண்மை. ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்று கணியன் பூங்குன்றனாரும், ‘பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்’ என்று திருவள்ளுவரும் அற முரைத்து வாழ்ந்த நம் செந்தமிழ்த் திருநாட்டில்தான் பிறப்பால் உயர்ந்தவர்; இவர் தாழ்ந்தவர் என்று அறிவியலுக்கும் சமுதாய நீதிக்கும் சிறிதும் பொருத்தமில்லாத வகையில் இன்று பிறப்பு வழிப்பட்ட சாதிப் பாகுபாடு பேசப்படுகிறது. பிறப்பு வழிப்பட்ட சாதி உயர்வு தாழ்வுகளைக் கற்பிப்போர், தலை கவிழ்ந்து நாணுமாறு மக்கள் யாவரும் சரிநிகர் சமானமாக மதிக்கப்பட வேண்டும் என்று கருதுகிற முற்போக்குச் சிந்தனையாளர்களும், பகுத்தறிவாளர்களுமாகிய சான்றோர்கள்

அனைவரும் ‘ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்’ என்னும் திருமூலர் பாடலை நெஞ்சுயர்த்திப் பாடி வருகின்றனர். அப்படிப் பாடிச் சமுதாய முன்னேற்றத்திற்கு வித்திட்டுச் சென்ற சமுதாய முற்போக்குச் சிந்தனையாளர்கள்தான் சித்தர்கள்.

சித்தர்கள் தமிழ்நாட்டில் கி.பி. 14, 15, 16 ஆம் நூற்றாண்டளவில் சமுதாய நீதிக்காகக் குரல் கொடுத்தவர்கள். சமூக ஏற்றத்தாழ்வுகளைப் போக்குவதற்காக இலக்கியம் படைத்தவர்கள். இவர்கள் வேத பிராமண மரபுக்கு எதிரான ஒரு மாற்றுச் சிந்தனையைத் தமது படைப்புகளில் முன்னிறுத்தியுள்ளனர். சமுதாய மக்களது நல்வாழ்வில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள் சித்தர்கள். சமுதாயத்தில் மலிந்திருந்த சாதிப் பாகுபாடுகள் இவர்களை வெகுளச் செய்தன. பிறப்பினால் சாதிகள் தோன்றுவதில்லை; உழைப்பதற்காகவே சாதிகள் தோன்றின. கீழான செயல்களைச் செய்பவர்களே இழிந்தவர்கள் சாத்திரங்களும் சடங்குகளுமே சாதி உயர்வை வலுப்பெறச் செய்கின்றன. எனவே அவற்றை விலக்குங்கள் என்று சித்தர்கள் வேண்டுகின்றனர். பொய்பான சமய, சமூக அமைப்புகளுக்கும் கட்டுப்படாமல் வாழ்ந்தும், வாழுமாறு மக்களை வலியுறுத்தியும் ஆரவாரமற்ற தூயதொரு யோகப் பண்பாட்டுக்குத் தமிழ் மண்ணில் வித்திட்டவர்கள் சித்தர்கள்.

மனித சமுதாயத்தில் சாதிப் பிரிவுகள், சாதிக் கொடுமைகள் நாளுக்கு நாள் வளர்ந்து அவை மனிதனின் முன்னேற்றத்தையும் மனிதத் தன்மையையும், மனிதனின் சம உரிமையையும் தடுக்கும் போக்கையும் சுட்டிக் காட்டும் சித்தர்கள் அவை எழுந்த நோக்கத்தினை சமுதாய மக்கள் முழுமையாக அறிய வேண்டும் என்று விரும்பிய சமுதாயச் சிற்பிகளாக விளங்கி மனித வாழ்க்கைக்குத்

தேவையான செம்மையான நெறிமுறைகளைத் தெளிவாகத் தம் பாடல்களில் பதித்துச் சென்றனர். ஒவ்வொருவரும் தொழில் செய்து பிழைப்பதற்காகவே சாதிகள் அமைந்தன என்பது சித்தர்கள் கருத்து.

### 3.9.1 பிறப்பால் அனைவரும் சமம்

***"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா***
***செய்தொழில் வேற்றுமை யான்"***[90]

என்றார் வள்ளுவர். ஆனாலும் நம்நாட்டில் பிறப்பின் அடிப்படையில்தான் வாழ்வே அமைகின்றது.

"பிற சமுதாயங்களில் தனிமனிதனின் சமுதாய அந்தஸ்து (Social Status) செல்வம், கல்வி போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு தீர்மானிக்கப்படும் நிலையில் இந்திய சமுதாயத்தில் தனிமனிதனின் பிறப்பை அடிப்படையாகக் கொண்டு தீர்மானிக்கும் நிலையும் உள்ளது. பிறப்படிப்படையில் ஒருவன் ஒரு குறிப்பிட்ட சாதியில் பிறந்துவிட்டால் அவன் அக்குறிப்பிட்ட சாதியிலிருந்து மற்றொரு சாதிக்கு மாறும் வாய்ப்பின்றி வாழ்க்கை முழுவதும் அச்சாதியிலேயே வாழ்ந்து இறக்க வேண்டிய கட்டாயமுளது"[91].

அணிகலன்கள் வேறுபட்டாலும் உலோகம் ஒன்றுதானே. அதைப் போல மக்கள் பல பிரிவினராயினும் பிறப்படிப்படையில் அனைவரும் ஒன்றே என்கிறார் சிவவாக்கியர். இப்பொருள் படவே கொங்கணச் சித்தரும்,

***" சாதி பேதங்கள் சொல்லுகிறீர் தெய்வம்***
***தானென் றொருவுடல் பேத முண்டோ?***
***ஓதிய பாலதி லொன்றாகி யதிலே***
***உற்பத்தி நெய் தயிர் மோராச்சு"***[92]

என்று பாடுகிறார்.

சாதி பேதம் பாராட்டிச் சமுதாயத்தின் ஒற்றுமையைக் குலைப்பவர்களை,

***"வகைக் குலங்கள் பேசியே வழக்குரைக்கும் மாந்தர்கள்"[93].***

***"சாதி பேதம் என்பதொன்று சற்றும் இல்லை இல்லையே"[94].***

என்று பாடுவதன் மூலம் ஆண்சாதி, பெண்சாதி மட்டுமே சமூகத்தில் உண்டு. வீணான சாதிகள் சமுதாயத்தை வீணடிக்கும் என்று உணர்ந்த குதம்பைச் சித்தர் சாதிப் பிரிவுகள் அறவே இல்லை என்கிறார்.

***"காணப்பா சாதிகுலம் எங்கட் கில்லை***
***கருத்துடனே என்குலம் சுக்கிலந்தான் மைந்தா***
***தோணப்ப தோணாமாற் சாதி பேதஞ்***
***சொல்லுவான் சுருக்கமாக மாண்டு போவான்"[95].***

சாதி குலம் என்ற வேறுபாடுகள் அனைத்தும் சித்தர்களாகிய எங்களுக்கு இல்லை; அனைவரும் ஒன்று என்பதுதான் எங்கள் கொள்கை என்கிறார். அனைவரின் பிறப்பிற்குக் காரணம் சுக்கிலம்தான். சாதி பேதம் பாராட்டுபவர் அழிந்து போவர்.

***"சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்***
***சந்தை வெளியில் கோலை நாட்டுவோம்"[89].***

என்று கூறுவதன் மக்களிடையே சமத்துவத்தை ஏற்படுத்தத் தடையாக இருக்கும். சாதியம் எனும் குப்பையைத் தீயிட்டு அழிப்போம் என்று சாதியத்தை எதிர்க்கிறார்.

இறைவன் படைப்பில் அனைவரும் ஒன்றே. சமுதாயத்தில் நிலவுகின்ற ஏற்றத்தாழ்வுகளைப் போக்குவதற்கு மொழி, இன, நிற வேறுபாடுகள் இருந்தாலும் பிறப்பின் அடிப்படையில் அனைவரும் ஒன்றே என்ற தத்துவத்தை ஜென் மார்க்கமும் வலியுறுத்துகின்றது. குட்டை - நெட்டை, உயர்ந்தவன் - தாழ்ந்தவன், ஏழை - பணக்காரன், கறுப்பு - சிவப்பு போன்றதான வேறுபாடுகளைக் களைந்து தன்னைப் போலப் பிறரையும் நேசிப்பதன் அறத்தினை வலியுறுத்துகின்றது.

'நீ நான் தான்' எனும் தலைப்பில் அமைந்த ஜென் கதை படைப்பு அடிப்படையில் அனைவரும் ஒன்றே எனும் கருத்தை விளக்கி அமைகிறது.

''ஐயோ நான் எவ்வளவு அற்பமானவன். அந்தப் பெரிய அலைகள் பாய்ந்து வந்து அமுக்கி அழித்து விடுகின்றனவே' என்று மிகவும் வருத்தப்பட்டது ஒரு சிற்றலை.

அப்போது ஒரு பெரிய அலை பாய்ந்து வந்தது.

'ஐயோ'! என்று அலறியது சிற்றலை.

'உன் முகத்தை நீ பார்த்ததில்லையா, உண்மையான உன் முகத்தை? என்று கேட்டது பேரலை.

'இல்லை நான் யார்? நான் ஒரு அலைதானே? என்று கேட்டது சிற்றலை.

'நீ அலைதான். ஆனால் அலை உன் வடிவமல்ல. அது ஒரு தற்காலிக வடிவம். நீ தண்ணீர்'.

'தண்ணீரா?''

‘ஆம் தண்ணீர். என்னைப் போல, என் வடிவமும் தற்காலிக வடிவம்தான். அடிப்படையில் நானும் தண்ணீர்தான் உன்னைப் போல. வீணாக நீ கவலைப்படுகிறாய். குழப்பமடைகிறாய். உன் உண்மையான நிலையை உணர்ந்தால் அச்சம் இல்லை. அவலம் இல்லை’.

‘அப்படியா? நீயும் நானும் ஒன்றா?’

‘ஆம் ! மாபெரும் இயற்கையின் வெவ்வேறு தற்காலிக வடிவங்கள். அடிப்படையில் எல்லாம் ஒன்றே கவலை விடு’ என்றது பேரலை.

‘உலகின் அனைத்துப் பொருள்களும், உயிர்களும் ஆதி இயற்கையின் மூல அடிப்படையின் வெவ்வேறு வடிவங்களே. பிரிவினை எண்ணமே நம் ஆசா பாசங்களுக்கும், அச்சம், கவலைகளுக்கும் காரணம்’’[97].

பிறப்பால் அனைவரும் ஒன்றே; தொழில் சார்ந்த அடிப்படையில் வேறுபாடு காணப்பட வேண்டுமே தவிர பிறப்பால் அல்ல; நானும் நீயும் நன்றாக இருப்பது அவசியம் (I am Ok. You are Ok); அதுவே சமுதாய சமத்துவத்தை வளர்க்கக்கூடியது என்பதான கருத்துகளை மேற்சொன்ன கதை வலியுறுத்துகின்றது.

‘விஞ்ஞான நோக்கும் அறிவும் மனிதனின் கற்பனையின் விளைவல்ல; வாழ்க்கைத் தேவைகள் அவசியப் பொருட்கள் ஆகியவற்றின் அடிப்படையில் தோன்றுவன அவை’ என்கிறார் கைலாசபதி. இந்த நிலைகளில் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு சமூக அமைப்பினுள்ளே நிறுவன எதிர்க்குரலைத் தந்தவர்கள் சித்தர்கள்.

***"உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி?***
***உலகத்தின் மூடர்களுக் குண்டோ உணர்ச்சி?***
***புளியிட்ட செம்பிற் குற்றம் போமோ? அஞ்ஞானம்***
***போகாது மூடருக் கென்று ஆடுபாம்பே"[98].***

என்று சாதி, சமய எதிர்ப்பைத் தெரிவிக்கின்றனர்.

***"நட்ட கல்லும் பேசுமோ? நாதன்உள் இருக்கையில்***
***சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?"[99]***

என சிவவாக்கியரும், 'உள்ளமே கோயில் ஊனுடம்பே ஆலயம்' என்று திருமூலரும் தெய்வத்தின் இருப்புநிலை குறித்துப் பேசுகின்றனர். ஜென் இலக்கியம் 'தாய் தான் கடவுள்' என்று போற்றுகின்றது.

"ஓர் இளைஞன் ஞான நாட்டம் கொண்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டான்.

ஊர் ஊராகப் போய்க்கொண்டே இருந்தான்'.

ஒருநாள் வழியில் ஒரு துறவியைக் கண்டான்.

'எங்கே போகிறாய் மகனே?' என்று கேட்டார் அவர்

'ஞானத்தைத் தேடிப் போகிறேன் சுவாமி. தலைசிறந்த புத்த குரு ஒருவரைக் கண்டு அமர்ந்து ஞானம் பெற வேண்டும்'என்றான் இளைஞன்.

துறவி முகத்தில் ஒரு மர்மப் புன்னகை தோன்றி மறைந்தது. 'புத்தகுரு என்ன, புத்தரையே நீ சந்திக்கலாம் தம்பி!' என்றார் அவர்.

'என்ன! புத்தரையே சந்திக்கலாமா!' அது முடியுமா சுவாமி? என்று கேட்டான் இளைஞன் ஆவல் பொங்க.

‘முடியுமப்பா’. கவனமாகக் கேள். முதலில் நீ வீட்டிற்குத் திரும்பு. வழியில் எங்காவது, யாராவது தம் காலணிகளை மாற்றி அணிந்திருப்பதைக் கண்டதால் அவர்தான் புத்தர் என அடையாளம் கண்டுகொள்’ என்றார் அந்தத் துறவி.

இளைஞன் வந்த வழியே திரும்பிப் பயணம் புறப்பட்டான்.

வழியில் காலணிகளை யாரும் மாற்றியணிந்து நடப்பதை அவன் காணவில்லை.

இரவு அகால வேளையில் தன் வீட்டை அடைந்து கதவைத் தட்டினான். அவன்.

நீண்ட காலத்திற்குப் பிறகு வீடு திரும்பிய மகனின் குரல் கேட்டு அவன் தாய் அவசர அவசரமாக ஓடி வந்து கதவைத் திறந்தாள்.

அசந்தர்ப்பமாக அவள் காலைப் பார்த்த இளைஞன் திடுக்கிட்டுவிட்டான்.

அவள் அவசரத்தில் காலணிகளை மாற்றி அணிந்திருந்தாள்!. தாயில் புத்த தரிசனம்!”[100]

கடவுளைக் கல்லில், வழிகளில் தேடாதே, அது உன் அருகிலேயே, உன்னை நேசித்துக் கொண்டு, அளப்பறிய பாசம் கொண்டு இருக்கிறது என்று தாயிலும் கடவுளைக் காணலாம் என்பதை மேற்சொல்லப்பட்ட கதை உணர்த்துகிறது.

சமுதாயத்தில் தனிமனித செயல்பாடுகள் மூலம் ஒருமைப்பாட்டினையும், சகோதரத்துவத்தையும், சமத்துவத்தையும் மலர்ந்திடச் செய்திடலாம். எனவேதான்

சித்தர்கள் வாழ்வியல் சிந்தனைகளை சமுதாய முன்னேற்றத்திற்கு ஊன்றுகோலாக்கினார். சண்டை சச்சரவுகள் இன்றி மனிதன் வாழ உண்மையைக் கடைபிடித்து, ஒழுக்க நெறிகளுடன் தன்னைப் போல் பிறரையும் பாவித்து, ஏழைகளுக்கு வாழும் நிலையில் சமத்துவ சமுதாயம் மலர்ந்திடவும் எழுச்சிமிகு சமுதாயம் மலர்ந்திட ஜென் தத்துவமும் வழிவகை கூறுகிறது.

"எந்தச் சாதியிலும் இரக்கத் துணிந்து கொண்டேன்"[101] எனப் பட்டினத்தார் வேறுபாடற்ற சமுதாயம் மலரப் பாடுகின்றார்.

*"நில்லென்ற பெரியோர்கள் பாடையாலே*
*நீருலகம் தன்னுள்ளே நாலு வேதம்*
*வல்லமையாச் சாத்திரங்கள் இருமூன் றாக*
*வயிறுபிழை புராணங்கள் பதினெட் டாகக்*
*கல்லுகளைக் கரைப்பது போல வேதாந்தங்கள்*
*கட்டினார்கள் அவர்கள் பாடை யாலே*
*தொல்லுலகில் நற்சாதி அனேகம் சாதி*
*தொடுத்தர்கள் அவர்கள் பிழைக்கத் தானே"[102].*

வேதங்கள், புராண சாத்திரங்கள் முதலான நூல்களும், நான் வேறு சாதி, நீ வேறு சாதி என்று வேற்றுமை பாராட்டக்கூடிய சாதிய முறைகளும் ஊண் உடம்பை நம்பியிருந்தவர்கள் பிழைப்பதற்காக உருவாக்கப்பட்டவையேன்றி வேறு எதற்கும் அல்ல என்று சமயம் போதிக்கும் வெறும் நூல்களை எரித்திட வேண்டுமென்கிறார் வால்மீகர்.

*"மனுப்பிறந்து ஓதிவைத்த நூலிலே மயங்குறீர்".*
*நகைக்குமாறு மனளரிக்க நாளும் நாளும் நாடுவீர்"[103].*

*"வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமும் தரிக்கிறீர்*
*சிந்தையுள் நினைத்துமே தினம்செபிக்கும் மந்திரம்*
*முந்து மந்திரத்திலோ மூல மந்திரத்திலோ*
*எந்த மந்திரத்திலோ ஈசன்வந்து இயங்குமே?"*[104]

*"ஞானநூல்கள் தேடியே நவின்ற ஞானோதயங்காள்*
*ஞானமான சோதியை நாடி உள்அறிகிலீர்*
*ஞானம்ஆகி நின்றதோர் நாதனை அறிந்தபின்*
*ஞானம் அல்லதுஇல்லை வேறுநாம் உரைத்ததுண்மையே"*[105].

*"ஓதும்நாலு வேதமும் உரைத்த சாத்திரங்களும்*
*பூதத் துவங்களும் பொருந்தும் ஆகமங்களும்*
*சாதிபேத உண்மையும் தயங்குகின்ற நூல்களும்*
*பேதபேதம் ஆகியே பிறந்துஉழன்று இருந்ததே"*[106].

*"புத்தகங்களைச் சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்*
*செத்திடம் பிறந்திடம்அது எங்கன்என்று அறிகிலீர்*
*அத்தனைய சிந்தனை அறிந்து நோக்க வல்லீரேல்*
*உத்தமத்துள் ஆயசோதி உணரும்போகம் ஆகுமே"*[107]

என சிவவாக்கியார் தம் பாடல்களின் வெறும் புத்தகங்களினால் சாத்திரங்களினால் மக்களிடையே ஒற்றுமை பாராட்டல் அரிது. "இறைவன் ஒருவனே என்பதை உணரும்போது அனைவரும் சமம்" என்ற ஏற்றத்தைப் பெறமுடியும் என்கிறார்.

*"சாதிகுலம் என்றும் சமயமதம் என்றும்*
*நீதிஇயல் ஆச்சிரம தீட்டென்றும் - ஓதுகின்ற*

*பேயாட்டம் எல்லாம் பிதிர்ந்தொழிந்தவே பிறர்தம்*

*வாயாட்டம் தீர்ந்தனவே மற்று"[108].*

என்று வள்ளலார் கருத்துத் தெரிவிக்கின்றார்.

*"ஆதி பரம்பிரமம் ஆக்குமக் காலையில்*

*சாதிகள் இல்லையடி குதம்பாய்*

*சாதிகள் இல்லையடி"[110].*

*"பற்பல சாதியாய் பாரிற் பகுத்தது*

*கற்பனை ஆகுமடி குதம்பாய்*

*கற்பனை ஆகுமடி"[111].*

*"பார்ப்பாரை காத்தார் பறையரைப் போலவே*

*தீர்ப்பாய்ப் படைத்தாரடி குதம்பாய்*

*தீர்ப்பாய்ப் படைத்தாரடி"[112].*

*"ஆண்சாதி பெண்சாதியாரும் இருசாதி*

*வீண்சாதி மற்றவெல்லாம் குதம்பாய்*

*வீண்சாதி மற்றவெல்லாம்"[113].*

*"நீதிமானென்றே நெறியாய் இருப்பானே*

*சாதிமான் ஆவானடி குதம்பாய்*

*சாதிமான் ஆவானடி"[114].*

எனக் குதம்பைச் சித்தர் தம் பாடல்களில் சாதி எதிர்ப்புக் குறித்து பாடியுள்ளார்.

*"காணவேண்டும் என்றுநீர் கடல்மலைகள் ஏறுவீர்*

*ஆணவம் ஆதல்லவோ அறிவிலாத மாந்தரே*

*வேணும்என்று அவ்வீசர் பாதம்மெய்யுளே தரிப்பீரேல்*

*தாணுவாக நின்ற சீவன்தான் சிவன் அதாகுமே"[115].*

சிவவாக்கியர் போன்றோரது குரலில் எமது காலத்துப் போலச் சமுதாய உணர்வு தோய்ந்துள்ளது. இவற்றையெல்லாம் நோக்கும் பொழுது சித்தர்கள் கிளர்ச்சியாளர்கள் (Rebels) என்று கூறத் தோன்றுகிறது என வள்ளலார் கூறுகின்றார்.

*“தொல்லுலகில் நால்சாதி அநேகம் சாதி*
*தொடுத்தார்கள் அவரவர்கள் பிழைக்கத் தானே”.*

மனித சமுதாயத்தில் சாதிப் பிரிவுகள், சாதிக் கொடுமைகள் நாளுக்கு நாள் வளர்ந்து அது மனிதனின் முன்னேற்றத்தையும் மனிதத் தன்மையையும், மனிதனின் சக உரிமையையும் தடுக்கும் போக்கினை மக்கள் உணர்ந்திட வேண்டும் என்று சித்தர்கள் சாதிகள் எழுந்ததற்கான நோக்கம் என்ன என்பதனைத் தமது பாடல்களில் புலப்படுத்துகின்றனர்.

சாதி அடிப்படையில் அமையும் சமூகத் தரப்பிரிவில் அந்தணர்களே தலைமையிடம் வகிக்கின்றனர். வேதம் ஓதுதல் வேதம் கற்பித்தல், பூணூல் அணிதல், உச்சிக் குடும்பி வைத்தல், வேள்விகள் செய்தல் முதலியவற்றால் அந்தணர்கள் தம்மை உயர்வாகக் காட்டிக் கொள்கின்றனர் என்று சித்தர்கள் கூறுகின்றனர். சித்தர்கள் பிறப்பின் அடிப்படையிலோ பிற வேடப்புனைவுகளின் அடிப்படையிலோ ஒருவரை அந்தணர் எனக் கருதக் கூடாது என்கின்றனர்.

### 3.9.2. மனத்தூய்மை வேண்டும்

அந்தணர்கள் ஊன் உண்பதில்லை என்பதன் அடிப்படையில் அவர்கள் சமுதாயத் தரப்பிரிவில் மேம்பட்டவர்களாகத் தம்மை நிலைநிறுத்திக் கொள்கின்றனர். இந்நிலையைக் கண்டு சிவவாக்கியர்,

*"ஆட்டிறைச்சி தின்றதில்லை அன்றும் இன்றும் வேதியீர்*
*ஆட்டிறைச்சி அல்லவோ யாகம் நீங்கள் ஆற்றலே?*
*மீன்இறைச்சி தின்றதில்லை அன்றும் இன்றும் வேதியீர்*
*மீனிருக்கும் நீரலோ மூழ்குவதும் குடிப்பதும்?*
*மானிறைச்சி தோலோ மார்பு பூணூல் அணிவதும்?"*[116]

என வினவுகிறார். எனவே ஊன் உண்பதில்லை என்பது ஒரு தகுதி அன்று. அதற்காக ஊன் உண்ண வேண்டும் என்பது பொருளன்று. பண்பால், ஒழுக்கத்தால், செயலால், மனத்தால் தூய்மையானவர்களே அந்தணகர்கள் எனக் கருதத்தக்கவராவர் என்கிறார்

### 3.9.3. புறவேடம் வேண்டாம்

உண்மையோடு ஞானத்தால் எவர் ஒருவர் மேம்பட்டுக் காணப்படுகிறாரோ அவர் அந்தணர் எனக் கருதத்தக்கவர். ஒழுக்கங்களால் மேம்படுதல் அன்றிப் பூணூல் அணிதல் குடுமி வைத்தல் போன்ற புறவேடங்களில் ஒருவர் அந்தணராகிவிட முடியாது என்பதைச் சிவவாக்கியர்,

*"பிறந்தபோது கோவணம் இலங்குநூல் குடுமியும்*
*பிறந்ததுடன் பிறந்ததே பிறங்கு நாள் சடங்கெலாம்*
*மறந்த நாலு வேதமும் மனத்துளே உதித்ததோ"*[117].

என வினவுகிறார். அனைவரும் மனிதரே. உயர்ந்த சாதியினர், தாழ்த்தப்பட்ட சாதியினர் என்று இறைவன் கர்ப்ப காலத்தையோ, குருதி நிறத்தையோ அமைக்கவில்லை. பிறப்பால் அனைவரும் ஒருதரப்பட்ட மனிதர்களே.

ஒவ்வொருவரின் பண்பாலும் செய்கையாலுமே மனிதர்களிடம் உயர்வு, தாழ்வு கருதப்பட வேண்டும் என்பதைச் சிவவாக்கியர்,

*“நாதமேது வேதமேது நாற்குலங்கள் ஏதடா?*
*வேதம்ஓதிய வேதியர் விளைந்தவாறும் பேசடா?*
*நாறுகின்ற தூமையல்லோ நற்குலங்கள் ஆவன?*
*சீறுகின்ற முடனே அத்தூய்மைநின்ற கோலமே”*[118]

எனக் கூறுகிறார்.

### 3.9.4 தீண்டாமை எதிர்ப்பு

சாதி அடிப்படையில் காணப்படும் தரப்பிரிவுகளில் அந்தணர்கள் மேல்நிலையில் காணப்படுகின்றமையைப் போல் புலையர்கள், சண்டாளர்கள் என்போர் தாழ்ந்த நிலையில் மதிக்கப் பெறுகின்றனர். இவர்கள் ‘கொல்லாமை’ என்ற அறநெறியின் அடிப்படையிலும், தூய்மையின் அடிப்படையிலும் இழிந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். இத்தகு சாதி முறை சமுதாயத்தில் பல கொடிய விளைவுகளை உண்டாக்கியது. அவற்றுள் ஒன்றாகத் தீண்டாமை கருதப்படுகின்றது.

“குறிப்பிட்ட சில பிரிவினரைத் தீண்டுதற்குத் தகுதி அற்றவர்களாகக் கருதி அவர்களை ஒதுக்கிவைத்து, விலங்குகளை விடவும் இழிவானவர்களாக உயர் சாதியினர் கருத முற்பட்டபோது சாதிமுறையின் கொடுமை உச்சநிலையை அடைந்துவிட்டது என்பர். இந்தியாவில் தீண்டாமை என்பது உடற்கூறு, வெளித்தோற்றம், பிறப்பு, பரம்பரை என்பனவற்றுடன் தொடர்புடையதாய்க் காணப்படுகிறது.

தமிழகத்தில் கி.பி. 8ஆம் நூற்றாண்டிற்குப் பிறகான காலகட்டத்தில் தீண்டாமை உணர்வு நிலைபெற்றது. பாணர், பறையர், புலையர், வண்ணார், சண்டாளர், முதலான சாதியினர் இழிந்தவர்களாகவும், தீண்டத்தகாதவர்களாகவும் கருதப்பட்டு ஊரின் ஒதுக்குப்புறமான இடங்களில் குடியமர்த்தப்பட்டனர். இவர்களுடன் உறவு கொள்வதும் பண்ட பரிவர்த்தனை செய்து கொள்வதும் தடை செய்யப்பட்டது. தொடல் என்பது கூடத் தீட்டு என்பதை பின்வரும் கூற்று உணர்த்தும்.

“ஒரு சண்டாளனை, வீட்டு விலக்காகியுள்ள ஒரு பெண்ணை, சாதிப் பிரதிட்டம் செய்யப்பட்ட ஒருவனை, பிரசவமாகியுள்ள ஒரு பெண்ணை, ஒரு பிரேதத்தை, பிரேதத்தை தொட்ட ஒருவனை யதேச்சையாகத் தொட நேர்ந்துவிட்டால் குளிப்பதன் மூலம் மீண்டும் ஒருவன் தனது பரிசுத்தத்தைப் பெறுவான்”[119].

தீண்டாமைக்குரிய காரணிகளில் ஒன்றாகத் ‘தூய்மையின்மை’ கருதப்படுகின்றது. தீண்டாமை என்ற சமுதாயக் கொடுமை ஒழிக்கப்பட வேண்டும் என்ற உயரிய சிந்தனையாளர்களான சித்தர்கள் முதலில் அதற்கான காரணிகளைக் களைய முற்பட்டனர். அதன் விளைவாக ஒவ்வொருவரின் பிறப்பிலும் தீட்டு காணப்படுகிறது. எனவே மக்களிடையே தீண்டாமை நிலவுதல் என்பதில் பொருள் இல்லை என வாதிட்டனர். சிவவாக்கியர் இத்தகு சிந்தனையை,

*“ஊறிநின்ற தூமையை உறைந்து நின்ற சிவனை*
*வேறுபேசி மூடரே விளைந்த வாறு ஏதடா?*

*நாறுகின்ற தூமை அல்லவோ நற்குலங்கள் ஆவன*
*சீறுகின்ற மூடனே அத்தூமை நின்ற கோலமே"*[120]

*"அன்னை கற்பத் தூமையில் அவதரித்த சுக்கிலம்*
*முன்னையே தரித்த அம்பனித்துளி போல் ஆகுமே*
*உன்னி தொக்குழலும் தூமை உன்னுளே அடங்கிடப்*
*பின்னையேநீ பிறப்பதும் தூமை காணும் பித்தரே"*[121].

*"தீட்டம் தீட்டும் என்று தினமும் மூழ்கும் மூடரே*
*தீட்டமான அல்லவோ திரண்டு காயம் ஆனதும்"*[122].

என்று பிறப்பின் உண்மைகளைக் கூறித் தீண்டாமை எண்ணத்தை வளர்ப்பவர்களை மூடர்கள் எனக் கடிகிறார்.

மனிதர்களுள் பறைச்சி என்ன? பனத்தி என்ன? உடலின் இறைச்சியிலும் எலும்பிலும் எழுதியா இருக்கிறது? என வினா எழுப்புகின்றார் சிவவாக்கியர்.

*"பறைச்சி ஆவதேதடா? பனத்தி ஆவதேதடா?*
*இறைச்சிதோல் எலும்பிலும் இலக்கம் இட்டிருக்குதோ?"*
*பறைச்சி போகம் வேறதோ, பனத்திபோகம் வேறதோ*
*பறைச்சியும் பனத்தியும் பகுத்துப்பாரும் உம்முளே"*[123].

என்ற பாடல் வழி இக்கருத்தினை அறியமுடிகிறது. உயர்குலத்தைப் பார்த்து ஞானவெட்டியான் பாடிய பாடல் காட்டத்தக்கது.

*"இஞ்சியிட்ட மஞ்சள் உண்டோ? ஏலம் இடச் சுக்காமோ?*
*நஞ்சுகந்த எட்டியிலும் நல்லாலு பிச்சையுண்டோ?*

***துஞ்சுபுகழ் பூசைசெய்யும் சுந்தரரே என் குலத்தில்***
***வஞ்சியை நீர் சேர்ந்ததனால் மைந்தன் தரியாதோ?"***[124]

சுந்தரரே! என் குலத்துப் பெண்ணை நீர் சேர்ந்தால் மைந்தன் பிறக்கமாட்டானா? நிச்சயமாகப் பிறப்பான். ஆதலால் எனக்கும் உமக்கும் வேற்றுமை எது? ஒரு சிறிதும் இல்லை என்கிறார்.

***"அம்புவியின் மான் அதனை அறியாவராகம்புணர***
***கும்பில்உரு வாகியதும் குட்டி அளிக்குமோதான்?***
***நம்பிறவி அந்தணரே! நேயம்உள சூத்திரரே!***[125]***.***

இவ்வுலகில் மான் என்னும் விலங்குடன், பன்றி சேர்ந்தால் மான் வயிற்றிலே கருவுண்டாகுமா? குட்டி போடுமா? இல்லை. நமது பிறப்பு உயர்ந்தது என்று நினைக்கும் அந்தணரே! அன்புள்ள சூத்திரரே! எனது குலத்தை இழிவானது என்று வேறுபடுத்திக் கூறுகின்றீர் என்று வினவுகின்றார்.

***"எண்ணெய்க்கும் நீருக்கும் சொந்தம் இல்லாதவாறு போல்***
***எப்போதும் இப்புவியில் எய்த வேண்டும்"***[126]***.***

என்று உலகத்தோடு ஒட்டாமல் வாழும் வழியைச் சித்தர்கள் சொல்கின்றனர். உலகத்தையே அவர்கள் விட்டாலும் உலகம் அவர்களை விடவில்லை. மனித நேயம் மிக்க கவிஞர்களுக்கு மனத்தைக் கல்லாக்கி உலகத்தை உதறிப்போவது அத்துணை எளிதும் அல்ல. கண்ணெதிரே நிகழும் சமூகக் கொடுமைகளுக்காக ஒரு வார்த்தைகூடப் பேசாமல் யோகநித்திரை கொள்வது சித்தர்களால் இயலாத

காரியம். எனவேதான் சாதிப் பிரிவுகள் அவர்களை இப்படித் தகிக்க வைத்திருக்கின்றன.

*"சமயபேதம் பலவான சாதி பேதங்கள்*
*சமயத் தோர்க்கே யல்லாதுகள் சாதுகளுக்கோ"*[127].

என்ற அடிகளில் பாம்பாட்டிச் சித்தர் மனிதத் தன்மை வேண்டும் என்கிறார். சாதிப் பிரிவு என்ற சுவடே இல்லாமல் அதை அடியோடு ஒழித்துவிட தீ வைத்து எரித்து சாம்பாலாக்கிவிட வேண்டும் என்று ஆத்திரம் கொண்ட அவர்,

*"சாதிப் பிரிவினிலே தீ மூட்டுவோம்*
*சந்தை வெளியினிலே கோவை நாட்டுவோம்*
*வீதிப் பிரிவினிலே விளையா டிடுவோம்*
*வேண்டாத மனைதனில் உறவு செய்வோம்"*[128].

என்று பாடுகிறார்.

*"குலங்குலம் என்பதெல்லாம் குடுமியும் பூணும் நூலும்*
*சிலந்தியும் நூலும் போலச் சிறப்புடன் பிறப்பதுண்டோ?*
*நலந்தரு நான்கு வேதம் நான்முகன் படைத்ததுண்டோ?"*[126]

வேதியருக்கு எதிராக கி.பி. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த உத்தரநல்லூர் நங்கை என்பவரும் குரல் எழுப்பியதை பேராசிரியர் சு. வேங்கடராமன் தம் நூலில் எடுத்துக்காட்டியிருப்பது குறிக்கத்தக்கது.

## 3.10 சித்தர் ஜென் இலக்கியங்களில் தனிமனித அறம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் சித்தர்களுக்கும் அவர்தம் பாடல்களுக்கும் ஒரு தனியிடம் உண்டு. யோகம், ஞானம், சோதிடம், மருத்துவம், ரசவாதம்

முதலிய பல்வேறு துறைகளைப் பற்றிய பாடல்களை எளிய தமிழில் இனிய சந்தத்துடன் சித்தர்கள் பாடினர். அறிவு இயக்கவாதிகளாகிய சித்தர்கள் ஒரு காலத்தில் பித்தர்களாகவும், நாடோடிகளாகவும், நாத்திகவாதிகளாகவும் சித்தரிக்கப்பட்டனர். இவர்தம் படைப்புகள் அனைத்தும் சமுதாயத்தை மையப்படுத்தியனவாகும். தனிமனிதன் ஒருவன் செய்யும் அறச்செயல்கள் யாவும் தனிமனிதனையும், குடும்பத்தையும், சமுதாயத்தையும் முன்னேற்றப் பாதைக்குக் கொண்டு செல்வனவாக அமையும். எனவேதான் சமுதாயத்தில் தனிமனித அறம் வலியுறுத்தப்படுகின்றது.

ஜென் இலக்கியங்களில் கூட ஒரு தனிமனிதனின் வாழ்க்கை நெறிமுறை பற்றிய ஏராளமான செய்திகளைக் காணமுடிகின்றன. ஜென் வழியை ஒரு வாழ்க்கை நெறி என்றும் அறிஞர்கள் கூறுவர். அந்த அளவிற்குத் தனிமனித அறக் கருத்துக்கள் அதில் பொதிந்து கிடக்கின்றன.

### 3.10.1 ஜென் இலக்கியங்களில் தனிமனிஅறம்

சித்தர்களின் நோக்கம், பிறவிப் பயனாய் உடலை நிலைக்கச் செய்து அதன் வழி அழியாப் பேரின்ப வாழ்வை அடைவது மட்டுமல்ல அறிவாலும் உணர்வாலும் உலக மாந்தர்களைப் பிரிக்கின்ற சாதி, சமயம் முதலியவற்றைச் சாடி, எல்லோரும் ஓரினம், எல்லோரும் ஓர் குலம் என விளங்கச் செய்தல் ஆகும்.

‘யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்’ எனும் வரையறையைக் கடந்து தாம் பெறாத இன்பங்களையும் இவ்வைகயத்தார் பெறவேண்டும் என்ற சமூக அக்கறை கொண்டவர்கள் சித்தர்கள். சமுதாயத்தில் வாய்மையும் அறியாமையும் சூழ்ச்சியும் நிலவியதை எதிர்த்துப் புதியதோர் புரட்சி செய்யும் நோக்கில்

பாடல்களைப் பாடினர். தம் பாடல்களின் வழிச் சமுதாயச் சீர்கேடுகளைச் சாடி அறத்தை வலியுறுத்தினர்.

### 3.10.2 தனிமனித அறம்

சமுதாயத்தில் சட்டம், ஒழுங்கு நிலைத்திட, ஒற்றுமை உருவாகிட ஒவ்வொரு தனிமனிதனும் மேற்கொள்ளும் வாழ்க்கை நெறி அடிப்படையாகிறது. இதனை நன்குணர்ந்த சித்தர்கள் சமூகத்திற்கு அறவுரை கூறும் பொருட்டுத் தனிமனித வாழ்வை நெறிப்படுத்தும் பணியையும் செவ்வனே செய்துள்ளனர்.

#### 3.10.2.1 ஆசையைத் துற

ஒழுக்கக் கேடுகள் அனைத்திற்கும் காரணம் ஆசையும் செருக்கும் ஆகும். புத்தரும், 'ஆசையே துன்பத்திற்குக் காரணம்' என்றார். இக்கருத்தை அறிவுறுத்தும் ஆன்றோர்கள்தாம் சித்தர்களும் ஆவர். வீணாசை கூடாது எனும் அறிவுரை "இருப்பதே போதும்; அதுவே சிறக்கும் என்ற உயர்ந்த பொருளை அடிப்படையாய்க் கொண்டது.

> "***வேணும்வேணும் என்றுநீர் வீண்உழன்று தேடுவீர்***
> ***வேணும்என்று தேடினும் உள்ளதல்லது இல்லையே***
> ***வேணுமென்று தேடுகின்ற வேட்கையைத் துறந்தபின்***
> ***வேணுமேன்ற அப்பொருள் விரைந்துகாணல் ஆகுமே***"[130].

எனும் பாடல் ஆசையை நீக்கு என்றும் அவ்வாறு ஆசை நீங்கிய மனதிலே இறையருள் கூடும் என்றும் கூறுகிறது. இக்கருத்தை அடியொற்றிய ஜென் கதை ஒன்று வருமாறு:

‘‘சீனத்துப் படைத்தலைவன் ஒருவன். யாரோ ஓர் அழகான கோப்பையை அவனுக்குப் பரிசாக அளித்திருந்தார்கள். அவன் அந்தக் கோப்பையின் அழகில் வெகுவாய் மயங்கினான். எப்போதும் அது தனது பார்வையில் இருக்கும்படியாய் மேசை மீது வைத்துக் கொண்டான்.

அந்தக் கோப்பை வந்ததிலிருந்து பெண்டாட்டி ஞாபகம் கூட அவ்வளவாக வருவதில்லை.

நேரம் கிடைக்கிற போதெல்லாம் அதைக் கையில் வைத்துத் தடவிப் பார்ப்பான்.

மேலும் கீழும் கவிழ்த்து அதன் பூ வேலைப்பாட்டினை ரசிப்பான். ஒருமுறை அப்படி செய்யப்போய் கோப்பை அவனது கையிலிருந்து நழுவப் பார்த்தது. சட்டென்று பிடித்து அதற்குரிய இடத்தில் வைத்தான். மனப் பதற்றம் நிற்க மணி நேரமாயிற்று.

அதற்குப் பிறகு அதை எடுத்து வைக்கவே அச்சமாக இருந்தது. மேசை, மீதுள்ள மற்ற பொருள்களை எடுக்கும்போது தவறி கோப்பையைத் தள்ளி உடைத்துவிடுவோமோ என்றும் அஞ்சினான்.

களம் பல கண்ட வீரன் அவன். ஆனாலும் ஒரு சின்னக் கோப்பை அவனைக் கலங்கடிப்பதாய் இருந்தது. நிலைமை இப்படியே நீடித்தால் தான் மன நோயாளியாகிவிடக் கூடும் என்று பட்டது. இதற்கு என்ன காரணம்?

பொருள் மீது நான் வைத்த பற்றுதான் தன்னைப் பலவீனப்படுத்திக் கொண்டிருக்கிறது என்று புரிந்தது.

அந்தக் கணமே கோப்பையை வீசி எறிந்தான். 'சிலுங்' என்ற சப்தத்துடன் அது மூலையில் விழுந்து நொறுங்கியது. பணியாளை அழைத்து உடைந்த துண்டுகளை அப்புறப்படுத்தினான். இப்போது நிம்மதியாக இருந்தது"[131].

பொருள்களின் மீது மட்டுமின்றி உயிராசையும் இல்லாமல் இருந்தால் அச்சமில்லாத வாழ்வு வாழலாம் என்றும் அத்தகைய அச்சமில்லாதவனுக்கே அகிலம் அடங்கும் எனவும் கூறும் ஜென் கதை ஒன்று,

"குரு தைகான் ஒரு நாளிரவு தம் அறையில் அமர்ந்து கடிதம் எழுதிக் கொண்டிருந்தார்.

திருடன் ஒருவன் கத்தியுடன் உள்ளே நுழைந்தான். அவனைப் பார்த்து குரு கேட்டார்;

'உனக்கு என்னப்பா வேண்டும்? உயிரா? பணமா?'

திருடன் திகைத்துப் போனான்.

திருடன், மிரட்டுவதற்கு வாய்ப்பே இல்லாமல் போய்விட்டது பற்றி, ஏமாற்றம் அடைந்தான்.

'நான் பணத்திற்காகத்தான் வந்தேன்'! என்றான் திருடன் மெல்ல.

'சரி அதை, வந்தவுடனே சொல்ல வேண்டியதுதானே!' என்று சொல்லிவிட்டு, அவனுக்குக் கணிசமான அளவு பணம் தந்துவிட்டு, அமைதியாகக் கடிதம் எழுத ஆரம்பித்தார்.

திருடனுக்கு மிகவும் சங்கடமாகப் போய்விட்டது. குருவின் அமைதி அவனை என்னவோ செய்தது.

கையில் பணத்துடன் வெளியே போகத் திரும்பினான் திருடன்.

'இந்தாப்பா, போகும்போது கதவைச் சாத்திவிட்டுப் போ'! என்றார், கடிதம் எழுதியபடியே.

திருடன் ஒரு கணம் அவரைத் திரும்பிப் பார்த்தான்; ஓசைப்படாமல் மெல்லக் கதவைச் சாத்திவிட்டு வெளியேறினான்.

சில நாட்களில் அவன் பிடிபட்டான்.

காவலரிடம் அவன் இப்படிச் சொன்னான்:

'நான் ரொம்ப நாளா திருட்டுத் தொழில் செய்றேனுங்க அய்யா. ஆனா அந்த குரு சாமி மாதிரி ஆளெ நான் பார்த்ததே இல்லீங்க ஆளு ரொம்ப பயங்கரமானவருங்க. கத்தியெத் தூக்கிக் காட்டறதுக்கு முன்னாடியே, 'உனக்கு என்ன வேணும்? உயிரா? பணமா?' அப்படீன்னு கேக்றாரு! நான் தெகச்சுப் போயிட்டேன். பணத்தெக் குடுத்திட்டு, 'இந்தாப்பா'ன்னாரு பாருங்க, நான் பயந்தே போயிட்டேன்..... அய்யா, நான் சிறைவாசம் முடிஞ்ச உடனே அவருகிட்ட தான் போகப்போறேன். தைரியத்தை அவருகிட்டதான் கத்துக்கணும்...."[132]

உண்மை ஞானிக்கு உயிராசை இல்லை. உயிராசை இல்லாததால் அச்சமில்லை. அச்சமில்லாதவனுக்கு அகிலமும் அடங்கும்.

*"ஆசை வலைக்குள் அகப்பட்டதும் வீடு*
*அப்போதே சிவந்து அழிந்திட்டதும்*
*பாசவலை வந்து மூடியதும் ஈசன்*
*பாதத்தைப் போற்றடி வாலைப் பெண்ணே"[133].*

எனப் பற்றற்ற நிலையில் இறைவனைப் போற்றி அவள்தான் சேரவேண்டும் என்று கொங்கணச் சித்தர் தம் பாடலில் கூறுகின்றார்.

### 3.10.2.2 தீய எண்ணங்களை ஒழி

மனதில் தோன்றும் தீய எண்ணங்களை ஒழுக்கக் கேடான செயல்களாக வெளிப்படுத்தினான். அதனைப் பட்டினத்தாரின்,

*"இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே*
*ஒருத்தருக்கும் தீங்கினை உன்னாதே"[134].*

என்ற பாடல் வழி அறியலாம். மேலும் கடுவெளிச் சித்தர்,

*"சற்றுமுன் வாழ்வை யெண்ணாதே - பிறர்*
*தாழும் படிக்குநீ தாழ்வைப் பண்ணாதே"[135]*

என்றும்,

*" வைதோரைக் கூட வையாதே - இந்த*
*வையம் முழுதும் பொய்த்தாலும் பொய்யாதே*
*வெய்ய வினைகள் செய்யாதே - கல்லை*
*வீணிற் பறவைகள் மீதில் எய்யாதே"[136].*

எனவும் பாடுகிறார். 'அஃறிணை உயிரான பறவைக்கும் கூடத் தீங்கு செய்யாதே' என வேண்டுகிறார். ''வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்'' என்ற வள்ளலாரின் வரிகள் ஈண்டு நினைவுகூரத்தக்கன.

'சென்காய் ஓர் அரசு அதிகாரி. உயர்ந்த பதவியில் இருந்த அவர் தன் சக அதிகாரி ஒருவரின் மனைவி மீது மோகம் கொண்டார். அந்தப் பெண்ணும் அவரது அழகில் மயங்கினாள்.

இவர்களின் தகாத உறவு கணவனுக்குத் தெரியவர அதன் காரணமாக ஏற்பட்ட மோதலில் சென்காய் அந்த அதிகாரியை வாளால் வெட்டிவிட நேர்ந்துவிட்டது.

கள்வர்கள் இருவரும் ஊரை விட்டு ஓடினார்கள். காலங்கள் பல கழிந்தன. சென்காய் பதவியும், செல்வமும், செல்வாக்கும் இழந்தான். அது மட்டுமல்ல அவர்களின் உண்மை இயல்புகளும் வெளிப்பட்டன. அவர்களால் ஒத்துப்போக முடியவில்லை. எனவே இருவருக்கிடையேயும் ஓயாத சண்டை. கடைசியில் சென்காய் அவளைக் கை கழுவிவிட்டு ஓடிப்போனார்.

நாட்கள் செல்லச் செல்ல தன் பழைய பாவச் செயல்களுக்குப் பரிகாரமாக நன்மைகள் செய்ய ஆரம்பித்தார். வாழ்நாள் முழுவதும் சமுதாயப் பணி புரிய முடிவெடுத்த சென்காய் ஒரு மலைப்பாங்கான இடத்திற்குச் சென்று வழிப்போக்கர்களுக்கு உதவி புரிய ஆரம்பித்தார். சுரங்கம் தோண்டும் பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். முன்பு தான் தனது தீய எண்ணத்தினால் செய்த செயலின் விளைவைச் சந்திக்கலாயினார்.

சென்காயினால் வெட்டிக் கொலை செய்யப்பட்ட அதிகாரியின் மகன் தந்தையின் கொலைக்குப் பழிவாங்க உள்ளம் குமுறிக் கொண்டிருந்தான் சென்காய் இருக்கும் இடம் தேடி வந்தடைந்தான். ஒளிவு மறைவில்லாமல் தான் வந்த காரியத்தைத் தெரிவித்தான். என் தந்தையின் பழிக்கு உங்களைக் கொல்லப் போகிறேன் என்றான். அதற்கு சென்காய் தாராளமாகக் கொன்றுவிடு. நான் தயாராக இருக்கின்றேன். ஆனால், என்று சுரங்கம் முடிவடைந்து மறுபக்கம் திறக்கப்படுகிறதோ அன்றே நீ என்னை வெட்டிச் சாய்க்கலாம் என்றார்.

அவர் சொல்வது நியாயமாகப்பட்டது அவனுக்கும். வேலை தொடர்ந்தது. அவன் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தான். கடைசி நாளுக்காகக் காத்திருந்தான். பல மாதங்கள் கழிந்தன. எத்தனை காலம்தான் சும்மா பார்த்துக் கொண்டிருப்பது? சென்சாய் தனி ஒருவராக எவ்வளவு பெரிய முயற்சியில் உழைத்துக் கொண்டிருக்கிறார்! கொஞ்சம் உதவலாமே என்று நினைத்தான் அவன். உதவியும் புரிந்தான். ஓராண்டுகள் கழிந்தன. சுரங்க வழி பூர்த்தியாயிற்று. மக்கள் மகிழ்ச்சியாக அதன் வழியாக மலையைக் கடந்து சென்றார்கள்.

‘சரியப்பா என் கடமை முடிந்துவிட்டது. இனி நீ என் தலையை வெட்டிவிடலாம்’ என்றார் சென்காய்.

‘அது எப்படி ஐயா முடியும்? நீங்கள் என் குருவாயிற்றே. குருவைக் கொல்ல முடியுமா என்ன?’’[137] என்று வாளை வீசி எறிந்துவிட்டான்.

தனியொரு மனிதன் பிறருக்காக வாழும்போது புனிதமாகின்றான். நல்லவனாகவே வாழ்பவனைவிடக் கெட்ட வழியில் சென்று பின்னர் மனம் திருந்தி நல்லவனாக வாழ்பவனுக்குப் பக்குவம் கிடைக்கின்றது. தீய

எண்ணங்கள் ஒழியும்போது தனிமனித அறம் மேலோங்கி நிற்கிறது எனும் கருத்தினை மேற்கூறப்பட்ட ஜென் கதை வலியுறுத்துகின்றது

### 3.10.2.3. பாவம் செய்யாதிரு மனமே

மனத்தூய்மையே புறத்தூய்மைகள் அனைத்திற்கும் அடிப்படை. மனத்துக்கண் மாசிலானதால் அறம். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்'' என்பார் வள்ளலார். அகமும் புறமம் தீயவர்களாக இருப்போரைக் காட்டிலும் நல்லவர் போல் வேடமிட்டு நடிப்பவர்களால் ஏற்படும் தீமைகள் கொடுமையானவை. இப்பொருள்பட கடுவெளியார்,

> ***''பாபஞ் செய்யாதிரு மனமே - நாளைக்***
> ***கோபஞ் செய்தே யமன் கொண்டோடிப் போவான்''[138].***
>
> ***''கஞ்சாப் புகைப்படி யாதே - வெறி***
> ***காட்டி மலக்கியே கட்குடியாதே''[139].***
>
> ***''கள்ள வேடம் புனையாதே - பல***
> ***கங்கையிலே யுன்கடன் நனையாதே நட்புக்***
> ***கொண்டு புரிந்துநீ கோள் முனையாதே''[140].***

எனப் பாடுகிறார். பட்டினத்தாரோ,

> ***''ஆவியொடு காயம் அழிந்தாலும் மேதினியில்***
> ***பாவிஎன்று நாமம் படையாதே - மேவியசீர்***
> ***வித்தாரமும் கடம்பும் வேண்டா மடநெஞ்சே***
> ***செத்தாரைப் போலே திரி''[141].***

என்ற பாடல் வழிப் பாவம் செய்து பாவியாகி விடாதே என எச்சரிக்கின்றார்.

### 3.10.2.4 புறம் கூறாதீர்

ஒருவரோடு ஒருவர் நல்லறவு கொள்ள புரிந்துணர்வு அவசியம். புரிந்துணர்வு குறைந்து போகுமிடத்தில் புறங்கூறுதல் தலைதூக்கும். இது கூடாது எனக் கூறும் ஜென் கதை ஒன்று,

''சுவாங் ட்சு என்ற ஞானியிடம் ஒருவர் வந்து, நகரில் புல்லாங்குழல் வாசிப்பவனைப் பற்றி 'அவன் ஒரு திருடன்; பாவி' என்று சொன்னார். மேலும் அவனைப் பற்றி ஏகப்பட்ட குறைகளைச் சொன்னார்.

அதையெல்லாம் கேட்டுவிட்டு, 'அவன் நன்றாகப் புல்லாங்குழல் வாசிக்கும் இசைக் கலைஞன் ஆயிற்றே' என்றார் ஞானி.

அதே சமயம் இன்னொருவர் அங்கே வந்தார்.

'அவனா? அவன் அற்புதமான கலைஞன்' என்றார் அவர்.

அதைக் கேட்ட ஞானி, 'அவன் திருடனாயிற்றே' என்றார்.

குற்றம் சாட்டியவரும், பாராட்டியவரும் குழம்பிப் போனார்கள்.

இது என்ன! இவர் இப்படிச் சொன்னால் அப்படிச் சொல்கிறார்; அப்படிச் சொன்னால் இப்படிச் சொல்கிறார் என்று நினைத்தார்கள்.

'என்ன சுவாமி இப்படி முரண்பாடாகச் சொல்கிறீர்களே?' என்று கேட்கவும் செய்தார்கள்.

அதற்கு அவர், 'நான் சரிக்கட்டுக்கிறேன். சமநிலைப்படுத்துகிறேன். அவனை எடைபோட நான் யார்? நீங்கள் யார்? அதற்கு நமக்கு என்ன உரிமை இருக்கிறது? நான் எதையும் ஏற்றுக் கொள்வதும் இல்லை; மறுப்பதும் இல்லை. என்னைப் பொறுத்தவரை அவன் நல்லவனும் இல்லை; கெட்டவனும் இல்லை.

அவன் அவன்தான் அவன் வேலையை அவன் பார்க்கிறான். உங்கள் வேலையை நீங்கப் பாருங்கள்! யாரையும் எடை போடாதீர்கள்"[142]! என்றார்.

### 3.10.2.5 அல்லது செய்யாதீர்

மது, மாது, சூது போன்ற தீக்குணங்களால் மனிதனை மனிதன் ஏமாற்றும் போக்கைக் கண்டு பட்டினத்தார்,

*"வாதுக்குச் சண்டைக்குப் போவார் வருவார் வழக்குரைப்பார்*
*தீதுக்கு உதவியும் செய்திடுவார் தினந்தேடி ஒன்று*
*மாதுகளித்து மயங்கிடுவர் விதிமாளும் மட்டும்*
*எதுக்கு இவர் பிறந்தார்? இறைவா கச்சி ஏகம்பனே"![143].*

*"ஓயாமல் பொய் சொல்வர்; நல்லோரை நிந்திப்பர் உற்றுப் பெற்ற*
*தாயாரை வைவர்; சதிஆயிரந் செய்வர்; சாத்திரங்கள்*
*ஆயார்; பிறர்க்குப் உபகாரம் செய்யார்; தமை அண்டினார்க்*
*கொன்றீயார் இருந்தென்ன போயென்ன காண் கச்சி*
*ஏகம்பனே"[144].*

என்றும் நல்ல செயலான ஈதலை வலியுறுத்துகின்றார்.

"ஒருநாள் புத்தர் ஓய்வாக ஒரு கிணற்றடியில் அமர்ந்திருந்தார். கிணற்றிலிருந்து கலவரமான குரல்கள் கேட்டன. புத்தர் உள்ளே எட்டிப் பார்த்தார். அந்தக் கிணறு நரகப் படுகுழி. உள்ளே நரகத்தீ கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது. ஏராளமான பேர் அதில் சிக்கித் தவித்தபடி அலறிக் கொண்டிருந்தார்கள். கடவுளே! கடவுளே! தாங்கமுடியவில்லை. காப்பாற்றுங்கள்! கீழிருந்து மேலே வரத் தவித்துக் கொண்டிருந்தார்கள்.

சாக்கிய முனி கூர்ந்து உள்ளே பார்த்தபோது ஒரு ஆள் பயங்கரமாக அலறுவது தெரிந்தது. மகா முரட்டு ஆள் அவன். சாமீ! என்னைக் காப்பாத்துங்க! புத்தர் மேலும் கூர்ந்து பார்த்தர். அவன் யாரென்று அவரது மனக் கண்ணில் தோன்றியது. ஈவிரக்கமில்லாமல் மக்களைக் கொள்ளைடியத்தும் கொன்றும் வாழ்ந்தவன் அவன். அவன் இருக்கவேண்டிய இடம் அதுதான். அவன் அனுபவிப்பது சரிதான்.

இருந்தாலும் அவன் தன் வாழ்நாளில் ஏதாவது நல்லது செய்திருக்கிறானா என்று தம் மனக் கண்ணில் பார்த்தார். ஒரு காட்சி அவரது தீர்க்க தரிசனத்தில் தோன்றியது.

ஒரு சமயம் அவன் நடந்து செல்லும்போது அவன் முன்னே தரையில் ஒரு சிலந்தி தென்பட்டது. அதை மிதித்து விடாமலிருக்க அவன் தாண்டிச் சென்றான். அந்த ஒரு சிறு செயல் - கொஞ்சம் கருணைதான் அவன் வாழ்வில் காணப்பட்ட ஒரே நல்ல செயல்' என்று புத்தர் நினைத்தார்.

நினைத்துக் கொண்டிருக்கும் நேரத்தில் அவர் கையில் ஒரு சிலந்தி தோன்றியது. அது ஒரு நூலிழையை வெளிவிட்டது. கிணற்றுக்குள் அடியாழம் வரை நீண்டு சென்றது. அதைப் பிடித்துக் கொண்டு மேலே வா என்றார்.

அந்த சிலந்தி வலையைப் பிடித்துக்கொண்டு மேலே ஏற முயன்றான். உடனே அவனைச் சுற்றிக் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தவர்கள் அவனது காலடியில் தொங்கிக் கொண்டு மேலே ஏற முயன்றார்கள்.

முரடன் சற்று மேலே வந்து கீழே பார்த்தான். பலபேர் அந்த நூலிழையைப் பிடித்துக் கொண்டு மேலே வந்து கொண்டிருக்கிறார்கள். அவன் சட்டென்று தன் இடையிலிருந்த கத்தியை எடுத்தான். தனக்குக் கீழே ஒரு வெட்டு வெட்டினான். நூலிழை அறுந்து அவன் காலடிக்கீழ் வந்து கொண்டிருந்தவர்கள் எல்லோரும் பாதாளத்தில் விழுந்து அலறினார்கள்.

'இழை இனி தன் கனத்தைத் தாங்கும் என்று அவன் மேலே நகர்ந்தான். ஆனால் அவனது கருணையற்ற செயலால் அந்த இழை அறுந்தது. அவன் செய்திருந்த அற்பப் புண்ணியமும் இப்போது அவன் செய்த கொடுமையால் அழிந்தது. அவன் மீண்டும் நரகப் படுகுழியில் வீழ்ந்தான்[145].

ஒருவன் பிறருக்குப் பாவம் செய்து, அல்லது செய்து கொண்டு வாழ்வானாயின் சமுதாயத்தில் அவன் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே நரகத்தில் வாழ்கிறவனாகிறான் என்ற உண்மையை மேற்கூறப்பட்ட கதை எடுத்துரைக்கிறது.

### 3.10.2.6 புலனடக்கம் வேண்டல்

ஆசையே துன்பத்திற்குக் காரணம் எனில் ஆசைக்குக் காரணம் ஐம்புலன்கள். இவ்வைம்புலன்கள் மனத்தினை ஆசையின் வழி அழைக்கும். எனவே புலனடக்கம் அவசியம் என்பதை ''ஐம்புலனை வெல்லாது உழன்றிடும் வம்பருக்கு ஈவது அவத்தமே'' எனச் சிவவாக்கியரும் கூறுவார். மேலும் புலனடக்கம் யோகத்தின் நுழைவாயில்' என்பதை உணர்ந்த சித்தர்களுள் ஒருவரான பாம்பாட்டிச் சித்தரும்

*"கள்ளப் புலனைக் கழித்து வீடு*
*கண்ணுக்கு மூக்கு மேற்காண நின்று*
*தெள்ளு பரஞ்சோதி தன்னைத் தேடிச்*
*சீர்பாதம் கண்டோம் என்று ஆடுபாம்பே"*[146]

என யோக நிலைக்குச் சென்று இறைவன் பாதம் காண ஐம்புலனடக்கம் வேண்டும் எனக் கூறுகிறார்.

ஐம்புலன் அடக்கத்தாலும், ஆசை, கோபம், ஆங்காரமற்ற அறிவாலும் மனவடக்கம் பெறுவது சித்தர்களின் கொள்கை. இதனால் முக்தி வாய்க்கும் என்பது சித்தர்களின் மேலான நம்பிக்கை. இதனை பத்ரகிரியார்,

*"ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைக் கட்டறுத்துத்*
*தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவது எக்காலம்?"*[147]

என்ற பாடல் வழி அறியலாம். இடைக்காட்டுச் சித்தரின்

*"மனமென்னும் மாடுஅடங்கில் தாண்டவக் கோனே முத்தி*
*வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக் கோனே*
*சினமெனும் பாம்பு இறந்தால் தாண்டவக்கோனே யாவும்*
*சித்தியென்றே நினையேடா தாண்டவக் கோனே"*[148].

எனும் பாடலும் இக்கருத்தையே விளக்குகிறது.

*"மனமது செம்மையானால் மந்திரஞ் செபிக்க வேண்டாம்*
*மனமது செம்மையானால் வாயுவை உயர்த்த வேண்டாம்*
*மனமது செம்மையானால் வாசியை நிறுத்த வேண்டாம்*
*மனமது செம்மையானால் மந்திரஞ் செம்மை யாமே"*[149].

என்ற பாடல் மனவடக்கம் மட்டுமே எல்லையில்லாப் பேரொளியைக் காட்டும் என்கிறது.

'புலனடக்கம்' முக்திக்கு முதல்படி. ஒவ்வொரு மனிதனும் ஐம்புலன்களைத் தன்னுள், தனது கட்டுப்பாட்டிற்குள் வைத்துச் செயல்படுவானேயானால் அவனது குணநலம் உன்னதமாகப் போற்றப்படுகிறது.

'கோபம்' என்ற உணர்வு தனிமனித அறத்தினைச் செயல் இழக்கச் செய்யும் தன்மையை விளக்கும் வகையில் அமைந்த ஜென் கதை பின்வருமாறு:

"பாங்கே (BANKEI) என்ற ஜென் மாஸ்டரிடம் ஒரு ஜென் மாணவன் வந்து, மாஸ்டர், 'என்னிடம் அடக்க முடியாத கோப உணர்வு இருக்கிறது. அதை நான் எப்படிச் சரி செய்வது?' என்று கேட்டான்.

எங்கே, அதைச் சற்று என்னிடம் காட்டு பர்ாக்கலாம் என்றார்.
இப்பொழுது என்னால் அதை உங்களுக்குக் காட்ட முடியாது.
எப்பொழுது அதை என்னிடம் காட்ட முடியும்?
அது தானே எதிர்பாராது மேலே கிளம்பும்.

அது உண்மையானது என்றால், அது இயல்பானது என்றால் எந்தச் சமயத்திலும் அதை என்னிடம் உன்னால் காட்ட முடியும். நீ பிறந்த போது, அது உன்னிடம் இருந்தது இல்லை. அதே சமயம் அதை உன்னுடைய பெற்றோர்களும் உன்னிடம் கொடுத்தது இல்லை. ஒன்றாக யோசனை பண்ணிப்பார் என்றார்"[150].

கோபம் என்பது எதிர்ப்பார்ப்பதில்லை. ஏமாற்றத்தில் விளைந்த ஒரு பின்செயல் (Reaction). எதிர்பார்ப்பு ஏமாற்றத்தில் முடிகிறது.

எதிர்பார்ப்பும், ஏமாற்றமே கோபத்திற்கு மூலகாரணம். இந்த உலகத்தில் மனிதன் தான் அடைய ஆசைப்படும் அனைத்தும், உதாரணமாக பொன், பொருள், சுகம், புகழ், அந்தஸ்த்து போன்றவைகளை எங்கே எடுத்தீர்களோ அங்கேயே அத்தனையையும் திருப்பி வைத்துவிட்டுத்தான் வெறுங்கையோடு செல்ல வேண்டும் என்ற உண்மையை உணர்த்துகிறது. புலனடக்கம் அறம் சிறக்க வழி செய்யும்.

### 3.10.2.7 உயிர்க்கொலை விலக்கல்

“நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதென்றும்
கொல்லாமை சூழும் நெறி”[151]

எனும் குறளுக்கேற்ப உயிர்க்கொலை விலக்கல் பற்றியும் சித்தர்கள் பாடியுள்ளனர்.

***“கொலையே களவு காமம் பொய்கூறல்***
***மலைவான பாதக மாம்”[152].***

என்பார் திருமூலர்.

***“கொல்லி குத்தென்று கூறிய மாக்களை***
***வல்லடிக் காரர் வலிக்கயிற்றைக் கட்டிச்***
***செல்லிடு நில்லென்று தீவாய் நரகிட***
***நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே”[153].***

எனும் பாடல் உயிர்க்கொலை செய்வோர் நரகத்திற்குச் செல்வர் எனக் கூறுகிறது.

***“மன்னுயிரைக் கொன்று வதைத்து உண்டு உழலாமல்***

***தன்னுயிர்போல் எண்ணித் தவம் முடிப்பது எக்காலம்?”***[154]

எனும் பத்ரகிரியாரின் பாடலும் உயிர்கொலையை விலக்க வேண்டும் என்றே வலியுறுத்துகிறது.

வாழ்க்கை பற்றிய அணுகுமுறை குறித்து ஜென் இலக்கியம் பேசும்போது, ‘என்னுடைய சக்தி பெரிது’ என்று எதையாவது அழித்துப் போடுகிறோம். என்ற மனிதனின் குணாதிசயத்தை வெளிப்படுத்துகின்றது.

அறிவியல் ஆராய்ச்சிக் கூடங்களில் கணக்கற்ற எலிகளையும், தவளைகளையும், முயல்களையும் கூறு போடுகிறார்கள். உயிரியல் உண்மைகளைக் கண்டறியும் முயற்சி என்பது அவர்கள் தரப்பு வாதம். ஆனால் ஜென் பார்வையில் இயற்கையை வேட்டையாடுகிற செயல் என்கிறது.

ஜென்களுக்குக் கொல்வதில் ஆர்வம் இல்லை. ஒரே ஒரு வார்த்தையைக்கூட அவர்கள் கொன்றுபோட மாட்டார்கள். ஜென்னுக்கு ஒழித்துக் கட்டுவதை விட உயிரோடு இருப்பது பிடிக்கும்.

‘முரட்டு மனிதர்கள் காதலிலும் தங்களுடைய வன்முறையைக் காட்டுகிறார்கள். காதலியின் பிரியத்தைச் சம்பாதிப்பதற்காக ரோஜாப்பூவின் கழுத்தைக் கிள்ளி விடுகிறார்கள் என்று சிறிய அழிவு கூட கொலைக்குரியதாகும்’ என்று சி.எஸ். தேவ்நாத் உயிர்க்கொலை பற்றிய ஜென் தத்துவத்தை எடுத்துரைக்கின்றார்.

### 3.10.2.8 புலால் மறுத்தல்

எல்லா உயிர்களும் இறைவனது படைப்பு எல்லா உயிரும் ஒன்று என்ற உணர்வு இருந்தால் புலால் உண்ணத் தோன்றாது. புலால் மறுத்தல் தோன்றின் கொல்லாமை தோன்றும். கொல்லாமை தோன்றின் எல்லா உயிரும் பொது எனும் உணர்வும் தோன்றும். அதனால் புலாலை மறுத்துத் திருமூலர்,

> "***பொல்லாப் புலாலை நுகரும் புலையரை***
> ***எல்லாருங் காணு இமயன்றன் தூதுவர்***
> ***செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்***
> ***மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே***"[155].

என அச்சுறுத்துகின்றார்.

### 3.10.2.9 பிறன் மனை நயவாமை

பண பலமும் உடல் வலுவும் கொண்டவர்கள் செய்யும் ஒழுக்கக் கேடுகளுள் முதன்மையாக இருப்பது பிறன்மனை நயத்தல். இவ்வொழுக்கக் கேடு குடும்ப அமைதியையும் சமுதாய அமைப்பையும் ஒழுங்கையும் கெடுத்துச் சிதைத்திடும். கற்புடைய பிற பெண்டிரை மனதால் நயத்தலால் எய்தும் துன்பங்களைப் பற்றி,

> "***பகை பாவம் அச்சம்பழி எனநான்கும்***
> ***இகவாவாம் இல்லிறப்பான் கண்***"[156]

என வள்ளுவரும் பாடியுள்ளார்.

> "***வழக்க ழிவுகள் சொல்லாதே கற்பு***
> ***மங்கையர் மேல் மனம் வையாதே***"[157].

என்று கொங்கணச் சித்தர் வள்ளுவரின் கருத்தையொட்டிக் கருத்துத் தெரிவிக்கிறார்.

### 3.10.2.10 நேசம் வளர்ப்பாய்

சித்தர்கள் மக்கள் அனைவரும் தம்மைப் போல் பேரின்ப வாழ்வடைய வேண்டும் எனக் கூறினார்களே அன்றித் தம்மைப் போலக் காவியுடுத்திக் காடுகளில் திரியும்படிக் கூறவில்லை. சுற்றத்தோடு உண்மையான நேசம் கொண்டு வாழும்படிக் கடுவெளியார் கருத்துத் தெரிவிக்கின்றார்.

***“சொல்லரும் சூதுபொய் மோசம் செய்தால்***
***சுற்றத்தை முற்றாய்த் துடைத்திடும் நாசம்***
***நல்ல பத்தி விசுவாசம் - எந்த***
***நாளும் மனிதர்க்கு நன்மையாம் நேசம்”[158].***

எனும் பாடலில் சமுதாய ஒற்றுமைக்கு நேசம் மிகவும் அவசியம் என்பது புலப்படுகிறது.

### 3.10.2.11. ஏழைக்கிரங்கு நெஞ்சே

தமிழர் கண்ட அறங்களுள் ஈதல் பண்பே தலையாயது. ஈதலும் இசைபட வாழ்தலும் உயிர்க்கு ஊதியம் என்றும் ‘வறியார்க் கொன்று ஈவதே ஈகை’ என்றும் வள்ளுவம் கூறுகிறது. ஏழை எளியவர்களை இழிவாக நோக்குவதோ நடத்துவதோ தவறு.

***“ஏழைப் பனாதிகள் இல்லையென் றாலவர்க்கு***
***இருந்தால் அன்னம் கொடுக்க வேண்டும்***
***நாளையென்று சொல்லலாகாதே”[159].***

*“பஞ்சை பனாதி யடியாதே யந்தப்*
*பாவந் தொலைய முடியாதே*
*தஞ்சமென றோரைக் கெடுக்காதே”*[160]

என்று கொங்கணரும்,

*“.....உயர் செல்வமெல்லாம்*
*அன்றென்றிரு பசித்தோர் முகம்பார் நல்லறமும் நட்பும்*
*நன்றென்றிரு நடுநீங்காமலே நமக்கு இட்டபடி*
*என்றென்றிரு மனமே உனக்கே உபதேசம் இதே”*[161].

எனப் பட்டினத்தாரும் சமுதாயத்தில் ஏழைக்குச் செய்கின்ற தொண்டு இறைவனைச் சென்றடைகிறது என்கின்றனர்.

‘சிரிக்கும் புத்தர்’ என்றழைக்கப்படும் ஹோய்பீய் தம்மிடம் இருப்பவற்றைப் பிறருக்குப் பகிர்ந்து, கொடுக்க வலியுறுத்துகிறார். இக்கருத்தை உணர்த்தும் ஜென் கதையொன்று,

"சிரிக்கும் புத்தர் என்று மக்களால் அழைக்கப்பட்ட ஹோட்டீய் தான் ஒரு ஜென் குருவாக ஆக வேண்டும் என்றோ, சீடர்களைச் சேர்க்க வேண்டுமென்றோ நினைக்கவே இல்லை.

தானும் சிரித்து மற்றவர்களையும் சிரிக்க வைத்து, அதையே ஒரு தியானம் போலச் செய்து வந்தவர் அவர். அவருக்கு எப்போதும் ஒரு பை தோளில் தொங்கிக் கொண்டிருக்கும். அதில் நிறைய இனிப்புப் பண்டங்கள் இருக்கும். குழந்தைகளுக்கும் கொடுத்து மகிழ்வர். மற்றொரு பழக்கம் அவரிடம் இருந்தும்

ஜென் தொடர்பானவர் யாரைப் பார்த்தாலும், கை நீட்டி ‘ஒரு காசு குடு’! என்று கேட்பார்.

யாராவது அவரிடம், ‘ஏன் சுவாமி? கோயிலுக்குப் போய் அமர்ந்து உபதேசம் செய்வதுதானே’ என்று கேட்டால் ஒரு காசு கொடு! என்றுதான் சொல்வார்.

ஒருமுறை தெருக்குழந்தைகளுடன் சிரித்து விளையாடிக் கொண்டிருந்தபோது அந்தப் பக்கமாக வந்த ஜென் குரு ஒருவர் அவரைப் பார்த்து ஜென்னின் முக்கியத்துவம் என்ன? என்று கேட்டார்.

ஹோட்டீய் உடனே தம் தோளிலிருந்த பையைத் தூக்கித் தரையில் போட்டுவிட்டு அமைதியாக நின்றார். அதுதான் அவரது பதில்.

உடனே அந்த குரு, ‘ஜென்னின் நடைமுறை என்ன?’ என்று கேட்டார்.

ஹோட்டீய், கீழே கிடந்த பையை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு, திரும்பிப் பார்க்காமல் நடந்து சென்றார்”[162].

மேற்கூறப்பட்ட நிகழ்விற்கு ஜென் கூறும் தத்துவ விளக்கம், ‘ஒரு காசு குடு!’ என்பது உண்மையில் பிச்சை கேட்பது அல்ல. ‘எனக்குக் கொடுக்க நீ என்ன வைத்திருக்கிறாய்? என்று பொருள். உன்னிடம் இருப்பதை அனைவரிடமும் பங்கு போட்டுக் கொள் என்று பொருள்.

தனிமனிதன் தான் சார்ந்துள்ள சமுதாயத்தில் அறத்தைக் கடைபிடித்து வாழ்வானேயானால் வாழ்வில் பலன் பெரிதும் அடையலாம் எனச் சித்தர்கள் முக்திக்கான வழிமுறைகளைப் பாடல்களில் வெளிப்படுத்துகின்றனர்.

### 3.10.2.12 மானுட நேயம்

சமயம் என்பது மனித வாழ்வைப் பக்குப்படுத்தி நெறிப்படுத்துவதற்காகவே. ஆனால் மனிதன் அதைக் கையில் எடுத்துக்கொண்டு அதிகாரம் புரிந்து சமுதாயத்தைச் சீர்குலைத்துக் கொண்டிருக்கின்றான்.

'நாடோடித் துறவி ஒருவர் குளிர்காலத்தில் இரவு நேரத்தில் நடந்து வந்து கொண்டிருந்தார். அப்போது கடுமையான குளிர்காற்று வீசிக் கொண்டிருந்தது.

வழியில் இருந்த புத்த விஹாரத்தில் அந்த துறவி தங்கிட எண்ணினார். விஹாரத்தில் இருந்தவர்கள் அரை மனத்துடன் முன் பகுதியில் தங்கிக்கொள்ள அனுமதி தந்தனர்.

நள்ளிரவில் திடீரெனத் தூக்கம் கலைந்து விஹாரத்தின் பொறுப்பாளர் எழுந்து பார்த்தார். அப்போது எரியும் தீயின் முன்பு வந்தவர் குளிர் காய்ந்து கொண்டிருந்தார். அதிர்ச்சியுடன் சுற்றும் முற்றும் பார்த்தார் பொறுப்பாளர்.

சுவரோரம் இருந்த மரத்தாலான புத்தர் சிலைகளைக் காணவில்லை.

படுபாவி! படுபாவி! என்ன காரியம் செய்தாய்? புத்தரையே எரித்துச் சாம்பலாக்கி விட்டாயே! என்று பதறினார் பொறுப்பாளர்.

வந்தவரோ நிதானமாக ஒரு குச்சியை எடுத்து அந்தச் சாம்பலைக் கிளற ஆரம்பித்தார்.

'என்ன செய்கிறாய் நீ?' என்று கோபத்துடன் கூவினார் பொறுப்பாளர்.

‘நான் எரித்துவிட்டதாகத் தாங்கள் சொன்ன புத்தரின் எலும்புகளைத் தேடுகிறேன்!’ என்றார் வந்தவர்.

குழம்பிப் போன அந்த நபர் மடாலயத்தின் உள்சென்று நடந்ததைத் தெரிவித்தார். மடத்தின் தலைமைக் குரு, ‘முட்டாளே! வந்திருப்பவர் ஒரு ஜென் குரு. உயிரோடிருக்கும் மனிதனை விட்டுவிட்டு மரத்தைக் கட்டிக் கொண்டு அழுகிறாயே? என்ன மனிதன் நீ’ என்று சீறினார்”[163].

வெறும் உருவத்தில் கடவுள் இல்லை. சக மனிதர்களிடம் கொள்ளும் நேயம், மனிதத் தன்மை கொண்ட பண்பு ஆகியவையே சமுதாயத்தில் நேயம் வளரும் முறையாகக் கருதப்படுகிறது. வெறும் சிலைக்குத் தரும் மரியாதை, வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு புத்த குருவிற்குத் தர மறுப்பது ஏன் என்ற தலைமை குருவின் உரையாடல் மூலம் தெளிவாகின்றது.

‘‘சிறைச்சாலை’ எனும் ஜென் கதையில் புத்த துறவி ஒருவர் அரசாங்க வீரர்களால் கைது செய்யப்பட்டார்.

குருவிற்கு ஏதோ வீண்பழி உண்டாயிற்று என்றுதான் சீடர்கள் நினைத்தனர்.

ஆனால் விசாரணையில் அந்தக் குரு தானே முன்வந்து குற்றத்தை ஒப்புக் கொண்டார். அடிக்கடி சிறைச்சாலை செல்ல வழக்கமாக்கிக் கொண்டார்.

சீடர்கள் மனம் நொந்து கேட்டனர். ‘உண்மையைச் சொல்லுங்கள். எதற்காக அப்படிச் செய்தீர்கள்?’ என்று கேட்டார்கள்.

குரு சொன்னார்.

‘அப்பா! நீங்கள் எல்லாம் நாகரீக உலகில் வாழ்பவர்கள். உங்களுக்கு நல்ல வழி காட்ட என்னைப் போல் ஏராளமான பேர்கள் உண்டு. ஆனால் சிறையில் இருப்பவர்களுக்கு யாரிடமிருந்தாவது உபதேசம் பெறவோ, அதன் மூலம் நற்கதி அடையவோ வழியே இல்லையே!.

அதனால்தான் அடிக்கடி சிறை சென்றேன். இப்போது போய்ப் பாருங்கள். அங்குள்ளவர்களில் பெரும்பாலானவர்கள் திருந்தி நல்வழிப்பட்டு விட்டனர். என்னை விசாரித்த நீதிபதி நல்லவர். ஒவ்வொரு முறையும் எனக்கு ஆறு மாதத்திற்குக் குறையாமல் தண்டனை கொடுத்தார். அதனால்தான் என் பணியைச் சிறப்பாக என்னால் செய்ய முடிந்தது”[164] என்றார்.

கல்வி எனும் ஞானத்தை பெறற்கரியருக்கு வழங்குதல் என்பது மிகவும் சிறப்புடைத்தாகும். பசித்தவர்களுக்குக் கொடுப்பதே உண்மையான நல்விருந்து. ஆரோக்கியமானவனை விட நோயாளிகளுக்கே மருந்து அவசியம் தேவையாகிறது எனும் கருத்தை அடியொற்றி அமைந்ததே மேற்கூறப்பட்ட ஜென் கதைத் தத்துவம்.

சித்தர்களின் சமூகவியல் நோக்கு, அறம் சார்ந்ததோடு மருத்துவக் கலைகளிலும் பரந்து காணப்படுகிறது. நோய்க்கான மருந்துகளைச் சித்தர்கள் மக்களுக்கு வழங்கியுள்ளனர். ஜென் இலக்கியங்கள் வாழ்க்கையோடு இயைந்த கருத்துக்களை அனுபவரீதியாகப் பெறுமாறு கதைகளுடன் விளக்குகின்றன.

### 3.10.2.13 அ.்.றிணையிடத்தும் அன்பு காட்டு

"நம்மைப்போலவே, தாவரங்களுக்கும், விலங்குகளுக்கும் உயிர்த்தன்மை இருப்பதாக அறிகிறோம். எப்படி மரம், பூமியியலிருந்து வருகிறதோ, அதைப்போல நாமும் இந்த பூமியிலிருந்து தான் வருகிறோம். முறைதான வேறுபடுகின்றது"[165].

''வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன் என்றார் வள்ளலார். மனிதர்கள் மட்டுமின்றி கற்கள் மற்றும் மரங்களின் மீதும் கூட அன்பும் அக்கறையும் காட்ட வேண்டும் எனும் கருத்திலமைந்த ஜென் கதைகள் இதே போன்று, கற்பாறைகளை நேசிக்கும் குருவின் கதை,

"இதில் இரகசியம் ஒன்றுமே இல்லை. எனக்குப் பாறைகளிடம் மிகவும் பிரியம். அவற்றிற்கும் என்னிடம் மிகுந்த அன்பு. நான் எப்போதாவது பெரிய பாறையைத் தூக்கிக் காட்டவேண்டி இருந்தால், அந்தப் பாறையிடம் உன்மையைச் சொல்லி விடுவேன். ' இதோ பார் பாறைக் கண்ணே, இத்தனை பேர் வேடிக்கைப் பார்க்க கூடியிருக்கின்றனர்... என் கௌரவம் உன்கையில்தான் உள்ளது. எனக்கு உதவி செய். என்மானத்தைக் காப்பாற்று!' எனக்கேட்பேன். உடனே பாறையும் அன்பாக லேசாகிவிடும்...."[166]

### 3.10.2.14 மன்னிப்பு எனும் தண்டனை

தவறிழைத்தவர்களுக்குத் தண்டனை தருவது நம்பைம் பொறுத்தவரை புதிதல்ல. எனினும் தரப்படும் தண்டனை, தவறிழைத்தோரை மனந்திருத்தச் செய்வது என்பது அசாதாரணம். "அடுத்தவர் மீது பழியைப் போடுவது மனிதப் பிறவிகளின் மிகச் சாதாரணமான பழக்கவழக்கம் தான்"[167] பிறரின் தவறை மன்னிக்கும் மனப்பாங்கு பற்றியொரு ஜென் கதை,

“சிச்கிரி கோஜுன் என்று ஒரு குருவின் வீட்டில் திருடிய திருடனைப் பற்றிக் கூறுங்கால், "என்னைப் பொருத்தவரையில் இவன் திருடன் இல்லை. சிரமமாக இருந்ததால் என்னிடம் வந்தான். பணம் கொடுத்தேன். வாங்கிக் கொண்டு நன்றி கூட சொல்லிச் சென்றான். ‘என்ன...., நன்றி சொன்னாய் அல்லவா?’ என்றார் குரு ‘ஆமாம்’ என்று வியப்புடன் கூறினான் திருடன். சிறைவாசம் முடிந்ததும், நேராகக் குருவின் வீட்டிற்கு வந்து தங்கி அவர் சீடனானான்”[168]

## 3.11 முடிவுரை

1. சமுதாயம் என்பது தனிமனிதர்களின் கூட்டு உறவாலான அமைப்பு. குடும்பம், கல்வி, சமயம், அரசு போன்ற நிறுவனங்கள் இவற்றுள் அடங்கும். சாதி என்பது நம் சமுதாயத்தில் பிரித்திட முடியாத ஓர் அங்கமாகி விட்டது. அதனை சித்தர்கள் எதிர்க்கின்றனர்.
2. தமிழகத்தில் தொடக்க காலத்திலிருந்தே சமுதாயம் குறித்த சிந்தனைகள் பேசப்பட்டு வருகின்றன. தொடக்க காலத்திலும், பக்தி இயக்கக் காலத்திலும் நால்வருணப் பாகுபாடு நிலவியது. இடைக்காலத்திற்குப் பின்பு இத்தகு வருணப் பாகுபாட்டை எதிர்த்து சித்தர் இலக்கியங்கள் குரல் கொடுத்தன.
3. ‘ஜென்’ என்பது வெறும் தத்துவமல்ல. அது ஒரு வாழ்க்கை வழிகாட்டி. ஜென் குருக்களும் யோகிகளும் துறவிகளும் மக்களுக்குப் புரிகின்ற வகையில் சின்னஞ்சிறு கதைகள் மூலமாக வாழ்க்கைத் தத்துவத்தை எழுச்சி பொங்க படைத்திருக்கின்றனர். சமூகக் குறைகள் நீங்கவும்

'மனிதம்' தழைத்து சமுதாய முன்னேற்றம் ஓங்கிடவும் ஜென் பல வழிமுறைகளைக் கூறுகின்றது.

4. இது போன்றே சமுதாயச் சீர்திருத்த நோக்கம் கொண்ட சித்தர்களின் பாடல்களில், படைப்பாற்றல் மிக்க இறைவன் ஒருவனே என்றும், பற்றற்ற வாழ்வே இறைவனை அடைவதற்கான பாதையின் முதற்படி என்றும் விளக்குகின்றது.

5. சாதி எதிர்ப்புக் குரல்களைச் சித்தர்கள் அதிகம் வெளிப்படுத்தியுள்ளனர். ஜென் இலக்கியம் தோன்றிய சூழல் காரணத்தால் அவற்றைப் பற்றி அதிக அளவில் கூறவில்லை.

6. பெண்ணாசை விலக்கல் முக்திக்கு வழி என்ற சித்தர்களின் கருத்தை அடியொற்றி ஜென் தத்துவமும் துறவு வாழ்வு மேற்கொள்ளத் தடையாகப் பெண்ணாசை அமைகிறது என்று எச்சரிக்கின்றது. சித்தர் பாடல்களில் பெண்ணாசை விலக்கல், பெண் ஆதரவு, பெண்மை குறித்துப் பேதம் பாராட்டாமை போன்ற கருத்துக்கள் சித்தர்களுக்கிடையே வேறுபாடாற்ற நிலையில் பேசப்படுகிறது.

7. சமுதாயத்துள் ஆணிவேர் போல் ஊன்றி தழைத்துக் கொண்டிருக்கும் சாதி குறித்தும், அதன் விளைவாக ஏற்படும் துன்பங்களையும சித்தர் பாடல்கள் பகுத்துரைக்கின்றன. தீண்டாமை எதிர்ப்பு பற்றியும் வளர்ச்சிக்குத் தடையான மூடநம்பிக்கை மறுப்பு பற்றியும் இவ்விலக்கியங்கள் பேசுகின்றன.

8. சமுதாயத்தின் அங்கமாகத் திகழும் தனிமனிதனின் செயல்பாடுகள் குறித்தும், தனிமனித அறம் குறித்தும் சித்தர் பாடல்களும் ஜென்

கதைகளும் விளக்கியிருக்கின்றன. அவற்றுள் மன்னிக்கும் மனப்பான்மையை குற்றம் செய்தோனை மனம் மாற்றும் வழி என்னும் கருத்து முத்தாய்ப்பானது.

9. தனிமனித வாழ்க்கை நெறியே சமுதாய ஒழுங்கிற்கு அடிப்படை என்பதை நன்குணர்ந்த சித்தர்கள் பல நல்ல அறிவுரைகளை மனித குலத்திற்கு வழங்கியுள்ளனர்.

## குறிப்புகள்

1. தா. ஈசுவரப்பிள்ளை, **சித்தர்களும் வேமனும்,** ப.10.
2. George Ritzer, **Sociology,** p.64.
3. P.C. Deb, **Kural Sociology,** p.10.
4. சேயோன், **ஒரு மான் தாவுமோ?,** ப.64.
5. க.நாரயணன், **சித்தர் தத்துவம்**, ப.185
6. தொ. பரமசிவம், **சங்க இலக்கியத்தில் சாதி அமைப்பின் மூலப்படிவங்கள்,** ப.26.
7. பொன்னீலன், முப்பால்மணி, **சாதி மதங்களைப் பாரோம்,** ப.27.
8. தா. ஈசுவரப்பிள்ளை, **பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை,** ப.12.
9. புறம்.183
10. குறள், 982.
11. மேலது, 409.
12. மேலது, ப.216.
13. நாலடியார், ப.136.
14. மேலது, ப.133.
15. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.510
16. தொல். பொருள். கற்பியல் -1
17. பட்டினத்தர், **சித்தர் பாடல்கள்,** பா.3.
18. மேலது, பா.34.
19. இடைக்காடர், **சித்தர் பாடல்கள்,** பா.82.
20. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.41.
21. மேலது, ப.131.
22. மேலது, ப.13.
23. பத்ரகிரியார், **சித்தர் பாடல்கள்,** பா.13.
24. அழுகணியார், **சித்தர் பாடல்கள்,** பா.26.
25. குருஜி வாசுதேவ், **ஜென் தத்துவக் கதைகள்,** பா.194.
26. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.36.
27. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.26.

28. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.152.
29. மேலது, **சித்தர் பாடல்கள்** , பா.5.
30. மேலது, பா.13.
31. மேலது, பா.2.
32. மேலது, பா.96.
33. மேலது, பா.97.
34. குருஜி வாசுதேவ், **ஜென் தத்துவக் கதைகள்,** பா.18.
35. திருமூலர், **திருமந்திரம்**, பா.1588
36. குறள்,34
37. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** ப.14.
38. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.48.
39. இடைக்காடர், **சித்தர் பாடல்கள்,** பா.25.
40. குருஜி வாசுதேவ், **ஜென் தத்துவக் கதைகள்,** ப.57.
41. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள் ,** ப.12.
42. இடைக்காடர், **சித்தர் பாடல்கள்**
43. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள் ,** ப.29.
44. மேலது, ப.75.
45. மேலது, பா.116.
46. பத்ரகிரியார், **சித்தர் பாடல்கள்,** பக் 9-10.
47. இடைக்காடர், **சித்தர் பாடல்கள்,** பா.15.
48. கடுவெளியார், **சித்தர் பாடல்கள்,** பா.24.
49. மேலது, பா.9.
50. இடைக்காடர், **சித்தர் பாடல்கள்,** பா.15.
51. திருமூலர், **திருமந்திரம்**, பா.2008.
52. கு. மோகனராசு, (உ.ஆ), **திருக்குறள்,** பா.913.
53. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள் திருஏகம்பமாலை,** ப.23.
54. மேலது, ப.16.
55. பாம்பாட்டியார், **சித்தர்கள் பாடல்கள்,** பா.16.
56. மேலது, பா.59.

57. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** ப.30.
58. மேலது**,** 4.
59. பாம்பாட்டியர், **சித்தர்கள் பாடல்கள்,** பா.56.
60. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.505.
61. வைரமுத்து(பா.ஆ.) **மனதில் உறுதி வேண்டும்** (திரைப்படம்)
62. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.1, 2.
63. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** பக்.89-91.
64. பாம்பாட்டியார், **சித்தர்கள் பாடல்கள்,** பா.52.
65. மேலது, பா.56.
66. மேலது, பா.58.
67. திருமூலர், **திருமந்திரம் விளக்கவுரையுடன்,** பா.515.
68. மேலது, பா.1157
69. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.505.
70. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** ப.232.
71. மேலது, பா.14.
72. மேலது, பா.23.
73. மேலது **,** பா.13.
74. வள்ளலார், திருவருட்பா, பா.8
75. மேலது, பா.370.
76. மேலது, பா.278.
77. மேலது, பா.296.
78. மேலது, பா.255.
79. குருஜி வாசுதேவ், **ஜென் தத்துவக் கதைகள்,** ப.96.
80. பத்திரிகிரியார், **சித்தர் பாடல்கள்,** பா.10.
81. சட்டைமுனி ஞானம், **சித்தர் பாடல்கள்,** பா.5.
82. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.43.
83. மேலது, பா.249.
84. மேலது, பா.240.
85. குதம்பைச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.198.

86. மேலது, பா.194.
87. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.42.
88. மேலது, பா.35.
89. க.ஆ. ஆனந்த ரவிசாஸ்திரி, **சித்தர்களின் சமுதாயச் சிந்தனைகள்,** ப.70.
90. குறள், 972.
91. தா. ஈசுவரசப் பிள்ளை, **சித்தர்களும் வேமனும்,** ப.16.
92. கொங்கணர், **சித்தர் பாடல்கள்,** பா.95.
93. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.450.
94. மேலது, பா.203
95. காகபுசுண்டர், **சித்தர் பாடல்கள் ஞானம்,** பா.59.
96. பாம்பாட்டிச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.123.
97. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** ப.11.
98. பாம்பாட்டிச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.92.
99. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.496.
100. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** பக்.64-65.
101. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.103.
102. வால்மீகச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.8.
103. திருமூலர், **திருமந்திரம்,** பா.456.
104. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.37.
105. மேலது, பா. 444.
106. மேலது, பா. 451.
107. மேலது, பா.460
108. இராமலிங்க அடிகள், **திருவருட்பா,** பா.4078.
109. குதம்பைச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.142.
110. மேலது, பா.140.
111. மேலது, பா.139.
112. மேலது, பா.137.
113. மேலது, பா.144.
114. சிவவாக்கியர், **சித்தர் பாடல்கள்,** பா.476.

115. வால்மீகர், **சூத்திரஞானம்**, பா.8.
116. சிவவாக்கியர், **சித்தர் பாடல்கள்,** பா.160.
117. மேலது, பா.182.
118. மேலது, பா.126,128.
119. மனுநீதி, சூ.85.
120. சிவவாக்கியர், **சித்தர் பாடல்கள்,** பா.138.
121. மேலது, பா.214.
122. மேலது, பா.453.
123. மேலது, பா.31.
124. ஞானவெட்டியான், **சித்தர் பாடல்கள்,** பா.23.
125. மேலது, பா.24
126. மேலது, பா.25
127. பாம்பாட்டியார், **சித்தர் பாடல்கள்,** பா.99.
128. மேலது, பா.13.
129. சு வேங்கடராமன், **அறியப்படாத தமிழ் இலக்கிய வரலாறு**, ப.93
130. சிவவாக்கியர், **சித்தர் பாடல்கள்,** பா.150.
131. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** ப.35.
132. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** ப.80.
133. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா17.
134. மேலது, பா.150.
135. கடுவெளியார், **சித்தர் பாடல்கள்,** பா28.
136. மேலது, பா.25.
137. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** பக்.18-19
138. கடுவெளியார், **சித்தர் பாடல்கள்,** எடுப்புப் பாடல்.
139. மேலது ப.29.
140. மேலது, பா.33.
141. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்**, பா.7.
142. குருஜி வாசுதேவ், **ஜென் தத்துவக் கதைகள்,** ப.73.
143. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்**, பா.18.

144. மேலது, பா.19.
145. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** பக்.50-51
146. பாம்பாட்டிச் சித்தர், **சித்தர் பாடல்கள்**, பா.115.
147. பத்ரகிரியார், **மு.நூ**, பா.1.
148. இடைக்காட்டுச் சித்தர், **மு.நூ,** பா.13.
149. அகத்தியர், **மு.நூ.** பா.1
150. எஸ்.ஏ.பி., **100 ஜென் கதைகள்**, ப.81.
151. குறள், 324
152. திருமூலர், **திருமந்திரம்**, பா.241.
153. மேலது, பா.240.
154. பத்ரகிரியார், **சித்தர் பாடல்கள்,** பா.14.
155. திருமூலர், **திருமந்திரம்**, பா.241.
156. குறள், 146
157. கொங்கணச் சித்தர், **சித்தர்பாடல்கள்,** பா.90.
158. கடுவெளியார், **மு.நூ.** பா.2.
159. கொங்கண சித்தர், **சித்தர்பாடல்கள்,** பா.84.
160. மேலது, பா.87
161. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்**, பா.105
162. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** பக்.38-39
163. குருஜி வாசுதேவ், **ஜென் தத்துவக் கதைகள்,** பக்.30-31.
164. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்**, பக்.31-32.
165. ஓஷோ, **யாகூசான்: ஞானத்திற்கு நேர்வழி** , ப.14.
166. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** பக்.86-87.
167. ஓஷோ, **ஜென்னுடன் நடந்து ஜென்னுடன் அமர்ந்து**, ப.208.
168. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** பக்.78-79

# 4. சமய நோக்கில் சித்தர், ஜென் இலக்கியங்கள்

## 4.0 முன்னுரை

சமயம் என்பது பண்பாட்டின் முக்கியக் கூறுகளில் ஒன்றாகும். உலகின் பெரும்பாலான பண்பாடுகளில் சமயம் முக்கிய இடத்தை வகிக்கிறது. சமயம் என்பது இறைவன், உலகம், உயிர் என்ற மூன்று அடிப்படைத் தத்துவங்களின் உறவாக அமைவதாகும். மனிதஇனம் தோற்றம் பெறத் துவங்கிய காலத்திலிருந்தே சமய நம்பிக்கைகளும் ஏதாவது ஒரு காரணத்தின் அடிப்படையில் மனித வாழ்க்கையுடன் இரண்டறக் கலந்தே வந்திருக்கின்றன. இதன் காரணமாக மக்களிடையே நிறுவன அடிப்படையிலான சமய நம்பிக்கைகள் நிரந்தரமான நிலைப்பாட்டினைப் பிற்காலத்தில் ஏற்படுத்திக் கொண்டன.

மனிதனுக்கும் மனித சக்திக்கும் மேற்பட்டதாக உள்ள இயற்கை ஆற்றல்களுக்கு இடையேயான தொடர்பு பற்றிய கருத்தாக்கங்கள் மனித சமூகத்தில் படைப்பாற்றல் மிக்க இறைவன் ஒருவன் இருக்கிறான் என்ற நம்பிக்கையை வலுப்பெறச் செய்தது. இதுவே நிறுவன, சமய வரலாற்றின் தொடக்கமாகவும் அமைந்தது. உலக வாழ்க்கையின் மறைபொருளை உணர்த்திப் பேரின்ப வாழ்விற்கு வழிகாட்டுவதாகவும் சமயம் அமையப் பெற்றுள்ளதாக அறிஞர்கள் குறிப்பிடுவர். சமுதாயத்தில் சமயம் மற்றும் கடவுளின் பெயரால் பூசல்கள் பெருகியதுடன் சமயப் போர்களும், சமுதாயச் சீரழிவுகளும் ஏற்பட்டன. இத்தகைய காலக்கட்டங்களில் சமயம் கடந்த ஞானியர்கள் தோன்றி சமயத்தின் பேரால் நடக்கும் சீர்கேடுகளையும், கொடுமைகளையும் எதிர்த்ததோடு சீர்திருத்தச் சிந்தனைகளையும் முன்மொழிந்தனர்.

அந்த வகையில் தமிழ்ச் சிந்தனை மரபில் சமயம் கடந்த ஞானியர்களாக விளங்கிய சித்தர்கள், சமயத்தின் பேரால் நிலவிய சீர்கேடுகளையும், கொடுமைகளையும் எதிர்த்துக் குரல் கொடுத்ததோடு சமயம் குறித்த சிந்தனைகளையும் தமது பாடல்களில் முன் வைத்துள்ளனர். சித்தர் இலக்கியங்களைத் தொடர்ந்து பல்வேறு சமயக் கருத்தாக்கங்கள் புத்தர் போதித்த உலக உண்மைத்தத்துவங்களை எடுத்துரைக்கின்றன. சித்தர்-ஜென் இலக்கியங்களின் சமயம் குறித்த முற்போக்குச் சிந்தனை இவ்வியலில் விளக்கப்படுகிறது.

## 4.1. சமயம் - விளக்கம்

'சமயம் என்பது அடையாளங்கள் அல்லது குறியீடுகள், நம்பிக்கைகள், மதிப்புகள், சடங்குகள், இயற்கை இறந்த சக்திகள் போன்வற்றால் நிறுவனமாகப் பெற்ற முறை (Institutional System) என்று சமூகவியலாளர்களான குளுக் மற்றும் ஸ்டார்க் கருதுகின்றனர்'. சமூகவியல் அகராதி, "இயற்கையிறந்த பொருள் அல்லது பொருள்களைச் சுற்றியுள்ள மனித உறவுகளைச் சுற்றியும் உருவாக்கப் பெறுவதே சமயம் என்று விளக்கம் தருகின்றது"[1].

சமயம் என்பதற்குச் 'சமைத்தல்' என்பது பொருள். சமைத்தல் என்பது 'பக்குவப்படுத்துதல்' என்ற பொருளில் மனிதன் தன் வாழ்வினை மையப்படுத்தி அமைகிறது. இந்தப் பக்குவப்படுத்துதல் நிலை கடவுள் நம்பிக்கையை மையமிட்டதாக அமைகிறது. கடவுள் நம்பிக்கை என்பது மனிதனின் சமய வாழ்வின் அடிப்படையாகிறது.

கடவுள் நம்பிக்கையானது 'இறைவன் ஒருவனே' என்ற தத்துவத்தை அடிப்படையாக்குகிறது. சமுதாயத்தில் மனிதனை வேறுபாடுகளற்ற உணர்வுடன் 'மனிதனுக்கு மனிதன் சமம்' என்ற தகுதிப்பாட்டை உடையவனாக மாற்றுவது 'பக்குப்படுத்துதல்' என்ற நிலையாகும்.

"சமயம் என்பது புனிதமான ஒன்றைப் (Sacred thing) பற்றிய நம்பிக்கைகளும் செயல்முறைகளும் அடங்கிய ஓர் ஒழுங்கமைந்த முறையாகும் என்பார் எமிலி டெர்கைம்"[2].

ஒடியா என்பவர், "பகுத்தறிவுக்கு எட்டாததும் (Non-rationl) செயலறிவுக்கு உட்படாததுமான ஓர் உலகத்துடன் தொடர்பு கொள்ள மக்கள் ஏற்படுத்திக் கொண்ட முறையே சமயம்"[3] என்று குறிப்பிடுகின்றார்.

"இயற்கையின் போக்கையும், மனித வாழ்க்கையையும் கட்டுப்படுத்துவதாகவோ அல்லது இயக்கப் பெறுவதாகவோ நம்பப் பெறும், மனித சக்திக்கும் மேலான ஒரு சக்தியுடன் நல்லிணக்கம் செய்து கொள்வதையே சமயம் என்ற நிறுவனம் குறிக்கின்றது"[4] என்று சமயத்தினை ஒரு நிறுவன அமைப்பாக ரீனிச் (Reinach) விளக்கமளிக்கின்றார். 'இறை நம்பிக்கை' எனும் அடிப்படையில் மனிதர்களுக்கிடையே சுமூகமான உறவினை வலுப்படுத்தும் வகையில் சமய நிறுவனம் சமுதாயத்தின் பெரும் பங்கினை வகிக்கின்றது.

'உயர்திணை எனச் சிறப்பிக்கப் பெறும் மக்கட்குலத்தார் அறத்தின் வழி நிலைநின்று பொருளீட்டித் தாமும் பிறரும் இன்புடன் இனிது வாழ்தல் வேண்டித் தம் வாழ்க்கையில் தவறாது கடைப்பிடிப்பதோடு அமைத்துக்கொண்ட ஒழுக்க

நெறியே சமயம் என்ற பெயரால் வழங்கப்பெறுகிறது' என்று வெள்ளைவாரணர் கருத்துத் தெரிவிக்கின்றார்.

மேற்கூறப்பட்ட விளக்கங்களின் வழி சமயம் என்பது நம்பிக்கையின் அடிப்படையில் மக்களால் ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட அமைப்பாகும். சமயம் என்பது அடிப்படையில் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டு ஒரு ஆற்றல் உள்ளது என்ற நம்பிக்கையினை அடியொற்றித் தோற்றம் பெற்றதாகும்.

டோஜென் எனும் ஜென் குரு பாடுகிறார்,

*"பூச்சாண்டிப் பொம்மை*
*நெல் வயலில்*
*எத்தனை விழிப்புணர்வற்று*
*எத்தனை உபயோகமாய்!"*[5]

இக்கவிதை வழி பூச்சாண்டி பொம்மை, அதாவது சோளக் கொல்லைப் பொம்மை என்பது ஒரு பொய்மனிதன். காட்டு விலங்குகளை அச்சுறுத்தவே அது உண்டாக்கப்பட்டது. எனினும், அது சில நேரங்களில் அழகாகவும் பல நேரங்களில் உபயோகமானதாகவும் இருக்கின்றது. அதனைப் போன்றுதான் இறைஞானம் என்று கருதலாம்.

யோகம், ஞானம் ஆகிய இவை இரண்டும் சமய எல்லைக்கு அப்பாற்பட்டதாகக் கருதப்பட்டது. ஆலயம், உருவ வழிபாடு, சடங்குகள் முதலியவற்றால் சமயங்கள் வேறுபடுகின்றன. இவ்வேறுபாடுகள் முரண்பாடுகளாகி மக்களிடையே கசப்பையும், வெறுப்பையும் உருவாக்கிப்

பூசலையும் போரையும் விளைவிக்கின்றன. சமய எல்லையைக் கடந்துவிட்டால் இவ்வேறுபாடுகள் இல்லாத ஒருமை நிலையைக் காணமுடியும்.

''சமயச் சார்பில்லாமல் சித்தானுபவம் பெற்ற சித்தர்கள் உலகெங்கும் இருந்தனர் என்பதற்கான சான்றுகள் உள்ளன. அவர்கள் வெவ்வேறு பெயர் உடையவர்கள். வேறுபட்ட இறைக் கோட்பாடும், பாரம்பரியமும், பழக்கவழக்கங்களும் உடையவர்கள். அவர்களுடைய சில அடிப்படையான உணர்வுகளும் செயல்களும் எல்லா நாட்டுச் சித்தர்களும் ஏற்றுக் கொள்ளக் கூடியனவாக இருக்கின்றன. உலகியலை வெறுத்து ஒதுக்குவது அல்லது பெரும்பான்மையோரின் இயல்புக்கு மாறாக உலகியலை நோக்குவது என்பது இவர்களிடையே காணப்படும் பொது நோக்கு''[6].

இறைவனோடு தன்னை ஐக்கியப்படுத்தி இரண்டறக் கலந்து, கரைந்து இறைப்பக்தியால் இறைமையோடு ஒன்றிவிடும் தன்மையானது சித்த அனுபவமாகிறது. சமய எல்லையைக் கடந்து எல்லா மதங்களிலும் இறையின்பம் காண முயன்றவர்கள் ஏராளம். இந்து மதத்தில் அவர்கள் 'சித்தர்கள்' என அழைக்கப்படுகிறார்கள். சீனத்தில் 'தாவோக்கள்' என்றும், இஸ்லாத்தில் 'சூபிகள்' என்றும் பெயரிட்டு அழைக்கப் பெறுகின்றனர். 'இறை' பற்றிய இவர்களது கருத்தாக்கங்களும் கோட்பாடுகளும் வேறுபாடுடையவை. அவற்றுள் சித்தர்களின் கருத்துக்களைச் 'சித்தர் நெறி' என்ற பெயரில் பொதுத்தன்மை உடைய கோட்பாடுகளாகக் கொள்ளலாம்.

## 4.2. ஜென் சமயம்

ஜென் என்பது மதம் கடந்தது. அது வாழ்க்கை நெறி அல்ல. அதுவே வாழ்க்கையாகிறது. ஜென் கடவுளைத் தேடுவது இல்லை. அதுவே கடவுள் ஆகிறது.

"ஜென்னுக்கு விளக்கம் சொல்ல வேண்டுமானால் நாமே ஒரு ஜென் ஆனால்தான் முடியும். செய்யும் தொழில் எதுவானாலும் அதிலேயே முழ்கிப்போ என்பதுகூடத் தவறு. அதுவாகவே மாறிவிடு என்கிறது ஜென்"[7]

ஜென் என்பதற்கு விளக்கம் தரும் குட்டிக்கதை வருமாறு:

"கடலில் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு சின்ன மீனுக்கு நீண்ட நாளாக ஒரு சந்தேகம். கடல், கடல் என்று பேசிக் கொள்கிறார்களே, அப்படி என்றால் என்ன? என்பதுதான் அதன் சந்தேகம். அதைத் தெளிவுப்படுத்திக் கொள்ள ஒரு பெரிய மீனிடம் சென்று கேட்டது. 'அதுதான் உன்னைச் சூழ்ந்திருக்கிறது. அதற்குள் தான் நீ இருக்கிறாய்!' என்றது பெரிய மீன். ஆனால் அது எனக்குத் தெரியவில்லையே! என்றது சின்ன மீன்.

"நீ அதற்குள் இருப்பதால்தான் உனக்குத் தெரியவில்லை என்கிறது பெரிய மீன். நீ பிறந்ததும் கடலில், வாழ்ந்து வருகின்றாய். உன்னைச் சுற்றி இருப்பதும் கடல். உனக்குள் இருப்பதும் கடல். உனது தோலைப் போல் அது உன்னை விட்டு நீங்காமல் சூழ்ந்திருக்கின்றது. நீ பிறந்து வாழ்ந்து மறையப் போவதும் இந்தக் கடலில்தான். அதற்குள் இருப்பதால் அது தெரியவில்லை"! என்றது பெரிய மீன்"[8].

நாம் இயல்பாக ஜென்னில்தான் இருக்கிறோம். அதாவது நம் இயற்கை, இயற்கையான இயல்புதான் ஜென் என்று அக்கதை விளக்கம் தருகிறது. இவ்விளக்கத்திலிருந்து ஜென் என்பது சமயத்திற்குள் அடங்குவது அல்ல. வாழ்க்கையின் எதார்த்தத்தை வெளிக்காட்டுவது. மேலும் அதுவே வாழ்க்கை என்பதும் புலப்படுகிறது. சமயச் சடங்குகளுக்குள் அடங்காத வாழ்வின் எதார்த்த நிலையே ஜென் என்றாகிறது.

"ஆன்மீகம் என்பது தியானத்தை மட்டுமே குறிக்கவல்லது. ஏனெனில், அது உங்கள் உயிர்தன்மையில் ஆழமான வேராகப் படர்ந்திருக்கிறது. இது மாத்திரம்தான் இந்த உலகத்தில் இறப்பற்றது"[9] என்று ஓஷோ கருத்து கூறுகின்றார்.

## 4.3. சமயத்தின் குறிக்கோள்

சமயங்கள் அனைத்தின் அடிநாதம் இறையுணர்வுதான். இறையுணர்வினை மட்டும் கருத்தில் கொண்டால் சமயங்களிடையே வேறுபாடில்லை, மாறுபாடில்லை. தேவையற்ற சடங்குகளால் சமயங்களிடையே வேற்றுமைகள் வளர்க்கப்பட்டு வருகின்றன.

உலகில் எண்ணற்ற சமயங்கள் தோற்றம் பெற்றிருந்தாலும் ‘அன்பு’ என்ற கருத்தையே குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றன. இறையுணர்வின் மூலம் வீடுபேறு பெறுதலே சமயத்தின் குறிக்கோள் (அடைவு நிலை) ஆகிறது.

புனித உணர்வு எங்கெல்லாம் தோன்றுகிறதோ அங்கெல்லாம் சமயம் வேரூன்றியிருப்பதாகக் கருதப்படுகிறது. எனவே சமயம் என்பது மனிதனைப் பண்படுத்தும் வழித்தடமாக வேரூன்றியது. இதன் காரணமாகவே மனிதனை

ஒழுங்குபடுத்தி ஒரு கட்டுக்கோப்புக்குள் கொண்டு வருவதற்குச் சமயம் முயற்சி செய்கிறது. இதன் பயனாகவே மனித சமூகத்தை மேம்படுத்தும் நோக்கிலேயே உலகில் பல சமயங்கள் தோன்றி வளர்ச்சியடைந்துள்ளன. இவ்வுலகில் சமயங்கள் அனைத்தும் சமய ஒருமைப்பாட்டினையே வலியுறுத்துகின்றன.

உலகியல் வாழ்வில் காணப்படும் துன்பத்தையும் குறைபாட்டையும் தவிர்த்து இடையறா இன்பத்தையும், நிறைவையும் பெற்று மன அமைதி காண விரும்பும் மக்களுக்கெல்லாம் வழிகாட்டுவதே சமயத்தின் முதன்மைக் குறிக்கோளாகும். அமைதியான சமூகச் சூழலில் மகிழ்ச்சியாக வாழ்ந்து மனிதன் பரம்பொருளின் திருவடியை அடைய வேண்டும் என எல்லாச் சமயநெறிகளும் கூறுகின்றன. அந்த வகையில் எல்லாச் சமயங்களுக்கும் பரம்பொருள் ஒன்றாகவே அமைகிறது. ஆனால் ஒவ்வொரு சமயமும் பரம்பொருளுக்குத் தனி உருவமும் பெயரும் சூட்டி வழிபடுவதால் சமயங்களின் எண்ணிக்கைக்கேற்ப கடவுள்களின் எண்ணிக்கையும் வளர்ந்தது.

சமயமானது, சமுதாய சமத்துவமின்மைக்கும் வகுப்புவாத கலவரங்களுக்கும், சுரண்டல்களுக்கும், சமுதாய மாற்றத்திற்குத் தடையாகவும் மாறியது. இக்காரணத்தால் சமயம் எப்போதும் ஊறு விளைவிக்கும் செயல்களை மட்டும் தன்னகத்தே கொண்டுள்ளது எனக் கூறிவிட முடியாது.

‘‘அறிவியல் பாங்கில் நிரூபிக்கப்படாத ஒரு கருத்தை நம்பி ஏற்பதன் மூலம் பலநூறு பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியும் என்றபோது, அத்தகைய நம்பிக்கையை ஏற்கத்தான் வேண்டும்’’[10] என்று செருமானிய தத்துவ அறிஞர் இம்மானுவேல் காண்ட் கூறுகிறார்.

சித்தர்களும் கடவுள் உண்மையை வாக்குவாதமின்றி ஏற்றுக் கொள்கின்றனர். ஆனால் மக்களின் மூடநம்பிக்கைகளையும் போலியான சாத்திர சடங்குகளையும் கடுமையாகச் சாடுகின்றனர்.

இறைவன் உண்டு என நம்பு; அவன் ஒருவன்தான் எனக் கொள்; அவனும் புறத்தே இல்லை; உன் உள்ளத்திலேயே இருக்கின்றான். புற வழிபாடுகள் யாவும் பொருளற்றவை; பயனற்றவை; ஆரவாரமானவை என்பதே சித்தர்களின் சித்தாந்தம் ஆகும்.

சமயத்தின் குறிக்கோள் குறித்து விளக்கமளிக்கும் ஜென் கதை ஒன்று கீழ்வருமாறு:

''அரசாங்க வீரர்களால் குரு கைது செய்யப்பட்டதை அறிந்த சீடர்கள் அதிர்ந்து போனார்கள். தானே முன்வந்து குற்றத்தை ஒப்புக் கொண்டு சிறைச்சாலை சென்று வருவது ஏன் என்று சீடர்கள் நினைத்தார்கள். வெளியே வந்த நாட்களில் வேறு ஒரு குற்றத்திற்காக மீண்டும் சிறை புகுந்தார் அந்தக் குரு.

இப்படி அடிக்கடி சிறு சிறு குற்றங்கள் புரிவதும் சிறைச்சாலைக்கு அடிக்கடி செல்வதும் அவரது வழக்கமாகி விடவே அவரைச் 'சிறைச்சாலைக் குரு' என்றே அழைக்க ஆரம்பித்தனர்.

நாட்கள் கழிந்தன. குருவுக்கு மிகவும் வயதாகிவிட்டது. உடல் தளர்ந்து படுத்த படுக்கையானார். ஒருநாள் அவரைச் சுற்றி சீடர்கள் கூடினார்கள். 'இப்போதாவது உண்மையைச் சொல்லுங்கள். எதற்காக அப்படிச் செய்தீர்கள்?' என்று கேட்டார்கள்.

நீங்களெல்லாம் நாகரீக உலகில் வாழ்பவர்கள். உங்களுக்கு நல்வழி காட்ட என்னைப் போல் ஏராளமான பேர்கள் உண்டு. ஆனால் சிறையிலிருப்பவர்களுக்கு யாரிடமிருந்தாவது உபதேசம் பெறவோ, அதன்மூலம் நற்கதி அடையவோ வழியே இல்லையே! இதனால்தான் அடிக்கடி சிறை சென்றேன். இப்போது போய்ப் பாருங்கள். அங்குள்ளவர்களில் பெரும்பாலானவர்கள் திருந்தி நல்வழிபட்டு விட்டனர். என்னை விசாரித்த நீதிபதி நல்லவர். ஒவ்வொரு முறையும் எனக்கு ஆறு மாதத்திற்குக் குறையாமல் தண்டனை கொடுத்தார். அதனால்தான் என் பணியைச் சிறப்பாக என்னால் செய்ய முடிந்தது”[11] என்று முடித்தார் குரு.

மேற்சொல்லப்பட்ட கதையின் மூலமாக உபதேசம் கிடைப்பது யாருக்கும் எளிது. ஆனால் அது வாய்க்கப் பெறாதவர்களுக்குக் கிடைக்கச் செய்வதே ஜென் தத்துவத்தின் குறிக்கோளாகிறது.

சமயம் உணர்ச்சிப்பூர்வமான விடுதலையை தனிமனிதனுக்கு அளிப்பதன் மூலம் சமுதாய உறுப்பினர்கள் சமுதாயத்துடன் இணைந்து வாழும் தன்மையை ஏற்படுத்திக் கொடுக்கின்றது. மக்களின் குறுகிய நிலையற்ற வாழ்க்கைக்கு அழிவற்ற முக்கியத்துவம் கொடுக்கின்றது. தனிமனிதர்களின் வாழ்க்கையில் எதிரிடும் துன்பகரமான நேரங்களில் சமுதாயத்தில் அவ்வப்போது தோன்றும் நெருக்கடியான நேரங்களிலும் ஆறுதல் அளிக்கவும் வலிமையூட்டவும் சமயம் துணை நிற்கின்றது.

## 4.4. ஒன்றே பரம்பொருள்

‘சித்தர்கள் சமய முத்திரை பெற்ற சமரச சன்மார்க்க நெறியைப் பேணியவர்கள்தாம் என்றாலும் அவர்கள் சிவனையே தம் ஒரு தேவனாகக்

கொண்டதாகத் தெரிகிறது' என்று சித்தர்களின் சமயம் மற்றும் கடவுள் நம்பிக்கை குறித்து மு. அருணாச்சலம் குறிப்பிடுகிறார்.

சித்தர்களில் பெரும்பாலானவர்களுக்குக் கடவுள் என்ற ஒன்று உண்டு. அதை 'சிவம்' என்று அழைக்கின்றனர். 'சிவம் வேறு, சிவன் வேறு' என்ற பொருள் வேறுபாட்டினையும் கொண்டிருக்கின்றனர்.

'உடலும் உயிரும் பூரணமும் மூன்றும் ஒன்று உலகத்தின் சிலபேர்கள் வெவ்வேறென்பர்' எனும் கருத்தினை, பதி, பசு, பாசம் என்ற மூன்று தத்துவங்களுக்குள் உலகம் அடங்கியிருக்கின்றது என்று கூறும் சைவ சித்தாந்தக் கருத்திற்குச் சித்தர்கள் மறுப்பு தெரிவிக்கின்றனர். இவை மூன்றும் வெவ்வேறானவை அல்ல. அவைதாம் 'சிவம்' என்கின்றனர்.

சித்தர்களை நாத்திகர்கள் என்று கூறும் தவறான போக்கு இன்னும் சிலரிடையே இருக்கின்றது. ஆனால் சித்தர்கள் யாவரும் உண்மையான ஆத்திகர்கள். 'ஆத்திகன்' என்ற சொல்லுக்குப் பரம்பொருளைக் கொண்டவன் என்றும், 'நாத்திகன்' என்ற சொல்லுக்கு இல்லாதவன் என்றும் பொருள். நாத்திகனாக இருப்பதில் பெரிதொன்றும் இல்லை. 'இல்லை' என்ற சொல்லைச் சொல்ல என்ன அறிவு வேண்டும்? சிறு குழந்தை கூட அதைச் சொல்லும். 'உண்டு' என்று சொல்லத்தான் ஞானம் வேண்டும். ஏன் உண்டு? எப்படிச் சாத்தியம்? எங்கே? எப்போது? என்னென்ன? போன்ற கேள்விகளுக்கெல்லாம் அர்த்தமுள்ள பதிலின்றி 'உண்டு' என்று சொல்ல முடியாது. ஆனால் வெறுமனே கண்களை இறுக மூடிக்கொண்டு 'இல்லை' என்று சொல்லுதற்குச் சிந்தனாசக்தி தேவையல்ல"[12]. அப்படி ஒரு பாவத்தை சித்தர்கள் மக்களுக்கு போதிக்கவில்லை.

‘உன் உடலில், மனதில் துன்பப்படுகிறவன் கண்களில் இறைவனைத் தேடு’ என்று கூறுகின்றனர்.

இறைவன் ஒருவனே; அவன் எங்கும் நிறைந்திருக்கிறான். கடவுள், இறைவன், பரம்பொருள், பிரம்மம், பரமாத்மா என்பன சமயச் சார்பற்ற பொதுச் சொற்கள். ஒரு சிலரே தவிர பிற சித்தர்களெல்லாம் மேற்கண்ட சொற்களையே பயன்படுத்துகின்றனர். கடவுள் பற்றிக் கருத்துரைத்த தமிழ்ச் சான்றோருள் திருவள்ளுவர் சிறப்பிடம் பெறுகிறார். இவர் எந்தவொரு சமயக் கடவுளரின் பெயரையும் எந்தவகை வழிபாட்டு முறையையும் சுட்டாமல் பரம்பொருள் பற்றி அனைத்து சமயத்தினரும் ஏற்கும் வகையில் கருத்துக்களைக் கூறுகிறார்.

சமயக் காழ்ப்புணர்வைக் களைந்திட முன்னின்று முயன்ற திருமூலரும் பரம்பொருள் ஒன்று என்றும், சமயங்கள் பல என்றும் கூறுகிறார். “பேரூர் ஒன்றுக்கு ஆறு வழிகள். அதுபோலப் பரம்பொருள் ஒன்றனுக்கு ஆறு வகைச் சமயங்கள் உள்ளன. இவ்வுண்மையை உணராதார் இச்சமயம் நன்று, அச்சமயம் தீது என்று வீண்மொழி உரைக்கின்றனர். இது குன்றைப் பார்த்து நாய் குரைக்கும் அறியாமைச் செயல்”[13].

“சமயங்கள் எல்லாம் ஆறுகள். அவ்வாறுகளாகிய சமயங்கள் யாவும் பொதுவாய் சங்கமிக்கின்ற கரையிலாக் கடலே பரம்பொருள்”[14] என்று இராமலிங்க அடிகளாரும் உருவகிக்கின்றார். மேலும் இவர், ‘சீவனாய், ஈசனாய், நான்முகனாய், திருமாலாய், அரணாய் விளங்குவதும் பரம்பொருளே’ என்று கூறியதன் வழி கடவுள் ஒன்று என்பதையே வலியுறுத்துகின்றார்.

பட்டினத்தாரும், திருமூலரும் முறையே இரத்தினச் சுருக்கமாக, ‘‘ஒன்றென்றிரு; தெய்வம் உண்டென்றிரு.... ’’[15], ‘‘ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்....’’[16] என்று ஒரே அடியில் இறைத் தத்துவத்தைப் புரியச் செய்கின்றனர். அவ்வையாரோ,

*‘‘ஓவாவது ஒன்றே பலவாம் உயிர்களெல்லாம்*
*தேவானது ஒன்றே தெளி’’[17].*

உலகப் படைப்புகளுக்கெல்லாம் இறைவன் ஒருவனே என்பது வெளிப்படை என்கிறார்.

*‘‘கோயில் எங்கும் ஒன்றலோ? குளங்கள் நீர்கள் ஒன்றலோ*
*தேயு வாயு ஒன்றலோ? சிவனும் அங்கே ஒன்றலோ?*
*ஆய சீவன் எங்குமாய் அமர்ந்தவாறது ஒன்றலோ?*
*காயம் ஈதறிந்த பேர்கள் காட்சியாய் காணுமே’’[18].*

*‘‘எங்கள் தேவர் உங்கள் தேவர் என்றிரண்டு தேவரா?*
*அங்கும் இங்கும் ஆகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ?*
*அங்கும் இங்கும் ஆகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றெனில்*
*வங்கவாரஞ் சொன்ன பேர்கள் வாய்புழுத்து மாய்வரே?’’[19]*

போன்ற சிவவாக்கியரின் பாடல்களும் இறைவன் ஒருவனே என்ற கருத்தையே பறைசாற்றுகின்றன. மேலும் பல தெய்வ நம்பிக்கையையும் இவரது பாடல்கள் கண்டிக்கின்றன.

## 4.5. சிவன் பரம்பொருள்

பரம்பொருள் என்பது ஒன்றே. உலகில் அவரவர் அறிவின் முதிர்ச்சிக்கும் கற்பனையின் நீட்சிக்கும் ஏற்பத் தெய்வங்களை உருவாக்கி வழிபடுகின்றனர். ஆனாலும் அனைத்து உருவங்களையும் இணைத்த, அவற்றுள் காணும் உட்பொருளைக் காணுங்கால் ஓரிறைவன் என்ற உயரிய கோட்பாடு வெளிப்படும். அந்த ஓரிறையும் சிவனே என்பது சில சித்தர்களின் கருத்து. இக்கருத்தை வெளிப்படையாகவும் குறிப்பாகவும் சுட்டிப் பாடல்களைப் பாடியுள்ளனர்.

> *"செம்பொன் மாடம் மல்குதில்லை அம்பலத்துள் ஆடுவான்*
> *எம்பிரான் அலாது தெய்வம் இல்லை இல்லை இல்லையே"*[20]

எனச் சிவவாக்கியர் கூறுகின்றார். அவ்வையார்,

> *"ஆயும் இரவியும் ஒன்றே அனைத்துயிர்க்கும்*
> *ஆயுங்கால் ஒன்றே சிவம்"*[21]

என்றும் விளம்புகிறார்.

## 4.6அரியும் சிவனும் ஒன்று

'அரியும் சிவனும் ஒன்னு, அறியாதவன் வாயில் மண்ணு' என்பது பழமொழி. இவ்வுண்மையை உலகுக்கு அறிவித்தவர்களுள் முதன்மையானவர்கள் சித்தர்கள்.

பரம்பொருளின் ஒற்றுமையைக் கூறிச் சென்ற பொதுமையைக் காணச் சிலர் முயன்றபோதும் தமிழகத்தில் சைவ, வைணவச் சமயங்களிடையே பகைமை ஓய்ந்தபாடில்லை. சமயங்களும் மக்களைப் பகையாளிகளாகப் பிரித்து வைத்தன.

சைவ, வைணவக் கடவுளரிடையே உறவுகள் கற்பித்துக் கதைகளைப் புனைந்தனரேயன்றி சைவர்களும், வைணவர்களும் உறவு கொண்டு வாழச் சமயவாதிகள் முயலவில்லை. மாறாக ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் கடவுளரை உயர்த்தியும், பிற கடவுளைத் தாழ்த்தியும் புதிது புதிதாய் பல கதைகளைப் புனைந்து பெருமை கொண்டனர்.

மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு உயர வேண்டுமானால் மக்களின் எண்ணத்திலும் போக்கிலும் ஒரு மாற்றம் உருவாக வேண்டும் என்று சித்தர்கள் எண்ணினர். அதனால் சைவமும் வைணவமும் ஒன்றே என முழங்கினர்.

*"அரியுமாகி அயனுமாகி அண்டம் எங்கும் ஒன்றதாய்*
*பெரியதாகி உலகுதன்னில் நின்றபாதம் ஒன்றலோ.*
*அறிவினொடு பாரும் இங்கும் அங்கும் ஒன்றதே"*[22].

*"ஆலம் உண்ட கண்டனும் அரி அயனும் ஆதலால்*
*ஓலம் என்ற மந்திரம் ஒன்று அல்லது இல்லையே"*[23].

போன்ற பாடல்களும்,

*"தில்லை நாயகன் அவன் திருவரங்கனும் அவன்*
*எல்லையான புவனமும் ஏகமுத்தி ஆனவன்*
*பல்லு நாவும் உள்ளபேர் பகுத்துக் கூறி மகிழ்வால்*
*வல்லபங்கள் பேசுவார் வாய்புழுத்து மாய்வரே"*[24]

என்ற பாடல் சைவமும் வைணவமும் ஒன்றே என்ற பொருளில் சிவவாக்கியரால் பாடப்பட்டது.

‘பரம்பொருள் அரியுமல்லன், அயனுமல்லன். கடுமை, செம்மை, வெண்மை எனும் நிறங்கள் அனைத்தையும் கடந்து பரம்பொருள் நிலவுகிறது. பரம்பொருளைக் காட்டிலும் பெரியதொன்று ஏதுமில்லை; பரம்பொருள் பிறிதொன்றனுக்குச் சிறிதுமில்லை. உலகம் யாவையும் தன்னுள் அடக்கி அவற்றினும் விரிந்து நிற்கிறது பரம்பொருள்’ என்ற சிவவாக்கியர் கருத்து சமயச் சார்பின்றிச் சிந்திக்கும் மெய்ஞ்ஞானியின் கூற்றை ஒத்திருக்கின்றது.

சித்தர்கள் பலரும் இறைவன் ஒருவன் என்ற கருத்துடையவர்கள். உலகியல் நடைமுறை காரணமாக கொங்கண நாயனார் போன்ற சிலர் சரசுவதி, கணபதி, சுப்ரமணியர், சிவன், விட்ணு, நந்தீசர் போன்ற தெய்வங்களின் பெயரிட்டு துதிப்பாடல்களைப் பாடியுள்ளார். தாம் கூற விழையும் கருத்துக்களைப் பிறரும் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அவர்கள் அறிந்த பெயர் கொண்டு இறைவனைச் சுட்டுகின்றனர் எனக் கருத இடமுண்டு. யோக மார்க்கத்தில் சுட்டப்படும் ஆறு ஆதாரங்களுக்கும் தெய்வங்களைக் கற்பித்தனர். இத்தெய்வங்கள் யாவும் படிநிலைகள். இறுதியாக உள்ள இறைவன் ஒருவனே. அந்த ஒருவனை அடைவதற்கான படிகளையே பல தெய்வங்கள் குறிக்கின்றன.

> ***“ஆறாதார தெய்வங்களை நாடு,***
> ***அவர்க்கு மேலான ஆதியைத் தேடு”[25].***

என்று இடைக்காடர் கூறுகிறார்.

இவ்வாறு பரம்பொருளின் விரிவையும் எல்லையற்ற, எதிலும் நிறைந்திருக்கும் பொதுமையையும் ஒருமை நிலையையும் உணர்த்திச் சமயக் கடவுளர் அனைவருமே பரம்பொருளின் கூறுகளாக அமையும் நிலையைக்

காட்டிச் சமயங்களுக்கிடையே நிலவும் காழ்ப்புணர்வுகளைக் களைந்து கடந்து மக்களனைவரையும் பரம்பொருள் என்பதன் கீழ் ஒன்றுபடுத்தும் முயற்சியைச் சித்தர்கள் மேற்கொண்டனர் எனலாம்.

உலகப் படைப்புகள் அனைத்திற்கும் மூலமாய் இருப்பது 'இறைவன் ஒருவனே' என்ற சித்தர்களின் கருத்திற்கேற்ப ஜென் இலக்கியங்களில் 'ஜென்' தத்துவமானது 'இறைவன் உண்டு என்றும், மனிதனது இயல்பு வாழ்வில் எதுவாக இருக்கிறோமோ அதுவே என்றும்' கூறுகிறது.

ஜென் என்பது மதம் கடந்தது, மனம் கடந்தது. அது வாழ்க்கை நெறியல்ல. அதுவே வாழ்க்கையாகிறது. ஜென் கடவுளைத் தேடுவதில்லை. அதுவே கடவுள் ஆகிறது. இதனை மெய்ப்பிக்கும் வகையில் அமைந்த நிகழ்வு பின்வருமாறு:

"நாம் எல்லோரும் அடிப்படையில் புத்தர்களே. ஆனால், தனிமைப்பட்டுப் போய் தனித்தனி உலகங்களை சிருஷ்டித்துக் கொண்டு, அதில் சிக்கிக் கொண்டு, தனிமைப்பட்டு போய்விடுகிறார்கள். இந்த முடிச்சுக்களைப் போல"[26].

இம்மேற்கோள், கடவுள் புறத்தே இல்லை. ஒவ்வொரு மனிதனின் அகத்துள்ளே நிறைந்திருப்பது என்ற கருத்தினை உணர்த்துகின்றது.

## 4.7 உருவ வழிபாடு விலக்கல்

சித்தர்கள், ஆத்திகர்கள் என்று முன்பே சுட்டப்பட்டுள்ளது. மாணிக்கவாசகம் என்பார் ஆத்திகர்களை வகைப்படுத்தி விரிவாகக் கூறுகிறார். "பக்தர்கள், ஞானிகள், யோகிகள் ஆகிய இம்மூன்று வகையினரும் இறையுணர்வு கொண்டவர்களே. எனினும் இம்மூன்றில் முன்னிரண்டு வகையினரும் சமயம்

என்ற எல்லைக்குள் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டவர்கள். மூன்றாம் வகையினர் அத்தகு எல்லையற்றவர். சைவம், வைணவம் முதலிய சமயத்தைச் சார்ந்த நாயன்மார்களும், ஆழ்வார்களும் சமயத்துறையினர் சித்தர்கள் அனைவரும் ஆன்மீகத் துறையினர்"[27].

சமயங்களில் ஏற்படுத்தப்படும் உருவ வழிபாடு பக்தி நெறிக்குப் பெருங்காரணமாகிறது. இறைவனைக் கற்சிலையில் கண்டு மகிழ்வர். மக்கள், சிறந்த மெய்ப்பொருளை, அழிவிலா ஒப்பற்ற மாமணியைக் கல்லில் காண முற்படுவது அறிவின் ஏழ்மையை உணர்த்தும். ஒவ்வொரு சிலையும் கல்லால் ஆனதுதான். ஆயினும் அவற்றை வெவ்வேறு பெயர்களில் அழைக்கும் மக்களைக் கண்டு வருந்துகின்றார் சிவவாக்கியர்.

"*பண்ணிவைத்த கல்லையும் பழம்பொருள் தென்றுநீர்*
*எண்ணமுற்று மென்னபே ருரைக்கிறீர்கள் ஏழைகள்*"[28]

"*நட்ட கல்லைத் தெய்வமென்று*
*நாலு புட்பம் சாத்தியே*
*சுற்றிவந்து மொண மொணென்று*
*சொல்லும் மந்திரம் ஏதடா?*
*நட்ட கல்லும் பேசுமோ*
*நாதன் உள் இருக்கையில்*
*சுட்ட சட்டி சட்டுவம்*
*கறிச் சுவை அறியுமோ?*"[29]

எனத் தம் கருத்தை வெளிப்படுத்துவார். நட்டு வைத்த கற்சிலையைத் தெய்வமென்று நினைத்து அதற்குப் பலவகையான பூமாலைகளைச் சாற்றிவிட்டு

மந்திரத்தைச் சொல்லுகின்றனர். இறைவன் உள்ளே இருக்கிறான். அப்படி இருக்கும்போது நட்ட கல்லைச் சுற்றி வந்தால் அது பேசுமோ? அடுப்பில் வைத்துச் சுடப்பட்ட சட்டியும், அகப்பையும் அதில் ஆக்கப்படும் கறியின் சுவையை அறியுமா? அறியாது. அதுபோல நமது உள்ளத்தில்தான் நாதனைக் காண வேண்டுமேயன்றிச் சிலையில் காணமுடியாது.

***"உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி?***
***உலகத்தின் மூடர்களுக்கு உண்டோ வளர்ச்சி?***
***புளியிட்ட செம்பில் குற்றம்போமோ? அஞ்ஞானம்***
***போகாது மூடர்க்கென்று ஆடாய் பாம்பே"[30].***

உளியிட்டுச் செய்த கருங்கல் சிலையிலே உயிரும் உணர்ச்சியும் உண்டோ? இவ்வுலகத்தில் அச்சிலைகளை வணங்கும் மூடர்களுக்கு அறிவுண்டோ? செம்மைப் புளியிட்டு விளக்குவதானல் அதில் உள்ள களிம்பு போய்விடுமோ? போய்விடாது. அதுபோலச் சிலைகளை வணங்கும் அறிவற்றோரின் அறியாமை போய்விடாது. அவர்கள் என்றும் மூடராகவேதான் இருப்பார்கள். இந்த உண்மையை உணர்ந்து பாம்பே! ஆடுவாயாக! பலரும் இவ்வுண்மையை அறியும்படி ஆடுவாயாக! என்று சிலை வணக்கம் செய்வோரை மூடர்கள் என்று வன்மையாகக் கண்டிக்கிறார் பாம்பாட்டிச் சித்தர்.

***"கல்லிலும் செம்பிலுமோ யிருப்பான் எங்கள் கண்ணுதலே"[31].***

என்பதனால் அறிவில்லாத சடங்குகளாகிய கல்லாலும் செம்பாலும் மனிதரால் ஆக்கப்பட்ட சிற்பச் சிலைகளிலுமோ தெய்வநிலை காண முடியும் எனக் கேள்வி கேட்கின்றார் பட்டினத்தார். இக்கருத்தினை வலியுறுத்தியே அகத்திய முனிவர்,

*"வாடுவார் நாமமென்றும் ரூபம் என்றும்*
*வையகத்தில் கல் செம்பைத் தெய்வம் என்றும்*
*நாடுவார் பூரணத்தை அறியார் மூடர்*
*நாய் போல குரைத்தல்லோ ஒழிவார் காணே"[32].*

*"காணவேண்டும் என்று நீர் கடல மலைகள் ஏறுவீர்*
*ஆணவம் அது அல்லவோ அறிவில்லாத மாந்தரே*
*வேணும்என்று அவ்வீசர் பாதம் மெய்யுளே தரிப்பீரேல்*
*தாணுவாக நின்ற சீவன்தான் சிவமது ஆகுமே"[33].*

*"திருவாயும் குருவாயும் சீவனாயும்*
*செறிந்த வத்துவைப் போற்றி ஆடுபாம்பே"[34].*

*"கல்லிலே தெய்வமில்லை, கருத்திலே தெய்வம்"[35].*

எனக் கணபதிச் சித்தர் உருவ வழிபாட்டினை எதிர்க்கின்றார்.

சமயங்களில் ஏற்படுத்தப்படும் உருவ வழிபாடு பக்தி நெறிக்குப் பெருங்காரணமாகிறது. பக்தியை ஏற்பதற்காக இறைவனுக்கு மனிதன் உருவம் கற்பிக்கின்றான். ஆனால் காலப்போக்கில் உள்ளம் உருகிச் செய்யவேண்டிய வழிபாடு வெற்றுப் புறச்சடங்கானது வருந்தத்தக்கது.

'மனிதனுக்கு மேலொரு தெய்வமும் இல்லை' என்று உலோச்சனார் கூறுகின்றார். காலம் காலமாக நடைபெற்ற உருவ வழிபாட்டால் சில விஷமிகள் பக்தனுக்கும் இறைவனுக்கும் இடையே நின்றனர். இறைவனுக்குத் திரைப்போட்டு மறைத்து எப்போது திரை விலகுமெனப் பக்தர்களை ஏங்கவிட்டனர். உணர்வால் நெருங்கிய ஏழைப் பக்தர்கள் தூரத்தே நிறுத்தப்பட்டனர். பணமும் பகட்டும்

நிறைந்தோருக்கு முதன்மை தந்தனர். அன்பையும் பக்தியையும் குப்பைகளாக்கி பணமும் பதவியும் உள்ளவர்களைக் கருவறை வரையிலும் அழைத்துச் சென்றனர். இந்நிலையை, பக்தி நெறியை சித்தர்கள் வெறுத்தனர்.

*"கல்லினைச் செம்பினைக் கட்டையைக் கும்பிடல்*
*புல்லறி வாகுமடி குதம்பாய்?*
*புல்லறி வாகுமடி குதம்பாய்?"*[36]

என்று குதம்பைச் சித்தர் உணர்வற்ற பொருட்களைக் கும்பிடுவது புல்லறிவாகும் என்று மக்களைச் சாடுகின்றார்.

*கல்லுவெள்ளி செம்பிரும்பு காய்ந்திடும் தராக்களில்*
*வல்லதேவ ரூபபேதம் அங்கமைத்துப் போற்றிடில்*
*தொல்லை அற்றிகும் பெரும் சுகந்தருமோ சொல்லுவீர்*
*இல்லை இல்லை இல்லை இல்லை ஈசன் ஆணை இல்லையே?"*[37]

உருவ வழிபாடு என்பது மக்களது அறியாமையின் விளைவு என்கின்றார் சிவவாக்கியர்.

'உள்ளமே கோயில்; நல்லெண்ணமே தெய்வம்' என்று உருவம் வைத்து வழிபாடு செய்வதன் பலன் ஏதும் இல்லை என்று விளக்கும் வகையில் அமைந்த ஜென் கதை பின்வருமாறு:

"கடுங்குளிர் இரவு. பனி பெய்து கொண்டிருந்தது. அந்தப் புத்த விகாரையில் இருந்த வயது முதிர்ந்த ஒருவருக்குக் குளிர் தாங்கமுடியவில்லை".

அறையைவிட்டு எழுந்து கோயிலின் பல பகுதிகளிலும் இருந்த மரப் புத்தர் சிலைகளைச் சேகரித்தார். அவற்றை எல்லாம் கொண்டுவந்து நடு மண்டபத்தில் போட்டு நெருப்பு வைத்தார்! பக்கத்தில் அமர்ந்து குளிர் காய ஆரம்பித்தார்.

பட பட வென்று எரியும் சத்தம் கேட்டுக் கோயிலின் குரு ஓடி வந்து பார்த்தார்.

புத்தர் சிலைகளை எரித்துக் குளிர் காய்வதா? என்ன செய்கிறீர் என்று கோபம் கொண்டு கதறினார்.

“என்ன கோபம் உங்களுக்கு. என்ன நடந்துவிட்டது?” என் குளிரைப் புத்தர் போக்கிவிட்டார்! பாருங்கள்!. புத்தர் கருணா மூர்த்தியல்லவா? வாருங்கள்! அப்படி அமருங்கள். குளிர் காயலாம்!” என்றார் முதியவர்.

‘என்ன உளறுகிறீர்கள்? நீங்கள் எதை எரித்துக் குளிர் காய்கிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியவில்லையா? தெய்வத்தையே எரித்துவிட்டீர்களே!” என்று பொங்கினார் குரு.

‘ஓகோ, அப்படியா?’ என்று சாம்பலைக் குச்சியால் கிளறினார் முதியவர். என்ன செய்கிறீர்கள் என்ற குருவிற்குப் புத்தரின் எலும்புகளைத் தேடுகிறேன்’ என்றார் முதியவர். ‘எலும்புகள் எப்படி இருக்கும்?’ என்றார் குரு.

‘இருக்காதா? நான் எரித்தது புத்தரை என்றால் அவர் எலும்புகள் இருக்க வேண்டுமே. எதற்கும் இன்னும் சில சிலைகள் மிச்சமிருக்கின்றன. கொண்டு வாருங்கள். போட்டுக் குளிர் காயலாம்! என்றவுடன் குரு அதீதக் கோபத்துடன்

முதியவரை எழுப்பி வெளியே தள்ளிக்கொண்டு போய் விட்டுவிட்டுக் கதவைச் சாத்தினார்.

மறுநாள் காலை அந்தக் கிழவன் என்ன ஆனான் என்று பார்க்கும் ஆவலில் குரு வெளியே வந்து பார்த்தார்.

அந்தப் பெரியவர் ஒரு மைல் கல்லின் முன்னால் அமர்ந்து காட்டுப் பூக்களை அதன் மேல் தூவி, 'புத்தம் சரணம் கச்சாமி....' என்று தொழுது கொண்டிருந்தார். குரு அவர் அருகே வந்து, 'இது என்ன? என்ன செய்கிறீர்கள் நீங்கள். மைல்கல்தான் புத்தரா?' என்று கேட்டார்.

'மரம் புத்தராகும் போது மைல்கல் ஏன் புத்தராகாது? நேற்றிரவு நான் குளிர் காய்ந்தது எனக்குள் இருக்கும் புத்தரைக் காப்பாற்றத்தான். அவர் எனக்குள் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தார். அதனால்தான் மரச் சிற்பங்களை எறித்தேன். அவை உணர்ச்சியற்றவை. அந்த மரப் புத்தர்களை எரித்ததற்காக நீங்கள் நேற்றிரவு உயிருள்ள புத்தரை வெளியே துரத்தி விட்டீர்களே"[38] என்றார் பெரியவர்.

## 4.8. உருவமிலாதவன்

இறைவன் அரூபமானவன். அவனுக்கு உருவமில்லை. இறைவனுக்கு உருவம் சமைத்து அதைத் தொழுவது முட்டாள்தனமானது. இறைவனைக் கண்ணாரக் கண்டவர்கள் யாருமிலர். அப்படிக் கண்டவர்களுக்கு அவன் இப்படி இருந்தான் எனச் சொற்களால் சொல்லிவிட முடியாது. அப்படி அளந்து அளந்து இறைவனைக் கண்டதாக வருணிப்பவன் கண்டிருக்கவே முடியாதென்பார் பாம்பாட்டியார்.

*"கண்டவர்கள் ஒருக்காலும் விண்டிலார்களே*
*விண்டவர்கள் ஒருக்காலும் கண்டிலார்களே"*[39].

இறைவன் உருமிலாதவன் எனத் துணிகின்றனர். மேலும்,

*"உருவம் ஒன்றில்லை உணர்வில்லை ஓதும்*
*அருவமும் தானதுவே ஆம்"*[40].

*"தனக்கோர் உருவில்லை தான் எங்குமாகி*
*மனத்தகமாய் நிற்கும் அது"*[41].

என்கிறார் அவ்வையார்.

*"கட்புலனுக்கு எள்ளளவும் காணாது இருந்தெங்கும்*
*உட்புலனாய் நின்ற ஒன்றை உய்த்தறிநீ புல்லறிவே"*[42].

என இடைக்காடர், கண்ணால் காண இயலாது உள்ளத்துள் ஒருங்கும் நிலை ஒன்று என்பதை உய்த்துணர் அறிவே என்று மக்களை வேண்டுகின்றார்.

*"ஆயிரத் தெட்டிதழ் வீட்டில் அமர்ந்த சித்தன்*
*அண்டம் எல்லாம் நிறைந்திடும் அற்புதச் சித்தன்*
*காயமிலாது ஓங்கிவளர் காரணச் சித்தன்"*[43].

என்று பாம்பாட்டியாரும் இறைவனாகிய சித்தனுக்கு உருவமில்லை என்றே கூறுகின்றனர்.

ஜென் குரு ஒருவர் 'புத்தன்' என்று ஒன்றும் இல்லை. உடலையும், மனத்தையும் ஊடுருவி அதன் உள்ளார்ந்த மையத்தை அடைந்தால் நீ தானே அந்த புத்தன் என்கிறார்.

### 4.9 எங்கும் நிறைந்தவன்

*"மனம் புத்தனாவதில்லை*
*உடல் புத்தனாவதில்லை*
*எது புத்தனாக முடியாதோ*
*அதுவே புத்தனாகப் பிரகாசிக்கின்றது"[44].*

காற்று கண்ணுக்குப் புலனாகாது. ஆனால் நமக்கு அருகில் நம்மைச் சுற்றி நம்மோடு இயங்கிக் கொண்டிருக்கும். இக்காற்றினைப் போன்றவன் கருணாமூர்த்தியாம் கடவுள்.

*"பாலில் சுவைபோலும் பழத்தில் மது போலும்*
*நூலில் பொருள் போலும் நுண்பொருளைப் போற்றீரே"[45].*
*"எள்ளில் தைலம் போல எங்கும் நிறைபொருளை*
*உள்ளில் துதிந்தே உணர்வடைந்து போற்றீரே"[46].*

போன்ற இடைக்காடரின் பாடல்கள் உணர்த்துகின்றன.

மேற்கூறப்பட்ட உருவமில்லாதவன், எங்கும் நிறைந்தவன் எனக் கடவுளின் இருப்பைக் கூறும் சித்தர்களின் கருத்தினை அடியொற்றி அமைந்த ஜென் கதை ஒன்று,

*"ஜென் குரு ஜோஷூ என்பவரை ஒருவர் கேட்டார்".*
*புத்தர் என்பது என்ன?*
*'மண்டபத்தில் இருப்பது! என்றார் குரு.*

மண்டபத்தில் இருப்பது சிலைதானே? வெறும் களிமண் சிலை என்றார், கேள்வி கேட்டவர்.

‘அப்படியா?’ என்றார் குரு.

அப்படியானால், புத்தர் என்பது என்ன? என்று மறுபடியும் கேட்டார் அவர்.

ஜென் குரு ஒருவர் ‘புத்தன்’ என்று ஒன்றும் இல்லை. உடலையும் மனத்தையும் ஊடுருவி அதன் உள்ளார்ந்த மையத்தை

மண்டபத்தில் இருப்பது! என்று அதே பதிலை மறுபடியும் சொன்னார் குரு”[47]. எதுவாக நினைக்கிறோமோ அதுவாய் நிறைந்திருப்பது புத்தம்’ என்று தெளிவுப்படுத்துகிறது. ‘புத்தர் அதுவானவர்’ என்கிறது ஜென். இதே கருத்திலமைந்த ஜென் குரு இஸ்ஸாவின் கவிதை,

“***எங்கே மனிதர்கள் இருக்கின்றனரோ***

***அங்கே ஈக்களையும் காண்பாய் புத்தர்களையும்தான்***”[48].

என்னும் ஜென் குரு இஸ்லாவின் கருத்தும் சுட்டத்தக்கது.

மக்கள் மனத்தை ஒருமுகப்படுத்த உருவ வழிபாடு மிகச் சிறந்த கருவி என்பதைச் சித்தர்கள் அறியாமல் இல்லை. ஆனால் கருவியைப் பயன்படுத்தி பயனை அடைய முற்படாமல், கருவியை வழிபடுவதையே முடிவாக நினைத்தல் அறியாமை என்று சித்தர்கள் உணர்ந்தனர். உருவ வழிபாட்டை முதலில் சித்தர்களும் ஆதரித்தனர்.

நல்லுணர்வோடும் நல்ல நோக்கத்தோடும் உருவாகப் பெற்ற உருவ வழிபாடுகள் சில புல்லுருவிகளின் தலையீட்டால் வெற்று ஆரவாரங்களாகவும், பொருளீட்டும் தொழிலாகவும் மாறிவிட்ட நிலைமையால்தான் சித்தர்கள் உருவ

வழிபாட்டைச் சாடுகின்றனர் என்று கருத முடிகிறது. மற்றபடி இறைமையையோ இறையின்பத்தையோ அவர்கள் மறுக்கவே இல்லை என்பது தெளிவாகும்.

## 4.10.வேத மறுப்பு

'நான் செய்த புண்ணியமோ அல்லது அதிர்ஷடமோ, புராணம், இதிகாசம் மற்றும் தலபுராணம் போன்றவைகளைப் படிக்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இதனால் என் வாழ்க்கையில் பாதி நாட்கள் வீணாகிப் போய் இருக்கும் என்று வேதங்களின் பயனின்மையை ஜே. கிருஷ்ண மூர்த்தி கருத்துரைக்கின்றார்'.

உள்ளம் உருகிச் செய்யவேண்டிய வழிபாடுகள் வெற்றுச் சடங்குகளாயின. பக்தியை உதறிவிட்டுப் பணத்திற்கு முதன்மை தந்த 'இடைத்தரகர்கள்' எவரும் மேற்கொள்ளத்தக்க பக்தி நெறியைத் தொழில்நுட்பத் துறையாக மாற்றிவிட்டனர். வழிபாடுகளை முறைப்படிச் செய்ய தங்களுக்கே தெரியும் என்றும் முறை தவறியோ, வேத உச்சரிப்பைப் பிழையாகவோ செய்யும் வழிபாடு தீங்கு பயக்கும் என்றும், உணர்வு ஒன்றையே மூலதனமாகக் கொண்ட பாமர மக்களை அச்சுறுத்தினர். இந்நிலை கண்டு வருந்திய சித்தர்கள் வேத, ஆகம, சாத்திர, சதுர்வேதங்களை எதிர்த்தனர் அவையெல்லாம் வீண் வேலையெனக் கூறுகின்றனர். இதனை,

> ***"வேதம்ஓது வேலையோ வீணதாகும் பாரிலே***
> ***காதகாத தூரம்ஓடிக் காதல்பூசை வேணுமோ,?***
> ***ஆதிநாதன் வெண்ணெய் உண்ட அவனிருக்க நம்முளே***
> ***கோதுபூசை வாதம்ஏது? குறித்துப் பாரும் உம்முளே"[49].***

*"ஓதும்நாலு வேதமும் உரைத்த சாத்திரங்களும்*
*பூத்தத் துவங்களும் பொருந்தும் ஆகமங்களும்*
*சாதிபேத உண்மையும் தயங்குகின்ற நூல்களும்*
*பேதபேதம் ஆகியே பிறந்துழன்று இருந்ததே"[50].*

போன்ற பாடல்கள் வழி அறிய முடிகிறது.

பக்தன் - இறைவன் என்ற நேர்க்கோட்டின் இடையில் நெடுஞ்சுவராக எழுந்த ஒரு கூட்டம் வேத ஆகமங்கட்குப் புதுப்புது விளக்கம் தந்தது கண்டு அவர்கள் என்ன விளக்கம் தந்தாலும் அது பொய்யே, கற்பனையே என்றும், அதனால் பயனொான்றும் இல்லை என்றும், அவை வீணான நூல்களே என்றும் சித்தர்கள் உறுதிபடக் கூறுகின்றார். இதனை,

*"புத்தகங்களைச் சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்"[51].*
*"நூறுகோடி ஆகமங்கள் நூறுகோடி மந்திரம்*
*நூறுகோடி நாளிருந்தும் ஓதினால்அது என்பயன்"[52].*

சமயத்தின் தொன்மையைப் பேசுகின்ற ஆகமங்கள், வேதங்கள் நூறுகோடி எண்ணிக்கையுடன் நூறுகோடி நாள் வெறுமனே ஓதிக்கொண்டே இருப்பதனால் பயன் ஏதும் இல்லை என்று கடிந்து கூறுகிறார் சிவவாக்கியர்.

*"நேமங்கள் நிட்டைகள் வேதங்கள் ஆகமநீதிநெறி*
*ஓமங்கள் தர்ப்பணம் சந்தி செபமந்திர யோகநிலை?*
*நாமங்கள் சந்தனம் வெண்ணீறுபூசி நலமுடனே*
*சாமங்கள் தோறும்இவர் செய்யும் பூசனைகள் கற்பனையே"[53].*

மந்திரங்கள் ஓதி வருவதால் பலன் இல்லை. அகத்திலே தோன்றும் பக்தி உணர்வுக்கு முன் ஆகமங்கள் அனைத்தும் கற்பனையே என்கிறார் பட்டினத்தார்.

வேதங்களும் மந்திரங்களும் புனிதமானவை, என்று சொல்லுவோர் இனி முட்டாள்களே என்னும் பொருள்படப் பாடியதோடு நில்லாமல், அவ்வேதங்களெல்லாம் பொய்யானவை என்பதோடு இப்பொய்த்திரை விலகுவது எந்நாளோ? என்று வினவியும் மக்களைச் சிந்திக்கத் தூண்டுகின்றனர் சித்தர்கள்.

*"ஓதுகின்ற வேதம் எச்சில்உள்ள மந்திரங்கள் எச்சில்*
*போகங்க ளான எச்சில் பூதலம் ஏழும் எச்சில்*
*மாதிருந்த விந்து எச்சில் மதியும் எச்சில் ஒளி எச்சில்*
*எதில் எச்சில் இல்லதில்லை இல்லை இல்லை இல்லையே"[54].*

*"சதுர்வேதம் ஆறுவகைச் சாத்திரம் பல*
*தந்திரம் புராணங்களைச் சாற்றும் ஆகமம்*
*விதம்வித மான வேறு நூல்களும்*
*வீணான நூல்களே என்று ஆடுபாம்பே"[55].*

போன்ற பாடல்களின் வழி வேதங்களும் ஆகமங்களும் வெற்று வேலை எனப் புலப்படுத்துகின்றனர்.

*"மந்திரம் இல்லையடி அகப்பேய்*
*வாதனை இல்லையடி"[56].*

*"வேதம் ஓதாதே அகப்பேய்*
*மெய்கண்டோம் என்னாதே"[57].*

என்பதனால் மறைபொருள் யாதென்று தெளிதலே ஞானம் என்கின்றார் அகப்பேய்ச் சித்தர்.

*“சாத்திரங்கள் ஓதுகின்ற சட்டநாதப் பட்டரே!*
*வேர்த்திரைப்பு வந்தபோது வேதம் வந்து உதவுமோ”*[58]

*“வேதாந்த வேதமெல்லாம் விட்டொழிந்து நிட்டையில்*
*ஏகாந்தமாக இருப்பதினி எக்காலம்”*[59].

சாத்திரம், சம்பிரதாயம், வேத ஆகமங்கள் போன்ற மாயைகள் மனிதனை விட்டு விலகுவது எக்காலமோ? என்ற சித்தர்களின் ஏக்கம் மேற்கண்ட பாடல்களில் தெரிகிறது.

வேதாகம மந்திர வழிபாடுகளெல்லாம் ஒருவரைப் பார்த்து ஒருவரெனப் பின்பற்றத் தொடங்கினர். பொருள் ஏதும் புரியாமல் மந்திரங்களை ஓதிக் கடவுளுக்குச் செய்யும் பூசையினால் பயன் ஏதும் உளதோ என்கின்றனர் சித்தர்கள்.

*“வேதாந்தம் என்பது வெறும் வெத்துவேட்டு - வேத*
*வியாக்கியானம் எல்லாமே பொருந்தாத பூட்டு”*[60].

என வேதங்களைச் செல்லரித்து அழிவதற்குரியன என்று கூறுகின்றனர். மேலும் வேதங்களைப் படிப்பதால் இறைவனைக் காண முடியாது. இறைவன் உன்னுள்ளே இருக்கின்றான். அவனை வேறு எங்கும் தேடாதீர் என்றும் அறிவுறுத்துகின்றனர். இதனை,

*"இருக்கு நாலு வேதமும் எழுத்தையுறு ஓதினும்*
*பெருக்கநீறு பூசினும் பிதற்றினும் பிரான் இரான்"[61].*

*"அறிவிலே புறந்திருந்து ஆகமங்கள் ஓதுறீர்*
*நெறியிலே மயங்குகின்ற நேர்மைஒன்று அறிகிலீர்*
*உறியிலே தயிர்இருக்க ஊர்புகுந்து வெண்ணெய் தேடு*
*அறிவிலாத மாந்தரோடு அணுகுமாறாது எங்கனே?"[62]*

போன்ற பாடல்களின் வழி அறிய முடிகிறது.

இவ்வாறு ஆன்மாக்கள் தம்மை மறந்து இலயிக்க வேண்டிய ஆலயங்கள் ஆதிக்கப் பிரிவினரின் பிடியில் சிக்கியதாலும் உணர்வு நெறி மாறி பக்தி நெறியின் தலமாக மாறவிட்ட கொடுமைகளையும் கண்டு வேதனையுற்ற சித்தர்கள் ஆலய, உருவ, வேதாகம வழிபாடுகளை வெறுத்தனர் என்பதும், உணர்வுபூர்வமான அணுக்கமே பக்தி என்பதை உலகிற்கு உணர்த்தத் தொடங்கினர் என்பதும் புலனாகிறது.

அன்பில் தொடங்கி அன்பிலேயே முடிய வேண்டிய பக்தியானது காலப்போக்கில் சமயப் பூசல்களுக்கும் வன்முறைகளுக்கும் இடமளித்துச் சமூகச் சீரழிவிற்குக் காரணமாயிற்று. பரந்து விரிந்து வானையும் பூமியையும் தன்னுள் அடக்கிக்கொள்ள வேண்டிய அன்பு குறுகிச் சென்று சமயம் என்ற சிற்றெல்லைக்குள் நின்றுவிட்டது. தூய அன்பு என்ற தன்மையை இழந்து கொடிய விலங்கு உணர்வாகவும், வெறியுணர்வாகவும் பக்தி நெறி மாறியது. அதனால் சமய எல்லைகளை உடைப்பதும் சமயச் சடங்குகளுக்கு ஆதாரம் தரும் சாத்திரம், மரபு, கோட்பாடு போன்ற குப்பைகளை எரிப்பதும் அக்காலகட்டத்தில்

தேவையான புரட்சியாகவே இருந்தது. இப்புரட்சிக்கு வித்திட்டு வளர்த்தவர்கள் சித்தர் பெருமக்கள் என்று பெருமையுடன் கூறலாம்.

*“ஜாக்கிரதை! அசைபோடாதே*
*சூன்யத்தின் தத்துவங்களை*
*நொறுங்கிவிடும் உன்பற்கள்*
*விழுங்கு அதை முழுமையாய்”*[63]

மனிதன் ‘இறை’ எனும் மகத்தான பூரணத்தைப் பற்றி ஆராய்வதும் மற்றும் புனித நூல்களைத் திரும்பத் திரும்பச் சொல்வதும் அனுபவமாகாது. சுய அனுபவம் தராத ஏதுவுமே தேவையற்ற சுமைதான் என்கிறார் ஓஷோ.

சமூக அக்கறை இல்லாது தனித்துக் கடவுள் பெயரால் புத்தகங்களை மட்டும் வாசித்துக் கொண்டு தியானத்தில் இருப்பதும், மந்திரங்கள் ஓதுவதும் வெற்று ஆரவாரமே. பலன் ஏதுமில்லை என்கிற கருத்துப்பட அமைந்த ஜென் கதையில் வேதமறுப்புக் கொள்கை தென்படுகிறது.

“ஜென் துறவி ஒருவர் தமது கடமைகளை முடித்துவிட்டு அமைதியாக அமர்ந்து கொண்டிருந்தார். தலைமைக்குரு அவரை அழைத்தவுடன் எழுந்து உள்ளே சென்றார். குரு குளிரால் நடுங்கியபடி அமர்ந்திருந்தார். எதிரே ஒரு பாத்திரத்தில் நெருப்பு எரிந்துகொண்டு இருந்தது.

சீடரை உட்கார் என்றார் வயோதிகக் குரு. சீடரும் அமர்ந்தார். ‘எனக்கு முதுமை வந்துவிட்டது. உடலில் தள்ளாமை ஏற்பட்டுவிட்டது. என்னுடைய

சீடர்களிலேயே நீதான் முதன்மையானவன். ஆகவே நீதான் தலைமைப் பொறுப்பு ஏற்கவேண்டும் என்றார் தலைமைக் குரு.

துறவி அமைதியாகத் தலையாட்டினார். வயோதிகக் குரு தமது நடுங்கும் கைகளால் ஒரு புத்தகக் கட்டை எடுத்து அவரிடம் நீட்டினார். அரிய பொக்கிஷம் இது. உனக்கு நல்வழி காட்டும் என்றார். சீடர் அதைப் பெற்றுக் கொள்ள மறுத்து வேண்டாம் என்று கூறத் தலைமைக் குரு மீண்டும் வற்புறுத்தினார்.

'எனக்கு வேண்டியதையெல்லாம் தாங்கள் எப்போதோ கற்பித்துவிட்டீர்கள். இது எதற்கு?' என்று மீண்டும் மறுத்தார் அந்த இளம் துறவி. அதற்கு தலைமை குரு,

'அப்படிச் சொல்லாதே. இது வேத நூல். ஏழு தலைமுறைகளாக இந்த மடத்தில் காக்கப்பட்டு வருகிறது'. அப்போதும் சீடன் குரு சொன்னதை ஏற்கவில்லை. 'பசி வந்தால் உணவுக்கு என்ன செய்வாய்' என்று குரு கேட்க, 'பாத்திரத்தை எடுத்துக்கொண்டு பிச்சைக்குப் புறப்படுவேன்' என்றான். 'பிச்சையிடும் போது என்ன வேண்டும் என்று கேட்பாய்?'.

''ஏதும் கேட்கமாட்டேன். அவர்கள் இட்டதைப் பெற்றுக்கொள்வேன்''.

''அப்படி உன் பாத்திரத்தில் இடப்பட்ட பிச்சையாக இதை வைத்துக் கொள்! என்று கூறிப் புத்தகக் கட்டை நீட்டினார் தலைமைக் குரு.

மவுனமாக அதைப் பெற்றுக்கொண்ட சீடன் அதை அப்படியே எரியும் நெருப்பில் போட்டுவிட்டான். என்ன காரியம் செய்துவிட்டாய் நீ? அடப்பாவி'! என்று அலறினார் குரு.

“பிச்சையிட்டவர்கள் யாருமே தாங்கள் போட்ட பிச்சை என்ன ஆனது என்று பார்ப்பதில்லை குருவே” என்றார் இளம் துறவி. தொடர்ந்து “ஞானம் என்பதே நெருப்புத்தானே. நெருப்பு நெருப்புடன் சேர்ந்துவிட்டது. வேதம் என்பது வெறும் எழுத்துக்கள். இவற்றிலா இருக்கிறது ஞானம்?”[64] என்றான் சீடன்.

இறைவனை பிரார்த்திக்க, வேதங்களோ, மந்திரங்களோ தேவையில்லை என்னும் பொருளில் அமைந்த கவிதை,

***“அன்பு பேதங்கள் அறியாது***
***கனவிலும் கூட***
***அந்த அன்பே பிரார்த்தனை”***[65]

வேதங்கள் முதன்மையாக்கப்பட்டது நால்வருணப் பாகுபாடுகள் பேசப்பட்ட காலம். காலப்போக்கில் ஞானம் முதன்மையாக்கப்பட்டது. அறிவில் தெளிவு ஏற்பட்டபின் வேதம் கொண்டு பேதம் பாராட்டும் கருத்து நிலையில் மாற்றம் ஏற்பட்டது. “கடவுள் உண்டு. அதை உன்னில் தேடு” எனச் சித்தர், ஜென் இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

## 4.11 போலிகளைச் சாடல்

சமுதாயத்தில் சமயத்தின் பெயராலும் கடவுளின் பெயராலும் மக்களின் அறியாமையைப் பயன்படுத்தி அவர்களை ஏமாற்றிப் பிழைக்கும் போலி சமயவாதிகளையும் கள்ளக் குருக்களையும் சித்தர்கள் தங்களுடைய பாடல்களில் கடுமையாகக் கண்டித்துள்ளனர்.

"*திரிவார்கள் திருடரப்பா கோடானுகோடி*
*தேசத்தில் கள்ளரப்பா கோடி*
*வருவார்கள் அப்பனே அனேகம் கோடி*
*வார்த்தையினால் பசப்புவார்கள் திருடத்தானே*"[66].

"*வாழாமல் உலகம்விட்டு வேடம் பூண்டு*
*வயிற்றுக்கோ வாய்ஞானம் பேசிப் பேசித்*
*தாழ்வான குடிதோறும் இரப்பான் மட்டை*
*தமையறியாச் சண்டாளர் முழு மாடப்பா*"[67].

"இறையுணர்வில் இரண்டறக் கலந்தவர்கள் செய்யும் வழிபாடு இறையின்பம் தரும் என்பதில் ஐயமில்லை. ஆனால் புற வேடங்களைப் புனைந்து கொண்டு மனம் ஒன்றாமல் செய்யும் வழிபாடு தீய விளைவுகளையே தரும்" என்கிறது திருமந்திரம்.

சமுதாயத்தில் சிலர் சமயத்தின் பெயரால், இறைவனின் பெயரால் மக்களின் அறியாமையைப் பயன்படுத்தி, மக்களை ஏமாற்றிப் பிழைக்கும் கொடிய நிலையைக் கண்டு போலி வேடமிடுவோரைச் சித்தர்கள் அடையாளம் காட்டுகின்றனர்.

"*வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமும் தரிக்கிறீர்*"[68].

"*கையொன்று விழியொன்று நாடக் கருத்தொன்று எண்ணப்*
*பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்*
*மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்பியான்*
*செய்கின்ற பூசை எவ்வாறு கொள்வாய் வினை தீர்த்தவனே?*"[69]

எனச் சிவவாக்கியரும் பட்டினத்தாரும் பாடுகின்றனர். ‘‘இத்தேசத்தில் சாமியார் என்ற பேரில் கோடான கோடித் திருடர்கள் திரிவார்கள். அவர்கள் திருடுவதற்காக அனேகம் கோடி வார்த்தைகளால் பசப்புவார்கள்’ என்பது அவர்தம் கருத்து.

போலிச் சமயவாதிகளின் வேடத்தைச் சித்தர்கள் இன்னதென்று எடுத்துரைக்கின்றனர். அவர்களுள் கருவூர்ச் சித்தர்,

‘‘*புகலுவார் வேதமெல்லாம் வந்த தென்று*
*பொய்பேசிச் சாத்திரங்கள் மிகவும் கற்றே*
*அகலுவார் பெண்ணாசை விட்டோ மென்றெ*
*அறிவுகெட்டு ஊர்தோறும் சுற்றிச் சுற்றிச்*
*சகலுமே வந்தவர்போல் வேடம் பூண்டு*
*சடைமுடியும் சகாயம் தன்னைச் சாற்றி....*’’[70]

எனப் பாடுவார்.

‘‘*நேசமுற்றுப் பூசை செய்து நீறுபூசிச் சந்தனம்*
*வாசமொடு அணிந்து நெற்றி மைதிலக மிட்டுமே*
*மோசம் பொய் புனை சுருட்டு முற்றிலும் செய் மூடர்காள்*’’[71].

சிவனடியார்கள் போன்று வேடமிட்டுத் திருநீறு, சந்தனம் பூசித் தங்களது உண்மை உருவத்தை மறைத்துக் கொண்டு, மக்களை ஏமாற்றுகின்ற அறிவீனர்களாய்த் திரிகின்றனர் என்று சாடுகின்றார் சிவவாக்கியர். இவரது கருத்தை அடியொற்றி,

*"வேடமிட்டு வேடமிஞ்சி மோடி ஏற்றி*
*விடுத்தன்றோ பணம் பறித்துப் பிழைப்போரையோ"[72].*

என்று சட்டைமுனிச் சித்தர் போலி சமயவாதிகளைச் சாடுகின்றார்.

*"எல்லாம் அறிந்தவர் என்று சொல்லி இந்தப்*
*பூமியிலே முழுஞானி யென்றே*
*உல்லாசமாக வயிறு பிழைக்கவே*
*ஓடித்திரிகிறார் வாலைப்பெண்ணே"[73].*

என்று துறவு என்னும் கடுந்தவத்தில் இருந்து வீடுபேறு நிலையினை எய்தக்கூடிய வாழ்வில், அதனின்றும் விடுபட்டு சிவனடியார் போன்ற வேடம் மட்டுமே கொண்டவர்கள் போலிச் சமயவாதிகள். முழுமையான ஞானியினைப் போல் தன்னை உருவகித்துக் கொண்டு உல்லாசமான வாழ்விற்காக மக்களை ஏமாற்றிப் பிழைக்கக் கூடியவர்கள் என்று அடையாளம் காட்டுகின்றார் கொங்கணச் சித்தர்.

*"பூசையது செய்வமென்று கூட்டம் கூட்டிப்*
*புத்தி கெட்டுக் கைம்முறையின் போக்கைவிட்டுப்*
*பாசையது மிகப்பேசிப் பாட்டும் பாடிப்*
*படிப்பார்கள் மந்திரத்தின் பயனைக் காணார்*
*ஆசையிலே பெண்ணாசை மயக்கத்திலே*
*அங்கிருந்த வாமத்தைப் பங்கு போட்டுப்*
*பேசையிலே மனம் வேறாய் நினைப்பான் பாவி*
*புரட்டுருட்டாய் நினைவு தப்பிப் பேசுவானே"[74]*

என்று போலிச் சமயவாதிகளின் செயல்பாட்டினை கரூவூர்ச் சித்தர் புடம் போடுகின்றார்.

மேற்கண்ட பாடல்கள் வழி உடம்பில் நீறணிதல்; பொய் பேசுதல், வஞ்சித்தல்; தீயன கேட்டல்; மனம் ஒன்று செயல் ஒன்றாயத் திரிதல்; தீட்சைக் கொடுப்பதாகக் கூறித் திரிதல்; தம்மையே இறைவனாக உயர்வுபடுத்திக் காட்டல்; சடைமுடி தாங்கல்; புலித்தோலும் காவி உடையும் அணிதல்; இறைவனைத் தான் நேராய் கண்டதாகக் கூறல்; பிற பெண்களை நாடுதல் போன்றவற்றை மேற்கொண்டு சமுதாயத்தில் சிலர் பொய் வேடமிட்டுத் திரிகின்றனர்.

மேலும், இவர்கள் உண்மையில் தெய்வநிலை காணாதவர்கள் என்றும், திருடர், சண்டாளர், கசடர், பித்தர் போன்றோர் எனக் கடிந்தும் பொய் வேடமிட்டுத் திரிவோர்களைச் சித்தர்கள் தோலுரித்துக் காட்டுகின்றனர். இவ்வாறு பொய் வேடமிட்டுத் திரிவோர்கள் மக்களை ஏமாற்றித் தாம் வயிறு பிழைக்கின்றனர் என்பதையும் சித்தர்கள் சுட்டிக் காட்டத் தவறவில்லை.

> ***"நீரினில் குமிழிஒத்த நிலையிலாத காயம் என்று***
> ***ஊரினில் பறையடித்து ஊதாரியாய்த் திரிபவர்***
> ***சீரினில் உனக்கு ஞானசித்தி செய்வேன் பாரென***
> ***நேரினில் பிறர்பொருளை நீளவும் கைப்பற்றுவர்"*** [75.]

போலி வேடமிட்டு பொய்யர்களாகத் திரிகின்றனர் எனச் சாடுகின்றார் சிவவாக்கியர். பிழைப்பிற்காகப் பொய் வேடங்களைப் புனைகின்றனர் என்பதை,

> ***"தெற்றுவார்கள் அவர்கள் பிழைக்க அனேக வேடம்***
> ***தேகத்தில் அணிந்து கொண்டு திரிகுவார்கள்"*** [76] ***.***

என எச்சரிக்கின்றார். சட்டைமுனி இவர்கள் மக்களை ஏமாற்றி பணம் பறிப்பர். இப்பொய் வேடமிடுவோர்கள் காரிய குரு என்றும், அவர்கள் மக்களுடைய பொருளைப் பறிக்க இடும் வேடம் என்றும், வயிறு பிழைக்க மேற்கொளர்ளும் செயல் என்றும் கூறுவர்.

**"பூரண நிற்கும் நிலை அறியான் வெகு**
**பொய் சொல்வான் கோடி மந்திரம் சொல்வான்**
**காரண குரு அவனும் அல்ல இவன்**
**காரிய குரு பொருள் பறிப்பான்"[77].**

பொய் வேடமிடுவோர்களையும், அவர்களுடைய உண்மை நிலைகளையும் அவர்களுடைய ஏமாற்றுச் செயல்களையும், அவர்கள் அடையும் கேடுகளையும் எடுத்துக்காட்டிய சித்தர்கள், பொய் வேடம் கூடாது, பொய் வேடம் தரிக்க வேண்டிய தேவையில்லை. அதனால் பலன் கிட்டாது என்று அறிவுரை கூறவும் தயங்கவில்லை என்பதை அவர்தம் பாடல்களின் வழியே அறிய முடிகிறது.

*"காடே திரிந்தென்ன? காற்றே புசித்தென்ன? கந்தை சுற்றி*
*ஓடே எடுத்தென்ன? உள்ளன் பில்லாதவன்.... "[78]*

*"நீற்றைப் புனைந்தென்ன? நீராடப் போயென்ன? நீ மனமே*
*மாற்றிப் பிறக்க வகையறிந்தா யில்லை... "[79]*
*"கள்ள வேடம் புனையாதே - பல*
*கங்கையிலே உன் கடன் நனையாதே*
*கொள்ளை கொள்ள நினையாதே"[80]*

எனக் கடுவெளிச் சித்தரும் கூறுகின்றார்.

இவண் போலி வேடமிடுவோரை நம்பத் தேவையில்லை என்றும் உள்ளன்புடன் இறைவனை வழிபட வேண்டும் என்றும் அறிவுரைகள் கூறப்படுமாற்றை அறியலாம். உள்ளத்து உணர்வுகளோடு ஒன்றாத எவையும் உயிர்க்குத் துணையாவதில்லை. உள்ளன்புடன் கூடிய பக்தி போலிச் சமயவாதிகளை உருவாக்காது, நாடாது என்பதையும் அறிய முடிகிறது.

ஜென் குரு ஒருவர், புத்தன் என்று ஒன்றும் இல்லை. உடலையும் மனத்தையும் உருவி அதன் உள்ளார்ந்த மையத்தை அடைந்தால் நீ தானே அந்தப் புத்தன் என்கிறார். மனம் புத்தனாவதில்லை; உடல் புத்தனாவதில்லை, எது புத்தனாக முடியாதோ அதுவே புத்தனாகப் பிரகாசிக்கின்றது.

காற்று கண்ணுக்குப் புலனாகாது. ஆனால் நமக்கு அருகில் நம்மைச் சுற்றி நம்மோடு இயங்கிக் கொண்டிருக்கும். இக்காற்றினைப் போன்றவன் கருணாமூர்த்தியாம் கடவுள். அவன் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றான். இதனை,

> ***"பாலில் சுவைபோலும் பழத்தில் மதுபோலும்***
> ***நூலில் பொருள்போலும் நுண்பொருளைப் போற்றீரே"[81].***

> ***"எள்ளில் தைலம்போல எங்கும் நிறைபொருளை***
> ***உள்ளில் துதித்தே உணர்வடைந்து போற்றீரே"[82].***

போன்ற இடைக்காடரின் பாடல்கள் உணர்த்துகின்றன.

மேற்கூறப்பட்ட உருவமில்லாதவன்; எங்கும் நிறைந்தவன் எனக் கடவுளின் இருப்பைக் கூறும் சித்தர்களின் கருத்தினை அடியொற்றி அமைந்த ஜென் கதை ஒன்று காட்டத்தக்கதாகும்.

*“ஜென் குரு ஜோஷு என்பவரை ஒருவர் கேட்டார்.*
*‘புத்தர் என்பது என்ன?’*
*‘மண்டபத்தில் இருப்பது’ என்றார் குரு.*
*‘மண்டபத்தில் இருப்பது சிலைதானே?*
*வெறும் களிமண் சிலை’*
*என்றார் கேள்வி கேட்டவர்.*
*‘அப்படியா?’ என்றார் குரு*

அப்படியானால் புத்தர் என்பது என்ன? என்று மறுபடியும் கேட்டார் அவர். மண்டபத்தில் இருப்பது! என்று அதே பதிலை மறுபடியும் சொன்னார் குரு”[83]

‘ஞானம்’ குறித்து பேசும்போது ஜென் போலி சமயவாதிகளை சாடுகின்ற தன்மையைக் கீழ்க்கண்ட கதை மூலமாக அறியலாம்.

“ஒருநாள் காசன் (Gasan) தன் சீடர்களுக்குக் கீழ்க்கண்டவாறு போதித்தார்:

“கொல்லுதலுக்கு எதிராகப் பேசுபவர்களும் மற்றும் சகல உயிரினங்களுக்காகத் தங்களையே அர்ப்பணித்துக் கொள்பவர்களும் சரிதான். விலங்குகள் மற்றும் புழு, பூச்சிகளைக் காப்பாற்றுவது என்பது நல்ல காரியம்தான். ஆனால் காலத்தைக் கொல்பவர்களையும், பொருள் மற்றும் சொத்துகளை வீணடிப்பவர்களையும் நாட்டுப் பொருளாதாரத்தைச் சீர்குலைப்பவர்களையும்

என்ன செய்வது? அவர்களை நாம் சுலபத்தில் ஒதுக்கிவிடக் கூடாது. எல்லாவற்றிற்கும் மேலே, ஞானமடையாமல் பிறருக்குப் போதனை செய்பவர்களைப் பற்றி என்ன சொல்வது? அவர்கள் புத்த மதத்தையே கொல்கிறார்கள்.

"ஞானமடையாமல் பிறருக்குப் போதனை செய்பவர்கள்தான் இந்த மதபீடாதிகளும் போலிச் சாமியார்களும். ஞானமடைந்தவன் ஒரு மடாதிபதியாக ஒருக்காலும் இருக்கமாட்டான். ஒரு ஞானமடைந்தவனின் வார்த்தைகள் நேரடியாகவும், எளிமையாகவும் எல்லோருடைய இதயத்தையும் ஊடுவுருவதாகவும் இருக்கும். அவனுள் பிறரை அதிகாரம் செய்ய முடியாது. அவன் அன்பின் சொரூபமாகவே இருப்பான்"[84].

## 4.12 சாத்திர சடங்கு மறுப்பு

தனி மனித ஆன்மீக உணர்வுகளின் தொகுப்பு, சமயம் என்ற சமுதாய அமைப்பாக உருவெடுக்கிறது. வாழக்கைக் கொந்தளிப்புகளைக் கடந்த அமைதி காணவும் ஆழ்ந்தாராய்ந்து வாழ்க்கையின் உண்மைப் பொருளறியவும் மனிதனின் எண்ணமும் செயலும் இயக்குகின்றன. உள்ளூர ஏற்படும் இவ்வுணர்வுகளை ஆன்மீகம் என்பர். ஆலயங்களும் உருவச் சிலைகளும் குறியிடுகளும் சடங்குகளும் ஆன்மிகத்தின் அடிப்படையில் எழுந்ததாக அறிஞர்கள் கூறுவர்.

தலயாத்திரை, திருவிழா போன்றவையெல்லாம் மக்கள் ஒன்றுகலந்து பழகவும் ஒருவரையொருவர் அறியவும் நட்பையும் உறவையும் பெருக்கி அன்பை வளர்த்துக்கொள்ளவும் உருவாக்கப்பட்ட சமூக நிகழ்ச்சிகள். இந்த அடிப்படை திரிபுற்ற காரணத்தாலேயே சித்தர்கள் இவற்றைச் சாடுகின்றனர் எனலாம்.

*“போற்றும் சடங்கை நண்ணாதே”[85] என கடுவெளியாரும்*

*“ஊரிலுள்ள மனிதர்கள் ஒருமனதாய்க் கூடியே*
*தேரிலே வடத்தைவிட்டுச் செம்பை வைத்து இழுக்கிளார்*
*ஆரினாலும் அறியொணாத ஆதி சித்த நாதரைப்*
*போரிலான மனிதர் பண்ணும் புரளி பாரும் பாருமே”[86]*

*“சாவதான தத்துவச் சடங்கு செய்யும்”[87]*

எனச் சாத்திர மறுப்பு குறித்து கடுவெளிச் சித்தரும், சிவவாக்கியரும் பாடுகின்றார்கள். இறைவனை உள்ளன்புடன் எண்ணி உருகுவது மட்டுமே உண்மையான இறை வழிபாடாகும் என்ற சித்தர் கொள்கையை இப்பாடல்கள் பறை சாற்றுகின்றன.

### 4.13 புண்ணிய நீராடலும் புனிதப் பயணமும்

புண்ணிய நீராடலும் புனிதத்தலப் பயணமும் சமயச் சடங்குகளில் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. இப்பெயர்களில் பல்வேறு நதிகளிலும் நீர் நிலைகளிலும் சென்று நீராடுவற்றிலும் பல்வேறு இடங்களுக்குச் செல்வதிலும் பயனில்லை. இவற்றால் ஞானிகளை விடமுடியாது. பாவமும் தொலைந்து விடாது. இறைவனைத் தேடி ஊர் ஊராகச் செல்லத் தேவையில்லை. உள்ளன்புடன் வணங்கினால் மட்டும் போதும். இறைவனைத் தேடியலைவதென்பது விளக்கிருக்கத் தீயைத் தேடும் அறிவின்மையைப் போன்றது. இக்கருத்துக்களை,

*“எத்திசை எங்கும் ஓடி எண்ணிலாத நதிகளில்*
*சுற்றியும் தலை முழுகச் சுத்த ஞானி ஆவரோ?*
*பக்தியோடு அரன்பதம் பணிந்திடாத பாவிகாள்*
*முக்தி இன்றிப் பாழ்நகரில் மூழ்கநொந்து அலைவரே”[88]*

*தீர்த்தம் ஆடவேணுமென்று தேடுகின்ற தீனர்காள்*
*தீர்த்தம் ஆடல் எவ்விடம் தெளிந்து நீர் இயம்புவீர்*
*தீர்த்தமாக உம்முளே தெளிந்து நீர் இருந்தபின்*
*தீர்த்தமாக உள்ளதும் சிவாய அஞ்செழுத்துமே"*[89]

புனித நீராடல் மேற்கொண்டால்தான் இறைவன் தாள் சேர முடியும் என்று எண்ணுகின்ற மாந்தருக்கு, உள்ளத்துள் தீர்த்தமாக உள்ளது சிவாயமெனும் அஞ்செழுத்து மந்திரம்தான் என்று தெளிவிக்க வேண்டும் என்று இறைஞ்சுகின்றார் சிவவாக்கியர்.

*"இந்த ஊரில் இல்லையென்று எங்கு நாடி ஓடுறீர்*
*அந்த ஊரில் ஈசனும் அமர்ந்து வாழ்வது எங்கனே?"*[90]

இறைவன் குடிகொண்ட இடம் இது என்று இருக்கும் இடத்தை விட்டு எங்கு தேடிச் செல்கின்றீர்கள். அவ்வாறு செல்லும் ஊரினில் இறைவன் எங்கிருக்கின்றான்? என்ற வினாக்களுடன் இறைவன் குடிகொள்வது மனித உள்ளம், அதை மறந்து மனிதன் ஊர் ஊராகச் சென்று தேடி அலைகின்றனர் என்ற பொருள்பட அமைந்தது சிவவாக்கியர் பாடல்.

*"வாசிதனைப் பார்த்து மகிழ்ந்து உனைத்தான் போற்றி*
*காசிவரை போய்த் திரிந்து அலுத்தேன் பூரணமே"*[91]
*"உடலுக்குள் நின்று உலாவியதை காணாமல்*
*கடல்மலை தோறும் திரிந்து கால் அலுத்தேன் பூரணமே"*[92]
*"ஆரூரார் இங்கிருக்க அவ்வூர் திருநாளன்று*
*ஊரூர்கள் தோறும் உழலுவீர்! நீவிர்*
*உளக் குறிப்பை நாடா ஊமர்காள் நீவிர்*
*விளக்கிருக்கத் தீத் தேடுவீர்"*[93]

உள்ளமெனும் கோயிலில் இறைவன் குடியிருக்க மனமே நீ வேறு இடம் தேடி அலையின்றாய்; இறைவனை போற்றிப் பாடி வர காசி வரைப் போய்த்திறிந்து அலுத்தேன்; நாம் இருக்கும் இடத்தில் இறைவன் வீற்றிருக்கிறான் என அறியாது விழா எடுக்க வேற்றூர் செல்லுதல் என்பது விளக்கினை அருகில் வைத்துக்கொண்டு ஒளி யாகிய ஞானத்தினைப் பெற நெருப்பைத் தேடி அலைதல் போலாகும் என்று உவமை நயத்துடன் சாடுகின்றார்.

*"காடு மலை நதிபதி காசி முதலாய்க்*
*கால்கடுக்க ஓடின் பலன் காணலாகுமோ?'*[94]
*பூமி வலம் செய்வதனாய் புண்ணியம் உண்டோ?'*[95]

எனப் பாம்பாட்டிச் சித்தரும்.

*"காசிக்கோடில் வினைப்போமோ? அந்தக்*
*கங்கையா டில்கதி தானுமுண்டோமோ?'*[96]

எனக் கடுவெளிச்சித்தரும் கூறுமாற்றைக் காணலாம். மேலும்,

*"ஆறு கண்டாயோ அகப்பேய்!*
*அந்த வினைதீர*
*தேறித் தெளிவதற்கே அகப்பேய்!*
*தீர்த்தமும் ஆடாயே!*[97]

என அகப்பேய் சித்தரும், "குளங்கள் தோறும் மூழ்கி பாவம் தொலைக்கும் மூடர்களே மனத்தின் மாசினை ஒழியுங்கள் இறைவனைக் காண்பீர்"[98] என சிவவாக்கியரும் தத்தம் கருத்துக்களைத் தெரிவிக்கின்றனர்.

### 4.14 பாதயாத்திரை

இறைவனைக் காண உடலளவில் தன்னைத் தானே வருத்திக் கொள்வது ஒருவகைச் சடங்கு பாத யாத்திரை, அலகு குத்திக் கொள்ளுதல், தீ மிதித்தல்

போன்றவை இவ்வகையின. இவற்றை மிக வன்மையாக சித்தர்கள் கண்டிக்கின்றனர்.

*"மண்கிடாரமே சுமந்து மலையுள் ஏறி மறுகுறீர்*
*எண்படாத காரியங்கள் இயலும் என்று கூறுநீர்*
*தம்பிரான் தாள்கள் தோறுந் தரையிலே தலைபடக்*
*கும்பிடாத மாந்தரோடு கூடி வாழ்வது எங்ஙனே?"[99]*

என்றும், "விண்ணிலும் மண்ணிலும் எங்கும் பரம்பொருள் நீக்கமற நிறைந்திருக்கும் உண்மையை அறியாதார், மலைமுகட்டில் கடவுள் இருப்பதாகக் கற்பித்துக் கொண்டு தம்பொதி உடலைக் சுமந்து கொண்டு அல்லல் படுவதையும்"[100] கண்டு சிவவாக்கியர் வருந்துகிறார்.

### 4.15 ஆசாரமும் பூசனையும்

உருவச்சிலைகளின் பொய்மையை உணர்த்திய சித்தர்கள் அவை தொடர்பான சடங்குகளின் பொருளற்ற தன்மையையும் கூறுகின்றனர். உள்ளத்தின் உள்ளே இறைவன் இருக்கின்றான் என்ற உண்மையை உணராதார் புறத்தே நட்டிருக்கும் கற்சிலைக்குப் பூமாலை சூட்டி மந்திரங்களை முணுமுணுக்கின்றனர். மனம் ஒன்றாத இத்தகு செயல்களால் இறையின்பம் கிட்டாது என்கின்றனர் சித்தர்கள்.

*"பூசைபூசை என்றுநீர் பூசைசெய்யும் பேதைகாள்*
*பூசையுள்ள தன்னிலே பூசைகொண்டது எவ்விடம்*
*ஆதிபூசை கொண்டதோ அனாதிபூசை கொண்டதோ,*
*ஏதுபூசை கொண்டதோ? இன்னதென்று இயம்பும்"[101]*

*"இடங்கள் பண்ணி சுத்திசெய்தே இட்டபீட மீதிலே*
*ஆடங்கநீறு பூசல்செய்து அருந்தவங்கள் பண்ணுவீர்*
*ஒடுங்கின்ற நாதனார் உதிக்கும் ஞானம் எவ்விடம்?*
*ஆடங்குகனிறது எவ்வியம்? அறிந்து பூசை செய்யுமே"*[102]

*"சாமங்கள் தோறும் இவர்செய்யும் பூசைகள் கற்பனையே"*[103]
*"பூசை பசாசமடி அகப்பேய்*

*போதமே கோட்டமடி"*[104]

*"நாட்டுக்கொரு கோயில்கட்டி நாளும் பூசித்தே"*[105]

*நாதன் பாதம் காணார்கள் என்று ஆடுபாம்பே"*[106]

போன்ற பாடல்களின் வழியாக பூசைகள் கற்பனையே என்று வலியுறுத்துகின்றனர்.

*"தீட்டம் தீட்டம் என்று நீர் தினமும் மூழ்கும் மூடதே*
*தீட்டமாகி அல்லவோ திரண்டுகாயம் ஆனதும்"* [107]

தீட்டு என்று ஒன்று கிடையாது. அதுவே உன் உடல் எனவே மனிதனுக்கு மனத்தூய்மையே அவசியம் என்பது மறைமுக விளக்கமாகிறது.

## 4.16 நீறுபூசுதல்

உருவ வழிபாடு, அவ்வழிப்பாட்டிற்குரிய ஆலயம், அங்கு செய்யப்படும் பூசைகள், அபிசேக ஆராதனைகள், திருநீறு, குங்குமம் போன்ற சமயச் சின்னங்கள் ஆகியவற்றினைச் சித்தர்கள் கடுமையாகச் சாடுகின்றனர்.

"உருவச்சிலைகட்கு முன்னமர்ந்து நால்வகை வேதங்களை ஒதினும் எழுத்துப் பிறழாமல் மந்திரங்களைச் சொல்லினும் உடல்முழுக்கத் திருநீறைப் பூசினும் பயனில்லை"[108] என்று சிவவாக்கியர் உறுதியாகக் கூறுகிறார்.

*"சந்தனமும் வெண்ணீறும் பூசி வேடமிட்டு மனத்தைக்*
*கட்டுப்படுத்தாமல் புறத்தளவே செய்யும் பூசனைகளாலும்*
*சடங்குகளாலும் பயனில்லை"*[109]

என்று பட்டினத்தார் கூறுகிறார்.

*நேசமற்று பூசை செய்து நீறு பூசிச் சந்தனம்*
*வாசமோடு அணிந்து நெற்றிமை திலகம் இட்டுமே*
*மோசம் பொய்புனை சுருட்டு முற்றிலும் செய் மூடர்கள்*
*வேசரி களம்புரண்ட வெண்ணிறாகும் மேனியே"*[110]

எனும் சிவவாக்கியரின் பாடலும் மேற்கூறிய கருத்துக்களையே பிரதிபலிக்கின்றன.

### 4.17 நேர்த்திக்கடன் செலுத்தல்

இறைவனிடம் பேரம் பேசுவதைப் போன்ற ஒரு தரமற்ற போக்கு நேர்த்திக்கடன். நீ என்னை செல்வந்தனாக்கு, நான் அதில் பாதியை உனக்குத் தருகிறேன் என்பது போன்ற வியாபார ரீதியான இறைவனுடனான தொடர்பை வெறுத்தனர் சித்தர்.

*"சாத்திரங்கள் பார்த்துப்பார்த்துத் தான் குருடு ஆவதால்*
*நேத்திரங்கெட வெய்யோனை நேர்துசெய் மூடர்காள்.*
*பாத்திரம் அறிந்து போன பக்திசெய்ய வல்லீரேல்*
*சூத்திரப்படி யாவரும் சுத்தர் ஆவள் ஆங்ஙனே"*[111]

என்ற பாடல்வழி இதனை அறிய முடிகிறது. இவ்வகை நேர்த்திக்கடன்கள் பல வழிகளிலும் நிறைவேற்றப் படுகிறார். தலைமுடி காணிக்கை, பாதயாத்திரை, பலியிடல், தேர்வடம்பிடித்திழுத்தல் போன்றவை அவற்றுள் சில.

### 4.18 தேரோட்டம்

எல்லாம் வல்ல பரம்பொருளை, எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனை ஓர் அங்குல உருவமாக்கி தேரில் அமர்த்தி ஊர் கூடி இழுக்கும் விந்தையை என்னவென்று சொல்லவது என்பதை,

*"ஊரிலுள்ள மனிதர்கள் ஒரு மனதாய்க் கூடியே*
*தேரிலே வடத்தைவிட்டு செம்பைவைத்து இழுக்கிறார்*
*ஆரினாலும் அறியொணாத ஆதிசித்த நாதரைப்*
*பேரிலான மனிதர் பண்ணும் புரளி பாரும் பாருமே"*[112]

என்ற சிவவாக்கியரின் பாடல்வழி அறிய முடிகிறது.

### 4.19 பலியிடல்

இறைவனால் படைக்கப்பட்ட சீவனான மனிதன், அதே இறைவனால் படைக்கப்பட்ட பிறிதொரு சீவனை வெட்டிக் கொன்று, தனது தேவையைப் பூர்த்தி செய்து கொள்வது எவ்வகையில் நியாயமானதாகும். இதனை,

*"தங்கள் தேகம் நோய்பெறின் தனைப்பிடாரி கோயிலில்*
*பொங்கல் வைத்து ஆடுகோழிப் பூசை பலியை இட்டிட*
*நீங்கச் சொல்லி நலிமிகுந்து நாளும் தேய்த்து மூஞ்சுராய்*
*உங்கள் குலத்துத் தெய்வம் உம்மை உருக்கு தில்லையே"*[113]

*"வேடமிட்டு மின்துலக்கி மிக்க தூபதீபமாய்*
*ஆடறுத்துக் கூறுபோட்ட அவர்கள் போலும் பண்ணிகீறார்.*
*தேடிவைத்த செம்பெலாம் திரள்படப் பரப்பியே*
*பாடுகின்ற புட்பூசை பூசை என்ன பூசையே"*[114]

போன்ற பாடல்களின் வழியாக அறியமுடிகிறது.

இவ்வாறு இறைவழிபாட்டிலும், அற நெறியிலும் மக்களை ஈடுபடுத்தாமல், அவ்வடிப்படை உணர்வே இல்லாமல் மேற்கொள்ளப் பெறும் நல யாத்திரைகளும், புண்ணிய நீராடலும் வீண்வேலையே இதனை உலோச்சனார் எனும் சித்தரின்.

*"சாத்திரம் என்பது சண்டைச் சரக்கு-அட*
*சமயங்கள் பகைமை பனைக்கள் இறக்கு"*[115]

என்ற பாடல் புலப்படுத்துகின்றது. சமயங்களையும், சமயச் சின்னங்களையும், சடங்குகளையும் சித்தர்கள் வெறுக்கிறார்கள் என்பதைக் காட்டிலும் அவையாவும் பொருளற்ற நிலைமைக்கு இழிந்து போனமையையும் அவ்விழிநிலைக்குக் காரணமானவர்களையுமே வெறுக்கின்றனர், என்பதே பொருந்துவதாக அமையும். ஒருமுகப்பட்டு ஒன்றாத மனத்தோடு செய்யப்படும் எந்திரப் போக்கிலான வழிபாடுகளையே பொதுவாகச் சித்தர்கள் வெறுத்துரைக்கின்றனர்.

ஞானத்திற்கும் புத்தக அறிவிற்கும் தொடர்பு இல்லை. சாத்திரங்கள் மனிதனால் வகுத்துக் கொள்ளப்பட்டது எனலாம். ஞானம் பெறும் நிலைக்குச் சாத்திரங்களோ, வேதங்களோ பயனில்லை என்ற கருத்தை வலியுறுத்தும் தன்மையில் சமய சாத்திர மறுப்பு குறித்து அமைந்த ஜென் கதை ஒன்று கீழ்வருமாறு,

"சிகான் செஞ்சி முப்பது ஆண்டுக் காலம் ஞானத்தைத் தேடி அலைந்த பிக்கு. ஞானம் பெற கடினமாக உழைத்தார். கடுமையாக யோகம், தியானம் எல்லாம் மேற்கொண்டார்.

பல்வேறு குருமார்களிடம் அலைந்து திரிந்தும் அவருக்கு ஞானம் சித்திக்கவே இல்லை. ஏராளமாகச் சேர்த்து வைத்திருந்த ஞான நூல்களைக் காண்கையில் அவருக்கு எரிச்சல் வந்தது.

இதுவரை செய்த வந்த யோகம், தியானம் ஆகியவற்றைக் கைவிட்டார்.

அறங்கள், ஒழுக்க முறைகள் எல்லாம் தம்மைப் பிணித்திருக்கும் விலங்குகளாகக் கருதி அவற்றையும் கைவிட்டார்.

கடைசியில் வேலை ஏதும் இல்லாதது போல் அவருக்குத் தோன்றிற்று. அதனால் முள் செடிகளையும் புதர்களையும் வெட்டி எறியும் வேலையில் இறங்கினார் சிகான் செஞ்சி.

எந்தவிதச் சிந்தனையும் இல்லாமல், செய்யும் காரியத்திலேயே ஆழ்ந்து விட்டார் அவர்,

அப்போது அவர் காலடியில் ஒரு ஒட்டுச்சில் இடறியது. ஆதை அவர் கையில் எடுத்து வீசி எறிந்தார்.

அது சற்றுத் தொலைவிலிருந்த மூங்கில் புதர் மேல் பட்டது.

மூங்கில் மேல் பட்ட சில் ஓர் ஓசை எழுப்பியது.

ஓர் சிறிய கண நேரச் சாதாரண ஓசை

அந்த ஓசையில் அவருக்குச் "சட்டென ஞானம் பிறந்தது.

ஞானம் பிறந்த மகிழ்ச்சியில் ஒரு பாடலும் பிறந்தது.

ஓர் ஓட்டாஞ் சில்லின் ஒலியில்

நான் கற்றதெல்லாம்

காணாமல் போயின

ஒரு கண நேரத்தில்

அன்றாட வாழ்க்கைப் பணிகள் தேடி

நான் நடக்கிறேன் பழைய பாதையில்

எனக்கு

மனச்சங்கடமோ, மனக்குழப்பமோ இல்லை.

எனது பாதையில்

எனக்குச் சுவடுகளும் இல்லை

நான் ஒரு நிறத்திலோ, ஒலியிலோ

அடங்கியவனும் அல்லன்,

ஞானம் பெற்றவர்கள்

எங்கும் சொல்வது

இது தான்

"இப்படித்தான் ஞானம் சித்திக்கும்.

இது தான் ஜென் குரு சிகான் செஞ்சியின் ஞானக் கவி.

ஞானம் வேதங்களிலோ, சாத்திரங்களிலோ, சமய அனுஷ்டானங்களிலோ, யோக சித்திகளிலோ, பிராத்தனைகளிலோ இல்லை.

அது உள்ளே இருக்கிறது. எப்போதும் அது அங்கேதான் இருந்து வருகிறது. அதை நாம் அறிவுக் குப்பையில் மூடி வைத்திருக்கிறோம். அறியாமை திரையல்ல. அறிவுத்திரை விலகும் போது, பரிசுத்த அறியாமையில் ஞானம் பளிச்சென பிறந்துவிடுகிறது-நமக்குள்ளிருந்தே!”[116]

ஞானம் பெறுவதற்கு பெரும் நூல்கள், சடங்கு, சாத்திரம் மற்றும் பிற எந்த வகையிலும் பயன் இராது. இயல்பு வாழ்க்கையிலிருந்து கற்றுக் கொள்ளும் வழிப்பு நிலையிலே ஞானம் பெறமுடியும் என்பது ஜென் தத்துவத்தின் வாதம் எனலாம்.

## 4.20 அகமே கோயில்

மனித இனம் படைக்கப்பட்டதாயினும் பரிணாம வளர்ச்சியின்படி அது உயிரினங்களிடம் சிறப்பிடம் வகிக்கிறது. அச்சிறப்புக்குக் காரணம் மனம். மனமே மனிதனின் அனைத்தியக்கங்களுக்கும் முதற்காரணமாக விளங்கும் ஆற்றல்மிக்கது. மனித மனத்தில் விலங்கு மனமும் தெய்வ மனமும் நடத்துகின்ற போராட்டம் எல்லோர் வாழ்விலும் நடைபெறுகிறது. எல்லோருமே விலங்கு மனத்தை வெல்ல வேண்டும் என்றே விரும்புகின்றனர். ஆனால் அதற்கான வழியறியாமலும் கருவிகள் இல்லாமலும் பலர் தடுமாறுகின்றனர், தடம் மாறுகின்றனர். வழி கண்டு செயல்படுவோர் சிலர், தக்க கருவிகளைக் கையாண்டு வெற்றிக் காண்போர் மிகச் சிலர். வழி முறைகளைக் கூறியும், தக்க கருவிகளை வகுத்தளித்தும் மனிதப் போராட்டத்தில் வெற்றி காண்போரின்

எண்ணிக்கையை நாளும் உயர்த்தி எல்லோரும் இன்பமும் அமைதியும் காணச் செயல்பட்டோர் சித்தர்களும் ஜென் துறவிகளும்.

*"'நான்' மறைந்தால் `அவன்' தோன்றுவான்*
*அவனுக்கும் நமக்கும் இடையில்*
*எந்தச் சுவரும் இல்லை*
*நான்' தவிர"*[117]

எனவே நான் எனும் நிலையைக் கடந்தால் இறைநிலை அடையாளம், என்பர்.

புற உலகின் நீள, அகல, ஆழங்களைக் காண முற்படுவதிலேயே தன் உள்ளத்தையும் அறிந்துகொள்ள ஒருவன் முற்பட வேண்டும். ஆங்கிலப் பாவலன் மில்ட்டன், "சொர்க்கத்தை நரகமாக்குவதும் நரகத்தைச் சொர்க்கமாக்குவதும் மனம்தான்" (Mind is its own place, that makes heaven the hell and hell the heaven) என்பார்.

மனமே மனிதனின் மந்திரச் சாவி. அத்தகு மனத்தை மிகத் தூய்மையாக, ஓர் ஆலயமாக வைத்துக்கொள்ள வேண்டும். மனத்தூய்மை மனிதனுக்கு அவசியம் என்பதை உணர்ந்த சித்தர்கள், இறைவனைத் தேடி காடு, மலை, கோயில் எனத் திரியாதே. அவன் உன்னுள் இருக்கிறான். பொய்யான புறவழிபாடு வேண்டாம். அகவழிபாடே சாலச் சிறந்தது என வலியுறுத்தினர். ஆலயம் உனக்கப்பால் இல்லை. உன்னுள்ளே இருக்கிறது என்றனர். சிவலிங்கம் ஆலயத்தின் கருவறையில் இல்லை. உன் சீவனில் சிவன் கலந்திருக்கிறான் என்று சித்தர்கள் உறுதி கூறினர். இதனை,

*"பாரும் விண்ணும் எங்குமாய்ப் பரந்த அப்பராபரம்*
*ஊரும் நாடும் காடுமோடி உழன்று தேடும் ஊமைகாள்*
*நேரதாக உம்முளே அறிந்துணர்ந்து நில்லுமே"*[118].

*"ஆலமுண்ட கண்டனார் அகத்துளே இருக்கவே"*[119].

*"பூவும் நீரும் என் மனம் பொருந்து கோயில் என்னுளம்"*[120].

*"அஞ்சும் அஞ்சும் உம்முலே அமர்ந்திருந்த சிவாயமே"*[121].

*"அரியமாலும் அயனுமாகக் காணொனாத கடவுளை*
*உரிமையாக உம்முளே உணர்ந்துணர்ந்து கொள்ளுமே"*[122].

போன்ற சிவவாக்கியரின் பாடலடிகள் மனத்திலே இறைவன் இருக்கின்றான் என்ற கருத்தையே இயம்புகின்றன.

*"உள்ளம் கோயில் ஊனுடம்பு ஆலயம்"*[123].

*"கோயிலாவது ஏதடா? குளங்களாவது ஏதடா?"*[124]

கடவுள் என்பது பத்தி உணர்வின் அடிப்படையில் எழுந்தது. உருவம் இல்லாதது நிறமற்றது. எங்கும் நிறைந்திருப்பது எனக் கூற விழையும்போது கோயில் என்ற அமைப்பு வெற்றுச் சம்பிரதாயமாகவே காட்சி தருகிறது. உருவ வழிபாடு கூடாது என்று கூறும் சித்தர்களின் கற்பித்தலில் கடவுளுக்கு மனித உள்ளமே கோயில், உணர்வே தெய்வம் என்பது கருத்துடையதாகிறது.

*"ஏட்டுச்சுரைக்காய் கறிக்கிங் கெய்திடாது போல்*
*எண்திசை திரிந்துங் கதி எய்தல் இல்லையே*
*நாட்டுக்கொரு கோயில் கட்டி நாளும் பூசித்தே*
*நாதன் பாதம் காணார்கள் என்று ஆடுபாம்பே"*[125]

கோயில் ஒன்று எழுப்பி நித்தமும் வேதம் ஓதி பூசித்து, சமுதாயத்தை மறந்து திரியும் சிவனடியார்களுக்கு இறைவன் பாதம் அதாவது இறையடி சேர்தல் அரிது என்று உரைக்கிறார் பாம்பாட்டிச் சித்தர்.

*“சிற்பர்கள் கட்டும் திருக்கோயில் உள்ளாகத்*
*தற்பரம் வாழ்வதுண்டோ குதம்பாய்*
*தற்பரம் வாழ்வதுண்டோ”[126].*

*“அன்பான பத்தர் அகக் கோயில் கர்த்தற்கே*
*இன்பமான கோயிலடி குதம்பாய்*
*இன்பமான கோயிலடி”[127].*

சிற்பி செதுக்கி வைத்திருக்கும் சிலையிலும், கட்டி வைத்திருக்கும் கோயிலை விட உண்மையான பக்தி உணர்வு மேலோங்கிய பக்தர்களின் உள்ளமே இன்பமான கோயில் என்கிறார் குதம்பைச் சித்தர்.

*“உடலுக்குள் நீ நின்று உலாவினதைக் காணாமல்*
*கடல் மலை தோறும் திரிந்து கால் அலுத்தேன் பூரணமே”[128]*

உள்ளத்தில் உறைந்திருக்கும் நிலை அறியாது. உலகெங்கும் கடல், மலை என்று திரிந்து கால் அலுத்துப் போனேன் என்று உன்னில் இருக்கும் தெய்வத்தை நீ வெளியில் தேடாதே என்கிறார் பட்டினத்தார்.

*“நாட்டிலே தெய்வமென்று நடந்தலையாமல் உன்றன்*
*கூட்டினில் நாகை நாதர் குறிப்பறிந் துணர்வாய் நெஞ்சே”[129].*

வெளிப்படையாய் உருவம் வைத்து வழிபடக் கூடிய தெய்வம் இருக்கக்கூடிய இடம் தேடி அலையாமல் நெஞ்சம் எனும் கூட்டினில் உனக்குள்ளேயே இருப்பதை அறிந்துகொள்வாய் என நெஞ்சுக்குச் சொல்லியதாகச் சமூகத்திற்கு உணர்த்துகிறார், கணபதிச் சித்தர்.

*"கையின் நெல்லி போல் விளங்கு சிற்றம்பலங் கலந்தருள்*
*மெய்யிலே விளைந்தோங்கிய போகமே மெய்ப்பொருளே*
*உள்ளங்கை நெல்லிக்கனி போல்"[130].*

என்று வள்ளலாரும்,

*"எள்ளகத்து எண்ணெய் இருந்தனை ஒக்குமே*
*உள்ளகத்து ஈசன் ஒளி"[131].*

என்று ஔவையாரும் இறைவனின் இருத்தலை மெய்ப்பித்து கோயில் வெறும் கூடம். அகமே கோயிலாகும் போது ஒளி பொருந்திய இடமாய் மனிதனது மனம் மாறுகிறது.

*"எள்ளில் தைலம் போல் எங்கும் நிறைபொருளை*
*உள்ளில் துதித்தே உணர்வடைந்து போற்றீரே"[132].*

*"கைவிளக்குக் கொண்டு கடலில் வீழ்வார் போல*
*மெய்விளக் குள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே"[133].*

*"எள்ளில் எண்ணெய் போலவுயிர் எங்கும் நிறைந்த*
*ஈசன்பாத வாசமலர் எண்ணி எண்ணியே"[134].*

எனப் பாம்பாட்டியாரும் பாடிய பாடல்கள் உள்ளத்தையே கோயில் எனச் சுட்டுகின்றன.

உடலும் உள்ளமும் ஆகிய இவ்விரண்டுமே புனிதமானவை. சித்தர்களின் இக்கருத்தை அடியொற்றி அமைந்த பாடல் வருமாறு:

*"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்*
*வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே"[135].*

ஜென் குரு புனான் எழுதிய கவிதை இங்குக் காட்டத்தக்கது.

***'விலகியிரு***

***உலகம் உன்னுடையதே***

***ஊனுக்கு ஒரு புத்தன்'***

உள்ளத்தில் உறைகின்ற இறைவனை உள்ளத்தால் வழிபட்டுப் பெறுகின்ற இறையின்பம் நிலையானது. இறைவனை வார்த்தைகளால் வருணிக்க முடியாததைப் போல இறை இன்பத்தையும் இன்னது, இப்படிப்பட்டது என்று விளக்கியுரைக்க முடியாது. இறைவழிபாடு மனதால் நிகழ வேண்டும். இறைவன் உண்டென நம்பு. அவன் புறத்தே இல்லை. நம் உடலாகவும் உள்ளமாகவும் உயிராகவும் உள்ளே இருக்கிறான். புறவழிபாடுகள் பொருளற்றவை; ஆரவாரமானவை. எனவே அகவழிபாடே நனிசிறந்ததென்பது சித்தர்களின் துணிவான முடிவாவதை அறிய முடிகிறது.

கடவுளை வெளியே தேட முயற்சி செய்து கொண்டிருக்கும் மதங்களுக்கு மத்தியில் 'உன்னில் தேடு' என்று வழிவகுத்துக் கூறும் வகையில் அமைந்த ஜென் கதை பின்வருமாறு:

"டெட்சூஜென் (TETSUGEN) என்ற ஒரு ஜப்பானியர் ஜென்னில் மிகுந்த ஈடுபாடு உடையவர். அப்பொழுது சைன மொழியில் மாத்திரம் இருந்த புத்தரது சூத்திரங்களை ஜப்பானிய மொழியில் வெளியிட அவர் தீர்மானித்தார்.

மரப்பலகையில் அந்தச் சூத்திரங்களைச் செதுக்கி ஏழாயிரம் பிரதிகளை வெளியிடத் தீர்மானித்தார். இது மிகவும் கடினமான வேலைதான். மற்றும் மிகுந்த பணச்செலவு கொண்டது. இதற்காக நன்கொடை வசூலிக்க பல இடங்களுக்குச்

செல்ல அவர் தீர்மானித்தார். ஒருசில அனுதாபிகள்தான் நூறு தங்க நாணயங்கைளக் கொடுத்தார்கள். பெரும்பாலானவர்கள் சிறிய மதிப்புள்ள நாணயங்களையே வழங்கினார்கள். ஆனால் டெட்சூஜென் எல்லோருக்கும் ஒரே மாதிரியே நன்றி கூறினார். சுமார் பத்து வருடம் கழித்து அவருக்குப் போதிய நிதி உதவி கிடைத்தது. ஆகவே அந்தக் கடுமையான வேலையை ஆரம்பிக்க எண்ணினார்.

அந்தச் சமயம் பார்த்து யூஜி (Uji) ஆற்றில் வெள்ளம் வந்துவிட்டது. மக்கள் பட்டினி, பசியால் வாடினார்கள். இதைப் பார்த்த டெட்சூஜென் சூத்திரங்களை வெளியிடத் தான் நன்கொடையாகப் பெற்ற பணத்தை ஏழை மக்களின் பட்டினியைப் போக்கச் செலவழித்தார். பிறகு அந்தச் செலவை ஈடுகட்ட மேற்கொண்டு நன்கொடை வசூலிக்க எண்ணினார்.

பல வருடங்கள் சென்றபிறகு அந்த நாடு முழுவதும் ஒருவிதத் தொற்றுநோய் பரவியது. மறுபடியும் அவர் தான் சேர்த்த நன்கொடையை மக்களைக் காப்பாற்றக் கொடுத்து உதவினார்.

மறுபடியும் மூன்றாவது தடவையாக நன்கொடை வசூலிக்க ஆரம்பித்தார். இப்படியாகச் சுமார் இருபது வருடம் கழித்துத்தான் அவருடைய ஆசை நிறைவேறியது. முதல் வெளியீட்டில் மரத்தில் செதுக்கப்பட்ட அந்தச் சூத்திரங்களைக் கயோட்டில் உள்ள ஒபாக்கூ (OBAKU) மடாலயத்தில் இன்றும் காணலாம்”[136].

ஜென் வாழ்க்கைக்கு முக்கியத்துவம் கொடுக்கிறது. அதே சமயம் அதைக் கடந்து செல்லவும் வழி சொல்லுகிறது.

பலநூறு ஆண்டுகளாகப் பலப்பல பிறவிகளாகப் புத்தனை வெளியில் தேடிக் காணக் கிடக்காதவர்களுக்குக் கன்ஸான் எழுதும் ஹைக்கூ வருமாறு:

*"உணவைப் பற்றிப் பேசுவது நிறைவைத் தராது*
*உடைகளைப் பற்றி உளறுவதும் குளிரை நீக்கி விடாது*
*வயிற்றை நிரப்புவது ஒரு கோப்பைச் சாதமே*
*வெதுவெதுப்பைத் தருவது வடிவமைந்ததொரு அங்கியே*
*இருப்பினும் இவற்றைக் கருத்தில் கொள்ளக் காத்திருக்காமல்*
*புகார் செய்கிறாய், புத்தனைக் காணவில்லை என்று*
*மனத்தை அந்தர் முகமாக்கு!*
*அங்கேயே அவன் இருக்கிறான்!*
*அவனை அண்டமெல்லாம் தேடுவதேன்?"*[137]

இதில் புத்தன் உன் மனமே, அதை வெளியில் தேடுதல் அறிவீனம் என்று கூறுவது தெளிவாய் விளங்குகின்றது.

புத்தரின் சூத்திரங்களை மக்களுக்கு உணர்த்துவதற்கு முன் மக்களது வாழ்க்கையையே முக்கியத்துவமாக்குகிறது ஜென் தத்துவம்.

## 4.21 முடிவுரை

1. எல்லாச் சமயங்களின் கடவுளர்களும் ஒரே பரம்பொருளின் கூறுகளாகத் திகழ்வதால் அவர்களுள் உயர்வு தாழ்வு கற்பிப்பது அறிவுடைமையாகாது. வரையறைக்கு உட்பட்ட சமயங்கள் கற்பித்துக் கொண்ட கடவுளர்களிடமிருந்து பரம்பொருளைச் சித்தர்கள் வேறுபடுத்திக் காட்டுகின்றனர். மேலும் உருவும் பெயரும் தாங்கிய கடவுளார் பலராதல்

கூடும். இக்கடவுளர் அனைவருக்கும் மூலமாகவும் பொதுவாயும் விளங்கும் பரம்பொருள் ஒன்றேயாகும் என்றும் உறுதிப்படுத்துகின்றனர்.

2. நல்லுணர்வோடும் நல்ல நோக்கத்தோடும் உருவாக்கப்பெற்ற உருவ வழிபாட்டு முறை சில தன்னலப் பேய்களின் தலையீட்டால் பொருளீட்டும் தொழிலாக மாறிய நிலை கண்டு கொதிப்புற்று உருவ வழிபாட்டைச் சாடிய சான்றோர்கள் சித்தர்களாவர்.
3. அன்பின் ஆதாரமாகக் கொண்டு அமைய வேண்டிய பக்தியானது காலப்போக்கில் சமயப் பூசலுக்கும் வன்முறைக்கும் இடமளித்த நிலை கண்டு சமய எல்லைகளை உடைத்து சமயச் சடங்குகளுக்கு அடிப்படையான மரபு மற்றும் சாத்திரக் குப்பைகளை எரித்து அக்காலக் கட்டத்தில் புதியதோர் புரட்சிக்கு வித்திட்டோர் சித்தர்கள்.
4. ஒருமுகப்பட்ட ஒன்றாத மனத்தோடு செய்யப்படும் எந்திரப் போக்கிலான வழிபாடுகளையே சித்தர்கள் வெறுத்தனர். மதம் என்ற பெயராலும் மனுநீதி என்ற பெயராலும் மண்டிக்கிடந்த தமிழிலக்கியத்தின் முதல் எழுச்சிக் குரல் என்றே சொல்லலாம். பகுத்தறிவின் பாய்ச்சலால் மானுடத்தை மேம்படுத்திச் சித்தர்களும் ஜென் இலக்கியமும் சமூகப் போராளிகளாகவே விளங்கினர்.
5. சமுதாயத்தின் பெயரால் வயிறு வளர்க்கும் சில போலிச் சமயவாதிகளை நம்புவது அறிவீனம் என்றும், உள்ளன்புடன் இறைவனை வழிபட வேண்டும் என்றும் சித்தர்கள் அறிவுறுத்துகின்றனர். உள்ளத்து உணர்வுகளோடு ஒன்றாத எவையும் உயிர்க்குத் துணையாவதில்லை. உள்ளன்புடன் கூடிய பக்தி இருந்தால் போலிச் சமயவாதிகள் உருவாக

மாட்டார்கள். பிற மக்களும் அவர்களை நாடமாட்டர்கள் என்று சித்தர், ஜென் இலக்கியங்கள் அறிவுறுத்துகின்றன.

6. இறைவன் இருக்கின்றான். ஆனால் கோயிலில் சிலையாகவோ, மலையுச்சியில் தீயாகவோ இல்லை. அவன் உன்னுள் உடலாக, உயிராக, உள்ளமாக இருக்கின்றான். உள்ளே உறையும் இறைவனை உள்ளத்தால் வழிபட்டுப் பெறுகின்ற இறையின்பமே நிலையானது. பிற புறவழிபாடுகள் ஆரவாரமானவை. பொருளற்றவை என்பது சித்தர்களின் முடிந்த முடிவு.
7. இக்கணமே வாழ், உன்னில் இறைவனைத் தேடு, வாழ்க்கையை வாழ் என்பதையே தாராகமந்திரமாகப் போதிக்கிறது ஜென்.

## குறிப்புகள்

1. தா.ஈசுவரப்பிள்ளை, **சித்தர்களும் வேமனும்,** ப.37
2. The Elementary forms of Religious Literature, p.62.
3. Thomas F.O'Dea, **The Sociology of Religion,** pp.1-2.
4. Reinach, S. Orphen, **History of Religion,** p.3.
5. ஓஷோ, **பிரபஞ்ச ரகசியம்,** ப.40.
6. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.131.
7. வி. பத்மா, **ஜென் வழி,** அட்டைப்படக்கருத்து
8. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** ப.9.
9. ஓஷோ-ஸென், **பரவெளியின் பரவசங்களும் பாடல்களும்,** ப.15.
10. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.158.
11. சி.எஸ். தேவ்நாத், **ஜென் தத்துவக் கதைகள்,** ப.84.
12. கண்ணதாசன், **அர்த்தமுள்ள இந்துமதம் ஒலிநாடா.**
13. திருமூலர், **திருமந்திரம்,** பா.1558.
14. வள்ளலார், **மகாதேவமாலை,** பா.48
15. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** ப.105.
16. திருமூலர், **திருமந்திரம்,** சூ. 2104.
17. அவ்வையார், **சித்தர் பாடல்கள்,** பா.126.
18. சிவவாக்கியர், **மேலது,** பா.381.
19. மேலது, பா.123.
20. மேலது, பா.296.
21. அவ்வையார், **மேலது,** பா.125.
22. அகப்பேய்ச் சித்தர், **மேலது,** பா.74
23. கடுவெளியார், **மேலது,** பா.26.
24. சிவவாக்கியர், **மேலது,** பா.486.
25. இடைக்காடர், **சித்தர் பாடல்கள்,** பா.32.
26. புவியரசு, **ஜென் கதைகள்,** ப.71.
27. இரா. மாணிக்கவாசகம், **திருமந்திர ஆராய்ச்சி,** பா.230.
28. சிவவாக்கியர், **சித்தர் பாடல்கள்,** பா.230

29. மேலது, பா.496.
30. பாம்பாட்டிச்சித்தர், மேலது, பா.92.
31. பட்டினத்தார், மேலது, பா.90.
32. அகத்திய முனிவர், மேலது, பா.24.
33. சிவவாக்கியர், மேலது, பா.464.
34. பாம்பாட்டிச் சித்தர், மேலது, பா.7.
35. கணபதிச் சித்தர், மேலது, பா.15
36. குதம்பைச் சித்தர், மேலது, பா.147.
37. சிவவாக்கியர், மேலது, பா.508
38. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** ப.14.
39. பாம்பாட்டிச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.105.
40. அவ்வையார், மேலது, பா.153.
41. மேலது, பா. 154.
42. இடைக்காடர், மேலது, பா. 62.
43. பாம்பாட்டிச் சித்தர், மேலது, பா.103.
44. ஓஷோ, **பிரபஞ்ச ரகசியம்,** ப.34.
45. இடைக்காடர், மேலது, பா. 44.
46. மேலது, பா.50.
47. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** ப.153.
48. ஓஷோ, **பிரபஞ்ச ரகசியம்,** ப.106.
49. சிவவாக்கியர், **சித்தர் பாடல்கள்,** பா.489.
50. மேலது, பா.451.
51. மேலது, பா.160.
52. சிவவாக்கியார், மேலது, பா.32.
53. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.128.
54. சிவவாக்கியர், மேலது, பா.13.
55. பாம்பாட்டிச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.98
56. அகப்பேய்ச் சித்தர், மேலது, பா.72.
57. அகப்பேய்ச் சித்தர், மேலது, பா.

58. சிவவாக்கியர், மேலது, பா.10.
59. பத்ரகிரியார், மேலது, பா.32.
60. உலோசனர், மேலது, பா.17.
61. சிவவாக்கியர், மேலது, பா.33.
62. மேலது, பா.70
63. ஓஷோ, **பிரபஞ்ச ரகசியம்,** பக்.22-23
64. சி.எஸ். தேவ்நாத், **ஜென் தத்துவக் கதைகள்,** ப.109.
65. அகத்தியர் ஞானம், பா.1,4.
66. மேலது, பா.3.11
67. அகத்தியர், மேலது, பா.30
68. பட்டினத்தார், மேலது, பா.88.
69. அகத்தியர், மேலது, பா.3
70. கருவூரர், மேலது, பா.16.
71. சிவவாக்கியர், மேலது, பா.499.
72. சட்டைமுனி, மேலது, பா.72.
73. கொங்கணர், மேலது, பா.103.
74. கருவூலச் சித்தர், மேலது, பா.17.
75. சிவவாக்கியர், மேலது, பா.503.
76. வான்மீகர், மேலது, பா.5.
77. கொங்கணர், மேலது, பா.102.
78. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.67.
79. மேலது, பா.124.
80. கடுவெளிச் சித்தர், மேலது, ப.33.
81. இடைக்காடர், மேலது, பா.50.
82. இடைக்காடர், மேலது, பா.52.
83. புவியரசு, **ஜென் கதைகள்,** ப.153.
84. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்,** ப.69.
85. கடுவெளியார், **சித்தர் பாடல்கள்,** பா.28.
86. சிவவாக்கியர், மேலது, பா.230.

87. மேலது, பா.121.
88. சிவவாக்கியார், மேலது, பா.507.
89. மேலது, பா.59.
90. மேலது, பா.414.
91. மேலது, பா.21.
92. மேலது, பா.23.
93. மேலது, பா.5.
94. கடுவெளியார், மேலது, பா.15.
95. பாம்பாட்டியார், மேலது, பா.88.
96. கடுவெளியார், மேலது, பா.100.
97. அகப்பேய்ச் சித்தர், மேலது, பா.34.
98. சிவவாக்கியர், மேலது, பா.480.
99. மேலது, பா.80.
100. மேலது, பா.110.
101. சிவவாக்கியர், மேலது, பா.111.
102. சிவவாக்கியர், மேலது, பா.32.
103. மேலது, பா.459.
104. பட்டினத்தார், **திருஏகம்பமாலை,** 128.
105. அகப்பேய்ச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.72.
106. பாம்பாட்டிச் சித்தர், மேலது, பா.94.
107. சிவவாக்கியர், மேலது, பா.122.
108. சிவவாக்கியர், மேலது, பா.453.
109. மேலது, பா.36.
110. பட்டினத்தார், மேலது, பா.4.
111. சிவவாக்கியர், மேலது, பா.499.
112. மேலது, பா.510.
113. மேலது, பா.229.
114. மேலது, பா.494.
115. திருமூலர், **திருமந்திரம்,** பா.519.

116. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** பக்.56-59.
117. ஓஷோ, **ஒரு கோப்பை தேநீர்,** ப.153.
118. சிவவாக்கியர், **சித்தர் பாடல்கள்,** பா.11.
119. மேலது, பா.12.
120. மேலது, பா.188.
121. மேலது, பா.255.
122. மேலது, பா.222.
123. திருமூலர், **திருமந்திரம்,** பா.1823.
124. சிவவாக்கியர், **சித்தர் பாடல்கள்,** பா.33.1.
125. பாம்பாட்டிச் சித்தர், மேலது, பா.94.
126. குதம்பைச் சித்தர், மேலது, பா.179.
127. குதம்பைச் சித்தர், மேலது, பா.181.
128. பட்டினத்தார், **பூரணமாலை,** பா.23.
129. கணபதிச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.24:3.4
130. வள்ளலார், **திருவருட்பா**, பா.386.
131. ஔவையார், **சித்தர் பாடல்கள்,** பா.114.
132. இடைக்காடர், மேலது, பா.50.
133. மேலது, பா.68.
134. பாம்பாட்டிச் சித்தர், மேலது, பா.4.
135. திருமூலர், **திருமந்திரம்,** பா.1823.
136. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்,** பக்.31-32.
137. ஓஷோ, **பிரபஞ்ச ரகசியம்,** ப.16.

# 5. தத்துவ நோக்கில் சித்தர், ஜென் இலக்கியங்கள்

## 5.0 முன்னுரை

சித்தர்களின் கருத்துக்கள் இன்னவகை உடைத்தன என்று கட்டுப்பாட்டுக்குள் கூறுவது இயலாததாகும். ஏனெனில் சித்தர்களின் கருத்துக்கள் பொதுமைத் தன்மை உடைத்தனவாகும். இதற்குக் காரணம் சித்தர்கள் எந்தவொரு சமயத்திற்கோ, தத்துவ அமைப்பிற்கோ உட்பட்டுத் தங்கள் கருத்துக்களை வெளிப்படுத்தியவர்கள் அல்லர். இக்கருத்தினை உறுதிப்படுத்தும் வகையில் ‘சித்தர் தத்துவம்’ என்னும் நூலில் க. நாராயணன், "சித்தர்களின் இலக்கியங்களை ஒருசேரப் பார்த்தால் அவற்றில் இந்தியத் தத்துவங்களில் உள்ள அனைத்துக் கருத்துக்களையும் காணலாம். அதேபோலச் சித்தர் தத்துவம் பிற இந்தியத் தத்துவங்களிலிருந்து வேறுபடுவதையும் காணலாம். எல்லாக் கருத்துக்களையும் பேசுவதால் சித்தர்களை இந்தியத் தத்துவத்தின் எந்த ஒரு அமைப்பின் கீழும் கொண்டுவருவது கடினம்"[1] என்று விளக்கம் தருகின்றார்.

சித்தர்களின் தத்துவங்களை ஆராய்ந்த அறிஞர்கள் பலரும் அதனைத் தாந்திரீகம், தாந்திரீக புத்த மதம், சைவம் ஆகியவற்றின் இணைப்பாகக் கருத்தில் கொண்டு விளக்கமளித்துள்ளனர். தாந்திரீக புத்த மதத்திற்கும் சித்தர் தத்துவத்திற்கும் நெருங்கிய ஒற்றுமை இருப்பதாகக் குறிப்பிடுகின்றனர்.

மேற்கூறப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில், சமயம் கடந்த நிலையில் சித்தர் இலக்கியங்களும் ஜென் இலக்கியங்களும் கூறும் வாழ்வியல் தத்துவங்கள் இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

## 5.1 கடவுட் கோட்பாடு

'ஒன்றின் இருப்பிலிருந்து இல்லாமையை, இல்லாமையிலிருந்து இருப்பை அனுமானிப்பது மனித இயல்பு'. இறைவன் என்கிற கருத்தாக்கம், நம்பிக்கை, பேருண்மை காலங்காலமாகத் தொடர்ந்து விவாதிக்கப்பட்டு வருகின்ற ஒரு நிகழ்வாகும். இறை என்ற கருத்தாக்கம் சித்தர் பார்வையில் அகத்தில் உள்ளுணர்வினால் உணரப்படுகின்ற பேரானந்தமாக, குறியீடாகக் குறிக்கப்படுகிறது.

*'ஆதியுண்டு அந்தமில்லை அன்று நாலு வேதமில்*
*சோதியுண்டு சொல்லுமில்லை சொல்லிறந்தது ஏதமில்*
*ஆதியான மூவரில் அமர்ந்திருந்த வாயுவும்*
*ஆதியன்று தன்னையும் யாரறிவது அண்ணலே'[2].*

என்று சிவவாக்கியார் கூறுகிறார்.

*''அணுவுள் அவனும் அவனுள் அணுவும்*
*கணுவுற நின்ற கலப்ப துணரார்*
*இணையிலி யீசன் அவனெங்கு மாகித்*
*தணிவற நின்றான் சராசரந் தானே[3].*

என்று திருமந்திரம் கடவுளின் இருப்புநிலையை கூறுகின்றது.

*'எனக்குள்ளே நீ இருக்க*
*உனக்குள்ளே நான் இருக்க*
*மனக்கவலை தீர வரம் அருள்வாய் பூரணமே'[4].*

என்ற பட்டினத்தார் பாடலில் இறைவனின் உள்ளுணர்வினால் உணரப்படுகின்ற தன்மை வெளிப்படுகின்றது.

சித்தர்கள் உருவ வழிபாட்டை ஒப்புக்கொள்வதில்லை, தெய்வத்தோடு ஒன்றி அதுவாகவே மாறிவிடக் கூடியவர்கள். தெய்வத்தை வணங்கிக் கொண்டாடமுடியும். அவர்கள் கடவுளைச் சிவன் என்கின்றனர். அக்கடவுளுக்கு வரையறைகளோ குணாதிசயங்களோ இல்லை. சித்தர்கள் உருவவழிபாடு செய்யும் பக்தர்கள் அல்லர். வடிவ நிலைப்படுத்தப்பட்ட சிவனைப் பயன்படுத்தாமல் கருத்து நிலைப்பட்ட சிவத்தை உணர்கின்றனர். தெய்வத்தைக் காட்டிலும் தெய்வத் தன்மை பற்றிய கருத்திலேயே நம்பிக்கை கொண்டிருந்தனர்.

'இறைவன் வரையறைகளுக்கு அப்பாற்பட்டவன்' எனும் சித்தர் தத்துவத்திற்கு நிகரான ஜென் கதை ஒன்று வருமாறு: "குருவிற்கு மிகவும் வயதாகிவிட்ட காரணத்தினால் சீடர்களை அழைத்துத் தான் ஓய்வு பெற விரும்புவதாகக் கூறினார். அவரது மூன்று சீடர்களும் எதுவுமே பேசாமல் மவுனமாக இருந்தனர். குரு சற்று அமைதியாக,

'நீங்கள் ஏறக்குறைய எல்லாவற்றையும் கற்றுவிட்டீர்கள் என்று கருதுகிறேன். எனினும் வெறும் தர்க்க அறிவு என்பது வேறு, அனுபவ அறிவு என்பது வேறு. அது போலவே தத்துவம் என்பதும், யதார்த்தம் என்பதும் வேறு வேறு'. 'மனிதன் இறையுணர்வு பெறவேண்டும். அதுதான் முக்கியமானது. அதனால் நீங்கள் மூவரும் தனித்தனியாகச் செல்லுங்கள். பல திசைகளிலும் ஓராண்டு பிரயாணம் செய்யுங்கள். திரும்பி வந்து உங்களுக்கு ஏற்பட்ட மெய்ஞ்ஞான அனுபவத்தைப் பற்றி என்னிடம் சொல்லுங்கள்' என்றார்.

உடனே மூவரும் புறப்பட்டு வெவ்வேறு திசைகளில் பிரிந்து சென்றனர். நாடெங்கும் பயணம் செய்ததில் பல்வேறு அனுபவங்களைப் பெற்றனர். பலவகையான மக்களைச் சந்திக்க நேர்ந்தது. பல்வேறு விதமான நிகழ்வுகளைக் கண்டனர். ஒரு வருடத்திற்குப் பிறகு மூவரும் சேர்ந்து குருவிடம் போனார்கள். முதலாமவன் சொன்னான்,

‘குருவே! நான் இறைவனைக் கண்டேன். அவர் எங்கும் இருக்கிறார். அவருக்கு உருவம் கிடையாது. எல்லாவற்றிலும் எல்லா இடத்திலும் இறை வியாபித்துள்ளது’.

இரண்டாமவன் சொன்னான்,

‘குருவே! இறைவனுக்கு உருவம் உண்டு. அவர் ஒளி வடிவமாகக் காணப்படுகிறார். மனக்கண்ணால் மட்டும்தான் அவரைக் காணமுடிகிறது. மனம் உருகிப் பிரார்த்தனை செய்யும் போதெல்லாம் அவர் பல விதங்களில உதவ ஓடி வருகிறார்’. இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மூன்றாமவன் சங்கடத்துடன் தலையைக் குனிந்து கொண்டான். பின்னர் மெல்லச் சொன்னான் ‘எனக்கு ஒரே குழப்பமாயிருக்கிறது. எதுவும் புரியவில்லை. திட்டவட்டமாக இதுதான் இறைவன் என்று ஊகிக்கவோ முடிவு கட்டவோ என் அறிவு எனக்கு இடம் தரவில்லை’ என்றான். மற்ற இருவரும் அவனைக் கேலியாகப் பார்த்தனர். ஆனால் குருவின் முகத்தில் புன்னகை வெளிப்பட்டது. ‘நீ சொன்னதுதான் உண்மை’ என்றார் அமைதியுடன். அத்துடன் ‘எனக்குப் பின் இம்மடாலயத்தை நீயே நிர்வகித்து வா’ என்றார்”[5].

அறிவுக்கோ, விவாதங்களுக்கோ எட்டாதது ஞானம். தெரியாததைத் தெரியாது என்று ஒப்புக்கொள். தெரிந்ததாக வேடம் பூணாதே என்கிறது ஜென்'.

## 5.2 நிலையாமைத் தத்துவம்

சித்தர்களின் வாழ்வியல் குறித்த சிந்தனையில் முக்கிய இடம் நிலையாமை குறித்த சிந்தனையாகும். இந்தியச் சமயங்கள் பலவற்றிலும் இக்கருத்து காணப்படுகின்றது. உலகமும் அதில் இடம்பெறுகின்ற மனித வாழ்வும் பொருட்களும் நிலையற்றவை. அழியக் கூடியவை. நிலையற்ற இந்த உலகிலிருந்தும் வாழ்விலிருந்தும் விடுபடுவதே வீடுபேறு என்றும், அதனை அடைவதே உயிரின் இலட்சியம் என்றும் இந்தியச் சமயங்கள் வலியுறுத்துகின்றன.

"நிலையாமைக் கொள்கையை ஓரளவு வற்புறுத்திய பிராமணர், வேள்வி முதலியன செய்வதால் மனோரதங்களை நிறைவேற்றலாம். அடைவதற்கு அரியனவற்றை அடையலாம் என்ற கொள்கை உடையவர்களாயிருந்தனர். நிலையாமையைப் பெருமளவு வற்புறுத்திய சமணரும் பௌத்தரும் துறவறத்தைப் போதித்தனர்"[6].

சமணம் மற்றும் பௌத்த சமயங்கள் செல்வாக்குப் பெறாத சங்க காலத்தில் நிலையாமைக் கொள்கை பெரிதும் போற்றப்படவில்லை. இச்சமயங்கள் செல்வாக்குப் பெற்ற அறநெறிக் காலத்தில் நிலையாமைக் கொள்கை மிகுதியாக வலியுறுத்தப்பட்டிருக்கின்றது. இதனைச் சமண பவுத்த சமயத்தைச் சார்ந்தவர்கள் படைத்த நீதி காப்பிய இலக்கியங்களில் காணமுடியும். இளமை, யாக்கை, செல்வ நிலையாமையை எடுத்துக்கூறிச் சமய நீதியையும், துறவறத்தையும் போதித்த

சமண, புத்த நெறிகளுக்கு மாற்றாகப் பக்தி இயக்கச் சான்றோர்களின் சிந்தனை அமைந்தது. சைவ சமயத்தினர் நிலையாமையை ஒப்புக்கொண்டாலும் இறைவனை எண்ணி வழிபட்டால் நிலைத்த இன்பத்தைப் பெறலாம் என்று வலியுறுத்தினர். இவர்களைத் தொடர்ந்து வந்த சித்தர்களும் தங்களது பாடல்களில் நிலையாமைச் சிந்தனையை வெளிப்படுத்தியுள்ளனர். வாழ்க்கை நிலையாமை, செல்வ நிலையாமை, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, உறவு நிலையாமை என நிலையாமைக் கருத்துக்கள் சித்தர்களின் பாடல்களில் பெரும்பான்மையாகக் காணப்படுகின்றது.

நிலையில்லாதவற்றை நிலையானவை என்று எண்ணுவதும், பொய்யானவற்றை மெய்யானவை என்பதும் மாயை. இம்மயக்கம், ஆன்மா தன் உண்மை நிலையை அறிய விடாமல் தடுக்கிறது. ‘பொருள்களின் புறத்தோற்றங்களையும் இயல்புகளையும் உண்மை எனக் கொள்ளாமல் அவற்றைக் கடந்துசென்று நிலைத்த உண்மையைக் காண்பதே அறிவு என்பார் வள்ளுவர். இந்த நிலைத்த அறிவு நிலையாமையினை முழுப்பொருளையும் நன்கறிந்து செயல்படும். மாயையை விலக்கி அறிவுக்கண் கொண்டு நோக்கினால் நிலையாமையின் முக்கியத்துவம் புரியும். அதனைத் தாமுணர்ந்து மனித இனத்திற்கும் அறியச் செய்ய அரும்பாடுபட்டோர் சித்தர்கள் ஆவர்.

எல்லா வகை மத இலக்கியங்களும் சுட்டிக்காட்ட மறவாத ஒரு கோட்பாடு ‘நிலையாமை’ என்று கூறலாம். அதனைச் சித்தர்கள் தமது பாடல்களில் சுட்டியிருப்பது முத்தாய்ப்பே எனலாம். சித்தர்கள் சாகாக் கலையிலும் செத்தாரை மீண்டும் எழுப்பும் ஆற்றலிலும் வல்லவர்கள் என்பது அனைவரும் அறிந்ததாகும். ஆனாலும் சித்தர்களால் நிலையாமைச் செய்திகள் இன்றியமையாததாக

எடுத்துரைக்கப்பட்ட காரணம் என்னவென சாமி சிதம்பரனார் தமது நூலில் விரிவாகக் கூறுகிறார். 'செத்தாரை மீண்டும் எழுப்ப முடியும் என்ற நம்பிக்கை மக்களிடம் வேரோடியிருக்குமானால் அதனால் பல தீமைகளும் ஏற்பட்டுவிடும்'. 'நமது உடல் நிலையானது அன்று' என்ற எண்ணம் உடையவர்கள் தாம் நல்லறம் செய்வர்; உடல் மறைவதற்குள் உத்தமமான செயல்களைச் செய்ய எண்ணுவார்கள்; இருக்கும்வரை இன்பத்தை அனுபவிக்க வேண்டும்; இயன்றவரை பிறர்க்கு நன்மை செய்ய வேண்டும் என்ற எண்ணம் பிறக்கும். செத்தாலும் மீண்டும் பிழைத்திடலாம் என்ற நம்பிக்கை இருந்தால் இம்மியளவு கூடப் பிறர்க்கு உதவி செய்யமாட்டார்கள். எல்லாவற்றையும் தமக்கென்றே சேர்த்து வைத்துக் கொள்வார்கள்; செத்தபின் எழுப்பி விடுவதற்கான ஏற்பாடுகளையும் செய்து கொள்வார்கள். உலகில் இன்றுள்ள ஒழுங்கு முறைகள் யாவும் தலைகீழாய் மாற்றமடைந்து போகும். எனவே இறப்பென்பது தேவையான கட்டாயமான நிகழ்வென்பதைச் சித்தர்கள் உணர்ந்திருந்த காரணத்தாலேயே நிலையாமையை வலியுறுத்திச் சென்றனர்.

உலகில் தோற்றமுடைய யாவும் நிலையில்லாதன என்பது என்றும் மாறாத வாய்மையாகும்.

*'இளமையும் நில்லா யாக்கையும் நில்லா*
*வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா'.*

என்று சீவகசிந்தாமணியில் திருத்தக்கத்தேவர் நிலையாமை குறித்துப் பேசுகின்றார். உலகில் காணப்படும் யாவும் நிலையற்றன என்று அறிந்தும் மக்கள் அவற்றின் மேல் பற்று வைப்பதற்குக் காரணம் பாசபந்தமேயாகும். ஒன்றின் மீது

பற்று வைத்தவர் அதனைப் பிரியவோ இழக்கவோ நேரும்பொழுது அதனால் துன்புறுவதும் இயல்பானதாகும்.

> ***“பத்தும் புகந்து பிறந்து வளர்ந்து பட்டாடை சுற்றி***
> ***முத்தும் பவளமும் பூண்டோடி ஆடி முடிந்த பின்பு***
> ***செத்துக் கிடக்க பிணத்தருகே இனிச் சாம்பிணங்கள்***
> ***கத்தும் கணக்கென்ன காண்”[7].***

இந்த உலகத்தில் நீண்ட நாள் வாழலாம் என்ற கருத்துடைய மனிதர்களுக்கு உலகப் பொருள்கள் யாவும் நிலைத்தவை அல்ல என்ற கருத்தினைப் புலப்படுத்தும் விதமாக மேற்கூறப்பட்ட பட்டினத்தாரின் பாடல் அமைந்துள்ளது. உடல் நிலையாமை உலகம் நிலையாமை பற்றி நன்கு வலியுறுத்தித் தத்தம் பாடல்களில் சித்தர்கள் பாடியுள்ளனர்.

“இந்த உடம்பைவிட்டு உயிர் பிரிந்தவுடன் சுற்றத்தார் அனைவரும் உடலைச் சுடுகாட்டுக்குக் கொண்டு போய் சுட்டுவிடப் போகின்றனர். பலநாள் கூடி எடுத்த இந்த சரீரம் அனைத்தையும் ஒருநாள் மண் தின்னப் போகிறது. ஆக இருப்பது என்னவோ பொய்; இறப்பது என்பதே உண்மை. அதனால் யாருக்கும் நீ தீங்கினை எண்ணாதே”[8].

“மனிதனின் வாழ்க்கை நிலையானது அல்ல. மனித உடம்பு நிலையானது அல்ல என்று பாடுகின்றார் பட்டினத்தடிகள். மேலும் ஊரும் சொந்தமல்ல, நம்மால் உழைத்து சம்பாதித்துச் சேர்த்து வைக்கப்பட்ட பெரும் செல்வங்களும் நமக்குச் சொந்தமல்ல”[9].

### 5.2.1 வாழ்க்கை நிலையாமை

உலகியேலாடு ஒன்றிணைந்த குடும்பம் என்ற அமைப்பின் மூலமாக வாழ்க்கைத் தத்துவங்கள் உருவாக்கப்படுகின்றன. குடும்பம் என்ற அமைப்பில் தாய், தந்தை, மனைவி, மக்கள், உற்றார், உறவினர் என வாழ்வின் எல்லை விரிந்து செல்கின்றது. வாழ்க்கை என்பது அனைவருக்கும் பயன்படும் விதத்தில் வாழ்வதாகும். வீடுபேறுநிலை எய்துவதே வாழ்க்கைத் தத்துவமாகிறது. ஏனெனில் இந்த உலகில் தோற்றம் பெற்றிருக்கின்ற யாவும் நிலைத்த தன்மை உடையன அன்று. உயிர் வாழ்க்கை மட்டுமின்றி இவ்வுலகியல் பொருள்களும் நிலையானவை அல்ல.

மக்கள், பெண்டிர், சுற்றம், செல்வம், புகழ் என்று வாழும் இந்த வாழ்க்கையானது நிலையானதன்று. அழியக்கூடியது. இத்தகைய வாழ்வைப் போற்றாமல் என்றும் நிலைத்திருக்கும் இறைவனைப் போற்றுங்கள் என்று நிலையாமைத் தத்துவம் அறிவுறுத்தப்படுகின்றது''.

*'முடிசார்ந்த மன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொரு*
*பிடிசாம்பராய் வெந்து மண்ணாவதுங் கண்டு பின்னுமிந்தப்*
*பிடி சார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற் பொன்றி னம் பலவர்*
*அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றே யறிவாரிலையே'*[10].

எத்தகைய புகழ் மிக்க மன்னராய் இருந்தபோதிலும், எத்தகு சிறப்பு பொருந்திய வாழ்வு வாழ்ந்தபோதிலும் மன்னரும் மற்றவரும் இறந்தபின்பு எரித்து சாம்பலாகி விடுவதுண்டு. எனவே வாழ்வு நிலையற்றது என்ற தத்துவத்தை உணாந்து வாழ வேண்டும் என்கிறார் பட்டினத்தார்.

"மனித வாழ்க்கையானது நீர்க்குமிழி போன்று நிலையற்றது. இந்த உண்மையை உணராது இந்த உலகியல் வாழ்வில் என்றும் நிலைத்திருப்போம் என்றெண்ணிப் பசித்தோர்க்குச் சிறிதளவு உணவும்கூட அளிக்காமல் சிலர் வாழ்கின்றனர்"[11]. அத்தகையோர் இறந்தால் அவர்களுக்காக யாரும் வருந்தமாட்டார்கள் என்று ஈகையை வலியுறுத்துகிறார்".

'ஒவ்வொரு மனிதனின் உலகியல் வாழ்க்கையும் என்றேனும் ஒருநாள் முடிவுக்கு வந்தே தீரும் என்பது தெளிவான உண்மை. இந்த உண்மையை உணர்ந்து யாவருக்கும் மனத்தாலும் தீங்கு செய்யாமல் வாழ வேண்டும்"[12] என்று அறிவுறுத்துகின்றார் பட்டினத்தார்'.

வாழ்க்கை நிலையற்றது என்ற கருத்தை உணரும்போதுதான் மனிதன் நிலையில்லாத வாழ்க்கைக்காகச் சேர்த்து வைக்கும் பொருள்களெல்லாம் வீண் என்ற எண்ணம் தோன்றும். இத்தகைய எண்ணம் வாழ்க்கையை எளிமையானதாக மாற்றிக்கொள்ள வழி செய்யும். உலகியல் பொருள்கள் நிலையற்றவை என்ற எண்ணம் முத்தி நிலைக்குப் படிக்கட்டு எனலாம்.

***"இன்றுளோர் நாளை இருப்பதுவும் பொய்யனவே***
***மற்றுளோர் சொல்லும் வகை யறிவது எக்காலம்"[13]***

***"நீரில் குமிழிபோல் நிலையற்ற வாழ்வை - விட்டுன்***
***பேரின்பக் கருணை வெள்ளம் பெருக்கெடுப்ப தெக்காலம்?"[14]***

இவ்வுலக வாழ்க்கையானது நிலையானது அல்ல என்று நிச்சயப்படுத்துகிறார்கள். மேலும் ‘ஊன் நிறைந்த காயம் உயிர் இழந்து போகும்’ என்றும் மனிதர்களுக்கு அறிவுறுத்துகின்றார் பத்ரகிரியார்.

தாய், தந்தை, மனைவி, மக்கள், உடல், இல்லறம் என்று வாழும் இந்த வாழ்க்கை நிலையற்றது. உடலிலிருந்து உயிர் பிரிந்துவிட்டால் இவ்வுலக வாழ்க்கை இல்லாமல் போய்விடும். இந்த உண்மையை உணர்ந்திருந்தும் இவ்வுலக வாழ்க்கையை நிலையானது, உண்மையானது என்று சொல்பவர்கள் அறிவிலிகள். அத்தகையவர்களுடைய வார்த்தையை நம்பாது என்றும் நிலைத்திருக்கும் இறைவனின் மலரடியை நம்புங்கள் என்ற கருத்தினைச் சித்தர் பாடல்கள் உணர்த்துகின்றன.

நேர்த்தியான வாழ்க்கை வாழ வழிகாட்டியாய் அமைந்த ஜென் இலக்கியம், ‘நேற்றிருந்தால் இன்றில்லை’ எனும் நிலையாமைத் தத்துவத்தைக் கீழ்க்காணும் கதை மூலமாக எடுத்துக் கூறுகின்றது.

தாவோ தத்துவச் சிந்தனையாளர் சுவாங்டஸு உலகளாவிய சிந்தனைச் செல்வாக்குப் பெற்றவர்.

அவர், தமக்கு அமைச்சர் பதவி கிடைத்தபோதும் அதைத் துச்சமெனத் தூக்கியெறிந்த மகான்.

‘அலங்கரிக்கப்பட்டுப் பலிபீடத்துக்கு அழைத்துச் செல்லப்படும் காளையாக இருப்பதைவிட சேற்றில் புரளும் பன்றியாக இருப்பது மேல்’ என்று சொன்னவர் அவர்.

அவருடைய மனைவி காலமானார். துக்கம் விசாரிக்கவும் ஆறுதல் கூறவும் பலர் அவர் வீட்டிற்கு வந்தனர். அவ்வாறு ஒருவர் வந்தபோது சுவாங் தாளம் போட்டுக் கொண்டிருந்தாராம். அதன்பின் பாட ஆரம்பித்தாராம்.

மனைவி இறந்த துக்கம் சிறிதுகூட இல்லாமல், இப்படியொரு மனிதன் தாளம் போட்டுப் பாடிக் கொண்டிருப்பானா என்று அதிசயித்து வந்தவர் கோபம் கொண்டு அதைப் பற்றிக் கேட்டிருக்கிறார்.

அதற்கு அவர் சொன்ன பதில்:

‘‘என் மனைவி பிறப்பதற்கு முன் அவளுக்கு உயிரும் இல்லை. உடலும் இல்லை. பிறகு அவளுக்கு உருவமும் உயிரும் வந்தது. இப்போது அந்த உயிரும் உருவமும் போய்விட்டது. இளவேனில், இலையுதிர், பனிக்காலங்கள் எனப் பருவங்கள் மாறுவது போலப் பிறப்பும் இறப்பும் மாறிமாறி வருவது இயற்கை. இதற்காக அழுவது எப்படி?’’[15]

இறப்பு என்பது ஒரு நிகழ்வுதான் என உணர்த்தும் வகையில் அமைந்த ஜென் கதை ஒன்று;

‟ஒரு சீடர் நீண்டகாலப் பயணத்திற்குப் பிறகு ஊர் திரும்பிக் கொண்டிருந்தார்.

ஊர் எல்லையிலேயே அவருக்கு ஒரு மரணச் செய்தி அறிவிக்கப்பட்டது. அவருடைய பிள்ளை இறந்து போனான். அதிர்ச்சியும், துக்கமும் மிக அவர் ஊருக்குள் விரைந்தார். அவர் எதிரில் அந்தச் சவ ஊர்வலம் சென்று கொண்டிருந்தது. சவத்தைப் சுமந்து செல்வோர் அருகில் அவருடைய குருவும் நடந்து சென்று கொண்டிருந்தார்.

சீடர் தம் குருவின் முன்னால் சென்று வணங்கி, ‘செல்லுங்கள் சுவாமி, ஒரு சொல் சொல்லுங்கள்!’ என்று கேட்டார்.

அப்படிக் கேட்பது ஜென் வழக்கம்.

சிக்கலான, நெருக்கடியான காலங்களில் அப்படிக் கேட்டால், ‘இதெல்லாம் என்ன? ஏன் இப்படி? இந்த நிகழ்வின் காரணம் என்ன?’ என்று கேட்பதாகப் பொருள்.

குரு, பாடையின் மேல் போர்த்தப்பட்டிருந்த, சவத்தின் துணியை விலக்கி, ‘பார்! நான் எதையுமே உன்னிடம் மறைக்கவில்லை!’ என்றார்.

‘உனக்கும், எல்லாம் சொன்னேன். எதையும் மறைக்கவில்லை. பிறப்பு என்றால் என்ன? வாழ்க்கை என்றால் என்ன? என்பதை நீ அறிவாய். இதோ மரணம். புத்தம் புதிதாய் மரணம். இந்தக் குழந்தையின் முகத்தில் அதைத் தரிசித்துப் பார்”[16] என்பது அவர் சொன்னதன் உட்கருத்தாய் அமைகிறது”.

***“இவ்வுலக வாழ்வுதானும் இன்றே அறுமென்று***
***எண்ணிக் காத்தன் அடிநினைந் தாடாய் பாம்பே”[17].***

பிறருக்குத் தீங்கு செய்யாமல் உதவி செய்து வாழ்ந்து இறைவனடி சேர்தலே வாழ்வின் உன்னத நிலை என்று பாம்பாட்டிச் சித்தர் அறிவுறுத்துகின்றார். தீய எண்ணங்களிலிருந்து விடுபட்டு நன்மை செய்து வாழ்தலே சிறந்ததாகும்.

வாழ்க்கை என்பது எப்படி இருந்தாலும் அதை ஏற்று வாழத்தான் வேண்டும். எந்த நேரத்தில் அழைப்பு வந்தாலும் செல்லத் தயாராக இருக்க

வேண்டும் என்று வாழ்க்கையின் நிலையாமைத் தத்துவத்தை சித்தர் பாடல்கள் மற்றும் ஜென் இலக்கியங்கள் அறிவுறுத்துகின்றன.

### 5.2.2 உறவு நிலையாமை

வாழ்க்கை நிலையாமை குறித்துப் பேசிய சித்தர்கள் உறவு நிலையாமை குறித்தும் பேசியுள்ளனர். உலகில் உறவுகள் இரத்தபந்தம் மட்டும் தான் என்றில்லாமல் பலவிதமாக வளர்ச்சி நிலை அடைகின்றன. இந்த உறவுகள் அனைத்தும் இறுதிவரை உடன் வருவன என்று உறுதியாகக் கூறமுடியாது. சில உறவுகள் பொருள் உள்ளவரைத் தொடரும். சில உறவுகள் உயிர் உள்ளவரைத் தொடரும். இறுதி வரை எந்த உறவும் உடன் வருவதில்லை. உறவின் நிலையாமை பற்றிய திரையிசைப் பாடல் ஒன்று நினைவுகூரத்தக்கது.

*'வீடுவரை உறவு, வீதிவரை மனைவி,*

*காடுவரை பிள்ளை, கடைசி வரை யாரோ'?*

என்ற தத்துவப் பாடல் உறவின் எல்லையை அடையாளம் காட்டுகின்றது.

ஈட்டி வைத்த பெருஞ் செல்வமும் ஏற்படுத்திக் கொண்ட உறவுகளும் கால ஓட்டத்தில் மாறி அழியும் தன்மை கொண்டவை. மரணத்தின் போது யாவும் உடன் வருவதில்லை என்று பாடுகின்றார் சிவவாக்கியார்.

*"மக்கள் பெண்டிர் சுற்ற மருக்கள் மற்றவர்*

*மாளும்போது கூட அவர் மாள்வ தில்லையே.*

*தக்கவுல கனைத்தையுந் தந்த கர்த்தனைத்*

*தாவித் தாவித் துதித்து நின்றாடாய் பாம்பே"*[18]

என்று பாம்பாட்டிச் சித்தர் முன்பு உடன்கட்டை ஏறும் வழக்கம் வழக்கிலிருந்தது. யாரொருவர் இறக்கும்போதும் யாரும் உடன் மாள்வதில்லை இப்போது வாழ்க்கை நிலையற்றது என்ற தத்துவம் உணரப்படாத நிலையில் உறவைப் போற்றிப் பேணுதல் பயனில்லை என்கிறார்.

*''பெண்டாட்டி மந்தை மட்டும் வருவாள் பெறறே*
*பிள்ளை மயானக் கரையின் மட்டும்*
*தெண்டாட்டும் தர்மம் நடுவினிலே வந்து*
*சேர்ந்து பரகதிதான் கொடுக்கும்''[19].*

என மனிதனிடத்து செல்வம் இருக்கும் வரை அவன் உடன் ஒட்டி வாழ்வர். பொருள் தீரும்போது விலகி ஓடுவர். இத்தகு உலகில் எத்தகைய உறவும் உடன் இருப்பது இயலாதது என்று உறவுகளின் எல்லை குறித்துக் கொங்கணர் சித்தர் பாடுகின்றார்.

*"இல்லம் துறந்து பசிவந்தபோது அங்கு இரந்துநின்று*
*பல்லும் கரையற்று வெள்வாயுமாய் ஒன்றிப் பற்றுமின்றிச்*
*சொல்லும் பொருளும் இழந்து சுகானந்தத் தாக்கத்திலே*
*அல்லும் பகலும் இருப்பதென்றோ கலாயத்தனே''[20]*

பட்டினத்தார் துறவறத்தை வலியுறுத்தி உறவின் நிலையாமையை எடுத்துரைக்கின்றார். சிவவாக்கியர் இல்லறத்தின் சிறப்பைப் போற்றி இறைவன் தாள் சேர்தலை வலியுறுத்துகின்றார். நிலையாமையைப் பேசினும் வாழ்வின் உன்னதத்தைப் போற்றுகின்றார்.

வாழ்க்கை நிலையற்றது எனும்போது அதைச் சார்ந்த அனைத்தும் நிலையற்றதே என்கின்றனர் சித்தர்கள். சித்தர்களின் கருத்திற்குச் சற்று மாறானதாக நிலையாமையைப் பேசினாலும், நிலைத்த தன்மை உடையதாக எப்போது ஆக்கிக் கொள்ளலாம் என்பதை ஓஷோ, ஜென் வழியாகப் பேசுகிறார்.

***"உன்னுள் வற்றிப்போக வேண்டும்***
***இருப்பு நிலையற்றதை***
***உண்மை என எடுத்துக் கொள்ளாதே"[21].***

இருப்புநிலை உனது மெய்மை. அது மாசற்ற இருப்பு மட்டுமே. அது பெயரற்றது. எல்லைக் கோடுகள் எதுவுமே இல்லாதது. அளவிடவே முடியாதது. ஆனாலும் எல்லாம் வற்றிய நிலையிலேயே இரு. உன்னுடைய பேரறிவின் வானம் முழுமையிலும் மேகங்கள் ஏதுமற்று இரு. அந்த வெற்றிடத்தில்தான் பூரணமான புரிதல் பரிணமிக்கிறது. புத்தர் அதையே சுவர்க்கத்தின் தாமரை என்று அழைக்கிறார். அந்த வெற்றிடத்தில்தான் நீ பரமாத்மாவுடன் ஒன்றிவிடுகிறாய். இவ்விதமான மெய் உணர்தல் இல்லையெனில் உனது வாழ்க்கை மதிப்பற்றதே"[22] என்று விளக்கமளிக்கின்றார்.

"தோளில் உள்ள பை அல்லது மூட்டை, உலகம், நாம் உலகைச் சுமந்தே தீர வேண்டி வருகிறது. ஆனால், எந்த நேரத்திலும் அதைத் தூக்கி எறியத் தயாராக இரு என்பது அவர் செயலில் காட்டினார்"[23].

'தோற்றம், வளர்ச்சி, அறிவு அல்லது இறப்பு என்ற விதிக்கு உட்பட்டே உலகியல் பொருள்களும் வாழ்வும் அமைகின்றன. கடந்தகால வரலாறும், நிகழ்கால அனுபவமும் மனிதனுக்குத் தெளிவாக எடுத்துக்காட்டும் உண்மை

இது. நொடிப்பொழுது கூட இவ்வுலகியலில் ஏதும் நிலைத்திருப்பதில்லை. எல்லாம் எப்போதும் மாற்றம் அடைந்துகொண்டே இருக்கின்றன. இந்திய வைதிகத் தத்துவங்கள் கூறும் மாறாத ஆன்மாவும் மாறிக்கொண்டே இருக்கிறதெனப் பௌத்தம் கூறுகிறது. 'நிலையாமையொன்றே நிலையான உண்மை' என்று கௌதம புத்தரும், 'உலகியல் வாழ்க்கை நில்லாது ஓடும் ஒரு தொடர் நீரோட்ம் போன்றது' எனக் கிரேக்க ஞானி அனாக்சிமேண்டரும் கூறுகின்றனர். 'நாளை இறக்கப் போகின்றவர்கள் இன்று இறந்தவர்களை எண்ணி அழுவது விந்தையிலும் விந்தை எனவும்,

*"முடிசார்ந்த மன்னரும மற்றும் உள்ளோரும் முடிவிலொரு*
*பிடி சாமபலாய் வெந்து மன்னாவது கண்டும் இந்த*
*பிடி சார்ந்த வாழ்வை நினைப்பதெல்லாள் பொன்னின அம்பலவர்*
*அடி சார்ந்து நாம் உய்ய வேண்டுமென்றே அறிவார் இல்லையே"*[24]

எனவும் சித்தர் பட்டினத்தார் இறப்பின் உண்மையைச் சுவைபடச் சொல்லுகிறார். நேற்றிருந்தவன் இன்றில்லை எனும் கூற்று பெருஞ்சிறப்பு உடையது. இவ்வுலகியல் வாழ்க்கை. உறங்குவதும் விழிப்பதும் போன்று இறப்பதும் பிறப்பதும் உலகியல் உண்மைகள் என்று தமிழ் மறை கூறுகிறது.

### 5.2.3 யாக்கை நிலையாமை

அறிவியலும் விஞ்ஞானமும் பலகோடி ஆண்டுகளாக நிகழும் வரலாறுகளும் 'மரணம்' என்பது தவிர்க்க முடியாத முடிவு என்பதை உறுதி செய்கின்றன. இம்மரணம் சிலருக்கு ஆனந்தம்; பலருக்கு அவத்தை;

மனிதர்களுள் பெரும்பான்மையினர் இரண்டாம் நிலையில் இருக்கின்றனர் என்பது மறுக்க முடியாத உண்மை.

'இறைவனது படைப்பில் மிகவும் அற்புதமானது இந்த உடம்பு' எனினும் அதில் அதீத நாட்டங்கொள்வது ஆபத்தில் முடியும் என்பது அனைவரும் அறிந்ததே.

நீரில் எழுதப்படும் எழுத்து உடன் மறைவது போன்று யாக்கையும் விரைவில் அழியும் இயல்புடையது. இது பிணி, மூப்பு, சாக்காடு முதலியவற்றிற்கு ஆட்பட்டு நிலைதடுமாறும் தன்மை உடையது. உடலில் உயிர் உள்ளவரை மட்டுமே உடம்பிற்கு மதிப்பு. உயிர் பிரிந்தவுடன் அதைப் பிணம் என்று தீயிட்டு எரித்துவிடுவர்.

***"ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்***
***பேரினை நீக்கிப் பிணம்என்று பேரிட்டுச்***
***சூரையாம் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு***
***நீரினில் மூழ்கி நினைப்பு ஒழிந்தார்களே"[25].***

வீட்டைக் கட்டிச் சுக வாழ்விற்காக வேள்விகளைச் செய்து மெய்யும் பொய்யும் பேசி மக்கள், மனைவி, சுற்றம் என்று வாழ்ந்து கொண்டிருக்கும் மாந்தர்களே. எமன் உயிரைக் கொண்டு போனபிறகு ஒரு ஓடு பெற்ற மதிப்பைக் கூட உடம்பு பெறாது என்பதை உணருங்கள் என்பது சித்தர்கள் உணர்த்துவது.

***"உறங்குவது போலும் சாக்காடு - உறங்கி***
***விழிப்பது போலும் பிறப்பு"[26].***

என்பார் வள்ளுவர். இதுவே உலக இயற்கையும் நியதியும் ஆகும். மனிதத் தத்துவம் போற்றத்தகுந்தது. மனித உடல் என்பது இறைவன் வழங்கிய அருட்கொடை. ஐம்புலன்களுக்கு ஆட்படாமல் யாக்கையாகிய கூட்டை இறைவனுக்கு ஆட்படுத்தினால் வீடுபேறு தானே கிடைக்கும்.

யாக்கை நிலையற்றது. அது அழியக்கூடியது. உயிருக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பை உவமை வழி வள்ளுவர் சுட்டுகிறார். கூட்டிற்கும் பறவைக்கும் உள்ள தொடர்பினைப் போலவே உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு அமைகிறது. கூட்டிலேயே பறவை எப்போதும் இருப்பதில்லை. கூட்டை விட்டுப் பறவை பறப்பது போன்றே இறப்பு நேருங்கால் உடலைத் தனியே விட்டு உயிர் பிரிகிறது.

எமன் வந்தழைக்கும் போது ஓடி ஒளியவோ மறையவோ எவராலும் முடியாது. இறப்பு நிச்சயம் என்பதைப் புறுநானூறு,

*"பல்சான்றீரே பல்சான் றீரே*
*கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்*
*பயனில் மூப்பின் பல்சான் றீரே!*
*கணிச்சி கூர்மப் படைக் கருத்திறல் ஒருவன்*
*பிணிக்குங் காலை இரங்குவீர் மாதே"*[27]

எனக் குறிப்பிடுகிறது.

*"யுத்தகாலன் வந்துதான் பிடித்தால் நாமும்*
*செத்த சவமடி வாலைப் பெண்ணே"*[28]*.*

எனக் கொங்கணரும்,

*"நடுவன் வந்தழைத்தபோது நானும்இந்த நல்லுடல்*

*சுடலை மட்டும் கொண்டு போகத் தோட்டி கைக்கொடுப்பாரே"*[29].

எனச் சிவவாக்கியரும் பாடிய பாடல்கள் மேற்கூறிய கருத்தையே வலியுறுத்துகின்றன. மேலும் இறப்புக்கு ஏழை, பணக்காரன், படித்தவன், படிக்காதவன், ஆண் பெண் என எவ்வித வேற்றுமையும் இல்லை.

*"இத்தனை சாத்திரந் தாம்படித் தோர் செத்தார்"*[30].

என்ற பாடல் பிறந்தவர் அனைவரும் யாராக இருந்தாலும் இமயப் புகழ்ப் பெற்றிருந்தாலும், இறப்பைச் சந்தித்தே ஆகவேண்டும் என்று கூறுகின்றன.

### 5.2.3.1 இறப்பு - இயற்கை நிகழ்வு

இறப்பென்பதோர் இயற்கை நிகழ்வு. அது உலகியலின் இயல்பு. அது ஒவ்வொரு நொடியும் நம்மை அறியாமலேயே நம்முள் நிகழ்கின்றது. குழந்தை, பாலன், காளை, இளைஞன், முதியோன் என பருவ மாற்றங்களை எண்ணிப் பார்ப்பின், ஒரு பருவம் செத்து மறு பருவம் வருவதை உணரலாம்.

நொடிக்கு நொடி நாளுக்கு நாள் செத்துக்கொண்டிருக்கும் நிலையை எண்ணி எண்ணி எவரும் வருந்துவதில்லை. அழுவதுமில்லை எனக் குண்டலகேசி கூறுகிறது. அதனால் இறப்பை எண்ணி வருந்தக்கூடாது. மாற்றாக இறப்புக்குள் தம்மாலியன்ற அளவு பிறருக்கு உதவ வேண்டும்.

அவரன்றி, இவ்வுலகில் பலரும் இவ்வாறுதான் இருக்கின்றனர்.

*"மரணம் கண்டு அஞ்சாத ஒருவன்*

*மற்ற எதற்கும் அஞ்சிட மாட்டான்"*[31]

எனினும் மரணம் பற்றி அத்த பயமும் ஆபத்தானது எனலாம்.

"ஆதி மனிதனுக்கு மட்டுமல்ல, நாகரிகத்தில் முதிர்ந்து விளைந்தவருக்கும் இறப்பு விலக்கி வைத்த விஷயமாகிவிட்டது. இறப்பைப் பற்றிப் பேசாதே. சிக்மண்ட் ஃபிராய்டுக்கு இறப்பு என்ற வார்த்தை காதிலேயே விழலாகாது. யாராவது அவரிருக்கும்போது அந்த வார்த்தையைச் சொல்லிவிட்டால் போதும். வாயில் நுரை தள்ள வலிப்புக் கொண்டு கீழே விழுந்துவிடுவார். அதனால் அந்த வார்த்தையை அவரிருக்கும்போது யாரும் சொல்லக்கூடாது என்றே வைத்திருந்தார்கள். மனோ தத்துவப் பகுப்பாய்வியல் படைத்தவரின் விதி அது"[32].

பிறந்தவர் அனைவரும் ஒரு நாள் இறப்போம் என்ற ஆரோக்கியமான சிந்தனை நமக்கு வேண்டுமெனச் சித்தர்கள் அறிவுறுத்துகின்றனர். இதனை,

*"பிறப்பதெல்லாம் இறப்பதுண்டு பேதை மக்கள் தெரிகிலாது*
*இறப்பதில்லை எனமகிழ்ந்து எங்கள் உங்கள் சொத்தெனக்*
*குறிப்புப் பேசி திரிவரன்றிக் கொண்ட கோலம் என்னவோ?"*[33]

என்ற பாடல் வழி அறியலாம். உயிர் இழந்த உடலின் நிலையாக,

*"விட்டு விடப் போகுதுயிர்! விட்ட உடனே உடலைச்*
*சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்...................."*[34]

*"எத்தனை நாள் கூடி எடுத்த சரீரம் இவை?*
*அத்தனையும் மண்தின்ப தல்லவோ?"*[35]

*"விறகுடன் கொளுத்தி மேனி வெந்து போவது அறிகிலீர்"*[36].

*"வீற்றிருந்தாள் அன்னை; வீதிதனில் இருந்தாள்!*
*நேற்றிருந்தாள்; இன்று வெந்து நீறானாள்"*[37]

*"குனிந்து சுமந்து கடுகி நடந்து, சுடலை அடைந்து*
*மானிட வாழ்வென வாழ்வென நொந்து —*
*விறகிடை மூடி அழல்கொடு போடவெந்து விழுந்து*
*முறிந்து நிணங்கள் உருகி எழும்பு கருகி அடங்கி*
*ஓர்பிடி நீறும் இலாத உடம்பை......................."*[38]

போன்ற பாடல்களின் வழி உயிர் நீங்கிய உடலானது புழுக்களுக்கு இரையாகவோ, ஒருபிடி சாம்பலாகவோ தான் ஆகும் என்று அறுதியிட்டு கூறுகின்றனர்.

*"இன்றுள்ளோர் நாளை இருப்பதும் பொய்யனவே*
*மன்றுளோர் சொல்லும் வகையறிவது எக்காலம்"*[39].

எனப் பத்ரகிரியாரும்,

*"இருப்பது பொய் போவது மெய் என்றெண்ணி நெஞ்சே*
*ஒருத்தருக்கும் தீங்கினை உன்னாதே........................"*[40]

என்ற பாடல் வழிப் பட்டினத்தாரும் இறப்பு மெய், அதனால் பிறருக்குத் தீங்கு செய்யாதே எனக் கூறுகின்றனர்.

இலட்சிய துடிப்புடைய மனிதனை மண்ணுலகில் இருந்து விண்ணுலகிற்கும் இருளிலிருந்து ஒளிக்கும் அறியாமையில் இருந்து அறிவுக்கும் உயர்த்துவது மன, புலனடக்கமாகும். இவ்விரு அடக்கமும் இல்லையெனின் புலன் நுகர்ச்சி வாழ்வே மனித வாழ்வின் இறுதிக் குறிக்கோளாக எண்ணி விலங்கு வாழ்வையே மனிதன் மேற்கொள்வான். அதனால் இவ்வுடல் இன்பங்களை, அதாவது சிற்றின்பத்தை

விடுத்துப் பேரின்பம் அடையச் செய்யும் முகமாக யாக்கை நிலையாமை சித்தர்களால் காட்டப்பெறுகிறது.

இறப்பு இயற்கை நிகழ்வென்பதை உணர்த்தும் ஜென் கதை ஒன்று

''லின் - சீயின் குரு இறந்துவிட்டார்.

பல்லாயிரக்கணக்கான மக்கள் பல இடங்களிலிருந்தும் வந்து கூடிவிட்டார்கள். அதற்குக் காரணம் அந்தக் குரு அல்ல. லின்-சீதான். லீன் ஜப்பான் நாடு முழுவதும் புகழ்பெற்றவர். அவருக்கு மரியாதை செலுத்துகிற முறையில்தான் அவருடைய குருவின் சாவிற்கு புத்தர் வந்து குழுமியிருந்தார்கள்.

அங்கே மிகப் பெரிய ஆச்சரியமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. எல்லோரும் திகைப்படைந்தார்கள்.

அவர்களை வியப்பில் ஆழ்த்திய நிகழ்ச்சி என்னவென்றால், லின்சீ அழுது கொண்டிருந்ததுதான்!.

'ஜனன-மரணம் சமம்' ன்றைு உலகிற்குச் சொல்லிக் கொண்டிருப்பவர், 'பிறப்பைப் போல, இறப்பும் கொண்டாட்டத்திற்குரியது' என்று சொல்லிக் கொண்டிருப்பவர், தன் குருவிற்காகக் கண்ணீர் வடித்தால் எப்படி? அதை அவரிடமே கேட்டுவிட்டார்கள்.

அதற்கு அவர், 'ஆம் நான் அழுகிறேன். இது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. நான் என்ன செய்யட்டும்? அழுகைதான் வந்து தொலைக்கிறதே! வாழ்வு எவ்வளவு விசித்திரமாக இருக்கிறது. பார்த்தீர்களா? மரணம் இயற்கையானது என்பது நம் எல்லோருக்கும் தெரியும். அது தவிர்க்க முடியாதது என்பதும் நமக்குத் தெரியும். அது பயங்கரமான விஷயமல்ல. மிகவும்

ஆனந்தம்தான் அம்சம்தான். ஆனாலும் அழுகை வருகிறதே! என் குரு இறந்தது நல்லது. இல்லாவிட்டால் எனக்கு அழுகை வரும் என்பது தெரிந்திருக்காது. நானும் பற்றுகளைக் துறந்தவன் என்று நினைத்துக் கொண்டு இருந்திருப்பேன். அவர் இறந்ததால்தானே எனக்கும் இதயம் உண்டு. எனக்கும் கண்ணீர் உண்டு, என்னாலும் அழமுடியும் என்பது தெரிந்தது!

'என் குருநாதர் மரணம் வாழ்க! என்னை எனக்கும், உங்களுக்கும் உணர்த்திய அவர் மரணம் வாழ்க! எவ்வளவு ஆச்சரியம் பார்த்தீர்களா? எவ்வளவோ விழிப்புணர்ச்சி அடைந்த பின்னும் இதய ஈரத்தின் வெளிப்பாடாய் அழுகை வருகிறது!.

'நான் வாழ்வை அடக்கமாட்டேன். அதை முழுமையாய் உள்ளபடி ஏற்றுக் கொள்கிறேன். ஆன்மா அழிவில்லாததுதான். உடல் மட்டும் அழியக்கூடியதுதான். இன்றும் அதைத்தான் சொல்கிறேன். ஆனால் இந்த உடல் அழகானது. அழகிய இந்த உடலுக்காக அழுகிறேன். இந்த உடல் அற்பமான தூசுதான். இப்போது இந்தத் தூசு மற்ற தூசுவோடு சேர்ந்துவிட்டது என்பதும் உண்மைதான். ஆனால், அற்பத் தூசு எவ்வளவு அழகான உடலெடுத்து மறைந்துவிட்டது. அதற்காக நான் அழுகிறேன். என்னால், கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை என்றார் லின்சீ'"[41].

போலித் தத்துவங்களை வரட்டுத்தனமாகப் பேசிக் கொண்டிருக்காமல், வாழ்க்கைக்கு உண்மையாக இருந்தவர் அவர். எதையும் அடக்கி வைத்து மறைப்பது விழிப்புணர்வுக்குத் தடை.

### 5.2.4 பொருள் நிலையாமை

''மரணம் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போய்விடும். பின் எதற்காக கவலைப்படுகிறாய்?''[42] என்பார் ஓஷோ.

உலகில் பிறந்த அனைத்தும் இறக்கக் கண்டு தாங்கள் மட்டும் இறக்கமாட்டோம் எனச் சில பேதையர்கள் எண்ணிக் கொண்டு உடமைப் பொருட்களுக்காகப் பகையினையும், பொறாமை குணத்தினையும், அநீதியான செயல்களையும், பதுக்கல் தன்மையையும் வளர்த்துக் கொள்கின்றனர். இந்த உலகத்தில் படைப்புப் பொருட்கள் யாவும் நிலையற்றவை. எனவே அவற்றின் மீது பற்றற்று வாழ் என்கின்றன சித்தர், ஜென் இலக்கியங்கள்.

*''பிறக்கும் பொழுது கொண்டு வந்ததில்லை*
*பிறந்து மண்ணில்*
*இறக்கும் பொழுது கொண்டு போவதில்லை''*[43].

''செல்வம் சகடக்கால் போல வரும்'' என நாலடியாரும் செல்வத்தின் நிலையாமையைக் கூறுகிறது.

நாடு, நகர், நற்பொருள் இவையாவும் நடுவன் வந்தழைக்கும் போது கூட வருவதில்லை என்ற வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவத்தை எளிய தமிழில் சித்தர்கள் பாடி வைத்தனர். இதனை,

*''கூட வருவதொன் றில்லை''*[44].
*''நாடுநகர் வீடு மாடு நற்பொருள் எல்லாம்*
*நடுவன் வரும்பொழுது நாடி வருமோ?*
*கூடு போன பின்பு அவற்றால் கொள்பயன் என்னோ?''*[45]

*“மாடகூட மாளிகைகள் வண்ண மண்டபம்*

*மதில்சூழ்ந்த அரண்மனை மற்றும் உள்ளவை*

*கூடவரா என்றுஅந்தக் கொள்கை அறிந்தோர்*

*குலவாமல் வெறுப்பா ரென்று ஆடுபாம்பே”[46].*

*“மலை போன்ற செம்பொற்குவை வைத்திருப்பவர்*

*மறலிதான் வருகையில் வாரிச் செல்வரோ?”[47]*

*“மாடுகன்று செல்வமும் மனைவி மைந்தர் மகிழவே*

*மாடமாளிகைப் புறத்திலே வாழுகின்ற நாளிலே*

*ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே*

*உடல்கிடந்து உயிர்கழன்ற உண்மை கண்டும் உணர்கிலீர்”[48].*

போன்ற பாடல்கள் புவியில் வாழ்வதற்காகச் சேர்த்துவைக்கின்ற பொருள்கள் யாவையும் நிலையற்றவையே எனும் கருத்தினை வெளிப்படுத்துகின்றன. வாழ்க்கை நிலையற்றது. உடல் நிலையற்றது எனக் கூறும் பொழுது உடலைப் பேணி வாழ்க்கையை மேம்படுத்துவதற்காகப் பெரும் போராட்டங்களுக்கு இடையிலும் சேர்த்துவைக்கும் செல்வம் நிலையில்லாதது. போகும்போது எதையும் கொண்டு செல்வதில்லை. எனவே பிறருக்குக் கொடுத்துதவி புவியில் நல்ல வண்ணம் வாழ்ந்து மறையலாம் எனும் கருத்து தெளிவுபடுகிறது.

பிறக்கும்போது கொண்டுவந்தது ஒன்றும் இல்லை. இறக்கும்போது கொண்டு போவதும் ஒன்றும் இல்லை. இடையில் இறைவனால் கொடுக்கப்பட்ட செல்வம் இன்று உன்னுடையது, நாளை வேறொருவருடையது ஆகிறது எனும் பொருள் பொதிந்த கீதாசாரத்தை ஒரு பாடலில் பட்டினத்தார் பாடியிருக்கின்றார். இதனை,

*“பிறக்கும்பொழுது கொடுவந்த தில்லை; பிறந்து மண்மேல்*
*இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை; இடைநடுவில்*
*குறிக்குமிச் செல்வம் சீவன் தந்ததென்று கொடுக்கறியா*
*இறக்கும் குலமாருக்கு என் சொல்லுவேன்?”*[49]

எனும் பாடல் வழி அறியலாம். பணத்தின் மேல் ஆசை வைப்போரைக் கண்டு,

*“நாப்பிளக்க பொய் உரைத்து நவநிதியம் தேடி....*
*ஆபத்தனை அசைத்துவிட குரங்கதனைப் போல*
*அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீரே”*[50]*.*

*“பிணவாசம் உற்ற பெருங்காயம் மெய் யென்று*
*பண ஆசையாலே மதி இழந்து கெட்டேனே”*[51]*.*

பணம் என்றால் பிணம் கூட வாயைத் திறக்கும் என்று கூறும் நடைமுறை வழக்கானது மனிதனைப் பணம் எந்தளவிற்கு ஆட்கொண்டுள்ளது என்ற கருத்து வெளிப்படுத்துகிறது.

*“பொன்னிச்சை கொண்டு பூமிமுற்றும் திரிந்தால்*
*மன்னிச்சை நோக்கம் வாய்க்குமோ கல்மனமே”*[52]*.*
*“பூமியெல்லாம் ஓர் குடை கீழ்ப் பொருந்த அரசாளுதற்குக்*
*காமியம் வைத்தால் உனக்குக் கதியுளதோ கல்மனமே”*[53]*.*
*“துடணமாகச் சொல் லாதே - தேடும்*
*சொத்துக் களிலொரு தூஎம் இல்லாதே”*[54]*.*

மண்ணாசை, பொன்னாசை, செல்வத்தின் மீதான ஆசை வேண்டாமென மனத்திற்கு அறிவுறுத்தும் வகையில் பல பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. பட்டினத்தார் பாடல்களில் அமைந்த 'நெஞ்சொடு புலம்பல்' பகுதியில் பொன்னாசை வேண்டாமென மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்படுகின்றது. இதனை,

*"மாணிக்கம் முத்துவயிரப் பணிபூண்டு*
*ஆணிப்பொன் சிங்காதனத்தில் இருந்தாலும்*
*காணித்துடலை நமன் கட்டியே கைப்பிடித்தால்*
*காணிப்பொன் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே"*[55].

*"கற்கட்டும் மோதிரம்நல்கடுக்கன் அரைஞான் பூண்டு*
*திக்குஎட்டும் போற்றும் திசைக்கு ஒருத்தர் ஆனாலும்*
*புற்கிட்ட எமனுயிர் பந்தாடும் வேளையிலே*
*கைச்சட்டங் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே"*[56].

*"கையில் அணிவளையும் காலில்இரு பாடகமும்*
*மெய்யென்று இறுமாத்து விட்டனையே நெஞ்சமே"*[57].
*"உற்பத்தி செம்பொன் உடைமைபெரும் வாழ்வை நம்பிச்*
*சற்பத்தின் வாயில் தவளைபோல் ஆனேனே"*[58].

என்ற பாடல் வழி வாழ்க்கை நிலையில்லாதது என்பதை உணராது தான் சேர்த்து வைத்த செல்வங்களெல்லாம் இருக்க தான் இறந்துவிட்ட நிலையைச் சுட்டிக் காட்டுகின்றார் பாம்பாட்டிச் சித்தர். ஆன்மீக வாழ்க்கையோடு வாழ்ந்து, எளிமையோடு இருந்து, இறைப்பற்றோடு கூடிய வாழ்வுதனில் வீடுபேறு எய்தும் நிலை வாய்க்கப்பெறுதல் அவசியம் என்கின்றன சித்தர் பாடல்கள்.

*“மாணிக்கமா மணிமுடி வாகு வலயம்*
*மார்பில் தொங்கும் பதக்கங்கள் மற்றும் மணிகள்*
*ஆணிப்பொன் முத்தாரம் அம்பொன் அந்தக் கடகம்*
*அழிவான பொருளென நின்று ஆடுபாம்பே”!*[59].

என்ற பாடலும் சேர்த்து வைக்கின்ற பொன், பொருள் யாவும் போகும் காலத்தில் உடன்வருவதில்லை. எப்படி வாழ்ந்து இறந்தான் என்றுதான் உலகம் பேசும். கொண்டுபோக வேண்டியவை எவை என்பதைச் சித்தரிப்பது கூடக் கிடையாது.

முற்பிறவியில் ஒருவன் செய்த நல்ல, தீய வினைகளே அவனைப் பற்றித் தொடரும் எனவும், செல்வந்தனாக இருக்க முற்பிறவி காரணமில்லை எனவும் பட்டினத்தார் கூறுகிறார்.

*“முன்னம்நீ செய்ததவம் முப்பாலும் சேரும் அன்றிப்*
*பொன்னும் அணிதிகழும் பூவையும் அங்கே வருமோ?”*[60]
*“முன்தொடர்பில் செய்த முறைமையால் வந்தசெல்வம்*
*இற்றைநாள் பெற்றோம்என்று எண்ணுவது பாழ்மனமே”*[61]

போன்ற பாடல்களின் வாயிலாகச் செல்வ நிலையாமைத் தத்துவம் உணர்த்தப்படுகிறது. பெரும் பேரரசு நடத்திய மன்னனாய் இருந்தாலும் அவனும் அவன் நாடும் மாள்வது உறுதி என அழுகணிச் சித்தர் பாடுகின்றார்.

**“பட்டணத்தை ஆளுகின்ற பஞ்சவாகன இராசாக்கள்**
**விட்டுப் பிரியாமல் வீரியங்கள் தாம்பேசி**
**விட்டுப் பிரிந்தவரே வேறுபடுங் காலம்**
**பட்டணமும் தான் பறிபோய் என் கண்ணம்மா**
**படை மன்னர் மாண்ட தென்ன?”**[62]

இடைக்காடர்,

*''மாடும் மனைகளும் மக்களும் சுற்றமும் வான்பொருளும்*

*வீடும் மணிகளும் வெண் பொன்னமும் செம்பொன்னும்*

*காடுங்கரைகளும் கல்லாம் பணியும் கரிபரியும்*

*தேடும் பலபண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே''[63].*

என்று செல்வ நிலையாமை குறித்து பாடியிருக்கிறர். செல்வம், பதவி போன்றவை நிலையில்லாதவை என்பது குறித்து ஜென் தரும் விளக்கக் கதை பின்வருமாறு:

''கீச்சு என்பவர் ஒரு காலத்தில் பெரிய ஜென் குருவாக மதித்துப் போற்றப்பட்டவர்.

ஜப்பானிலுள்ள கியோட்டோ தீவின் பெரிய பௌத்தக் கோயிலின் தலைமைக் குருவாகவும் இருந்துவந்தார் அவர்.

ஒருமுறை, கியோட்டாவின் ஆளுநர் சந்திக்கச் சென்றார்.

கோயிலை அடைந்ததும் அங்கிருந்த ஒரு சீடரிடம் தம் விசிட்டிங் கார்டைக் கொடுத்துத் தாம் சந்திக்க வந்திருப்பதைக் குருவிடம் தெரிவிக்குமாறு கேட்டுக் கொண்டார்.

சீடரும் உள்ளே சென்றார். குருவிடம் சீட்டைக் கொடுத்தார்.

அதைப் பார்த்த குரு, ''அந்தப் பயலை நான் ஏன் பார்க்க வேண்டும்? எனக்கு ஒரு வேலையும் அவனிடம் இல்லை. போகச் சொல் உடனே''! என்று சீட்டை வீசி எறிந்தார்.

சீடன் சீட்டை எடுத்துக்கொண்டு வந்து, ஆளுநரிடம் மரியாதையாக நடந்ததைச் சொன்னான்.

ஆளுநர் ஒரு கணம் சீட்டைப் பார்த்தார். அவருக்கு விஷயம் விளங்கிவிட்டது!.

அவர் உடனே தம் எழுதுகோலை எடுத்து, சீட்டில் பெயருக்குக் கீழே இருந்த 'கியோட்டோ கவர்னர்' என்பதை அடித்துவிட்டு, இப்போது இதைக் கொண்டு போய்க் கொடு! என்றார்.

சீடன் தயக்கத்துடன் உள்ளே போய், குருவிடம் சீட்டைக் கொடுத்தான்.

குரு வாங்கிப் பார்த்தார்.

'ஓ. கிட்டகாகியா? அவனை வரச்சொல்! நான் அவனைப் பார்க்க வேண்டும்' என்று சொன்னாராம்"![64].

மேற்கூறப்பட்ட கதையின் மூலமாக, மனிதன் சாதாரணமானவன். பதவி, அந்தஸ்து, ஆணவம் எதுவும் நிலையானது அல்ல. ஒரு மனிதனை அடையாளப்படுத்துவது அவன் செய்யும் நற்காரியங்கள்தான். பதவியும் அந்தஸ்தும் வரும் போகும். தான் யார் என்பதைச் செல்வம் நிர்ணயிக்காது என்ற கருத்து விளக்கப்படுகிறது.

செல்வம் நம்மை தேவையற்ற சுழற்சிக்குள் இட்டுச் செல்லும். அதனால் தான் சாதாரண மக்களைப் போல் துறவிகள் செல்வத்தின் மீது நாட்டங் கொள்வதில்லை. இதனை விளக்கும் ஜென் கதை ஒன்று, "சீசெட்சு என்ற ஞானிக்கு ஏராளமான சீடர்கள் இருந்தார்கள். வருகிறவர்களெல்லாம் அவர் ஏற்றுக் கொண்டார்.

அவரது மடாலயத்தில் அவர்களைத் தங்க வைக்க போதிய கட்டிடங்கள் இல்லாமல் சிரமமாக இருந்தது.

உமெசு என்ற வணிகர். இதைப் பற்றி கேள்விப்பட்டார். ஏதாவது உதவி செய்ய வேண்டுமென்று அவருக்குத் தோன்றியது.

தமது நன்கொடை மூலம் சீசெட்சு தேவையான மாணவர் இல்லங்களைக் கட்டிக் கொள்ளட்டும் என்று நூறு பொற்காசுகள் தரமுடிவு செய்தார்.

அதை குருவுக்குத் தெரிவித்தார். குருவும் சம்மதித்தார். உமெசு மடாலயம் சென்றார். பணப்பையைக் குருவின் முன்னால் வைத்து வணங்கினார்.

சுவாமி ஏற்றுக் கொள்ளுங்கள் என்றார்.

சரி எடுத்துக் கொள்கிறேன் என்றார்.

என்ன இவர் இப்படிச் சாதாரணமாகச் சொல்கிறாரே! எவ்வளவு பணம் என்று எண்ணமிட்ட வணிகர் பையில் ஐநூறு பொன் நாணயங்கள் இருக்கின்றன சுவாமி என்றார். அதுதான் முன்பே தெரிவித்து விட்டீர்களே என்றார் குரு சாதாரணமாக.

வணிகருக்கு உள்ளூர வருத்தம் தன்னைப் புகழ்ந்துப் பேசாமல் போய்விட்டாலும் பரவாயில்லை. ஒரு நன்றியாவது தெரிவிக்கக் கூடாதா என்று எண்ணினார்.

என்னதான் நான் பணக்காரன் ஆனாலும் ஐநூறு பொற்காசுகள் அதிகம்தான் சுவாமி என்றார் வணிகர்.

ஏனென்றால் அந்தக் காலத்தில் ஒரு மூன்று பொற்காசுகள் கொண்டு ஓர் ஆண்டு வாழ்ந்துவிட முடியும்.

என்ன! என்னை நன்றி சொல்லச் சொல்கிறீர்களே என்று வெளிப்படையாகவே கேட்டுவிட்டார் சீசெட்சு சொன்னால் தப்பென்ன சுவாமி? அது ஒருவர் கடமையல்லவா என்றார் வணிகர்.

நான் என்னப்பா சொல்ல வேண்டும். பணம் கொடுத்த நீயல்லவா சொல்லவேண்டும். நான் ஏற்றுக் கொண்டதற்கு என்றார் குரு.

வணிகர் அதிர்ந்து விட்டார்”[65].

### 5.2.5 இளமை நிலையாமை

‘‘வாழ்க்கையே கொஞ்ச காலந்தான்

அந்த வாழ்க்கையிலே வாலிபம் கொஞ்ச நேரந்தான்’’.

என்ற திரையிசைப் பாடல் வரிகள் சித்தர் பாடல்களின் எதிரொலி என்றே கூறலாம். புலனிச்சைகளைத் துய்க்கக் கூடிய இளமையும் நில்லாது என்பதை திருமூலரும் கூறுகிறார்.

‘‘***கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே***
***விழக்கண்டும் தேனார் விழியிலா மாந்தர்***
***குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்***
***விழக்கண்டும் தேறார் வியனுல கோரே’’***[66].

கிழக்கே உதித்த சூரியன் மேற்கில் மறைவதைக் கண்டு கண்ணுற்ற மக்கள் இதனைத் தெளியார். இளங்கன்று காளையாய். எருதாய் பின் இறப்பதைக் கண்டும் மக்கள் தெளியாராயினர் என மக்களின் அறியாமையைக் கண்டு வியக்கிறார் திருமூலர்.

“அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது” என்றார் ஔவையார். அவ்வரிய மானுட வாழ்வில் இளமை என்பது சில காலம் மட்டும்தான். இளமை மாறி முதுமை எய்தும் நிலையைப் பட்டினத்தார் பின்வருமாறு கூறுகின்றார்.

*“வன்மையும் மாறி இளமையும் மாறி வன்பல் விழுந்து*
*கண்கள் இருண்டு வயது முதிர்ந்து நரைதிரை வந்து*
*வாத விரோத குரோதம் அடைந்து*
*செங்கையினில் ஓர்தடியும் ஆகியே”*[67].

என்ற பாடல் இளமை நிலையில்லாதது என்பதை வலியுறுத்துகின்றது. இளமையின் வனப்பை அனைவரும் போற்றுவர், பாராட்டுவர். அது உண்மையல்ல. மனிதராய்ப் பிறந்த அனைவருக்கும் இளமையின் கோலம் மறைந்துவிடும்.

*“பொய்யாகப் பாராட்டும் கோலம் - எல்லாம்*
*போகவே வாய்த்திடும் யார்க்கும் போங்காலம்*
*பொய்யாகவே சுத்த காலம் - பாரில்*
*மேவப் புரிந்திடில் என் அனுகூலம்”*[68].

யாக்கை நிலையில்லாதது என்று கூறும் சித்தர், ஜென் இலக்கியங்கள் இளமை மிகவும் கொடியது என்றும் சுட்டிக் காட்டுகின்றனர். இளமை பயமறியாது என்ற கூற்றை மேற்கூறப்பட்ட சித்தர்களின் பாடல்கள் வழி அறியலாம். ‘இளமையில் கல்’ என்ற தத்துவம் வாழ்வின் அர்த்தத்தைக் கொடுக்கிறது. இறப்பு எப்போது வேண்டுமானாலும் வரலாம். எனவே உடலைப் பேணிப் பாதுகாத்து வளர்த்து வந்தாலும் இருக்கும் நிலையிலிருந்தே இல்லாமல் போய்விடுவதாகும். சேர்த்து வைத்த பொன், பொருள், இளமை யாவும் உடன் வருவதில்லை. அழிந்துபோகக் கூடியவையே. இளமை இருக்கிறது என்று அக்கிரமங்கள் செய்துகொண்டு

வாழ்கின்ற போது வாழ்வின் எதார்த்தத்தை இழக்கின்றான். எனவே உலகமே நிலையில்லாதது என்ற தத்துவத்தை உணர்ந்து செயல்படுவானேயானால் அர்த்தமுள்ள வாழ்வும் அதே நிலையில் இறைப்பற்றைக் கொண்டு வாழும் ஆன்மீக வாழ்வும் சிறந்தது என்ற கருத்து புலப்படுகிறது.

## 5.3 தியானம்

ஏதேனும் ஓர் உறுப்பில் மனத்தை ஒருமுகப்படுத்துவது தாரணை; குறிப்பிட்ட உறுப்பொன்றில் மட்டுமல்லாமல் முழுமையிலும் மனத்தை ஒருமுகப்படுத்தி நிறுத்துவது தியானம். ‘‘தியானம் என்பது தாரணையிலிருந்து வேறுபட்டதன்று. தாரணையின் முதிர்ந்த நிலையைத் தியானம் எனலாம். தியானம் என்பது உயர்ந்து சிறந்து விரிந்த நிலையாகக் கருதப்படுகிறது. தியான நிலையில் உணர்வுகள் ஆன்மீக நிலையில் இருக்கும். தூய அறிவுச் சுடராய் விளங்கும். புலன்களால் காணவொண்ணாத முழுமுதற் பொருளை பூரணத்தைத் தியான நிலை உணர்த்தும்’’ எனத் தியானம் குறித்த விளக்கத்தினைச் சித்தர் தத்துவம் என்னும் நூலில் க. நாராயணன் குறிப்பிடுகின்றார்.

சகுண தியானம், நிர்குண தியானம் எனத் தியானத்தை இருநிலைப் படுத்துகின்றனர். இறைவனின் திருவுருவத்தைக் கண்டு மனம் இன்புறும் நிலை சகுண தியான நிலை ஆகிறது. நிர்குண தியானத்தில் எல்லாவற்றையும் உள்ளடக்கிய முழுமையும் இன்ப ஊற்றாக இருக்கும். எங்கும் இன்பம் எதிலும் இன்பம் என்ற நிலைக்கு நிர்குண தியானம் கொண்டு செல்லும் நிர்குண தியான நிலையில் இறை வேறுபாடுகளும் மத வேறுபாடுகளும் மறைந்து எல்லாம் ஒன்றெனக் காட்சி தரும். நிர்குண தியான நிலைக்குச் சென்றவர்கள் சமய எல்லைகளைக் கடந்தவர்கள். ஆத்திகமும் நாத்திகமும் ஒன்றே. எல்லாவற்றையும்

பூரணத்தின் கூறுகளாகவே உணர்வர். வேற்றுமை பாராட்டமாட்டார்கள். தியானத்தில் அனைத்தும் ஒன்றே என்ற நிலை ஏற்படுகிறது. எனவே மனித வாழ்வின் பூரணத்துவம் தியானத்தில் உருவாகிறது என்று கூறலாம்.

தியானம் என்பது நமது வாழ்க்கையில் ஓர் அம்சம் எனக் கூறப்படுகிறது. தியானம் என்பது முற்றும் துறப்பது என்ற பொருள் இல்லை. அனைத்தும் ஒன்று என்ற வேறுபாடற்ற நிலையை உருவாக்குவதாகும். மனிதன் தனது ஐம்புலன்களையும் ஒருசேர அடக்கும் யோகக்கலை என்றே விளக்கப்படுகிறது. தியானம் மேற்கொள்ளும் போது உலகத்தில் ஒன்றுமில்லை, அதாவது எல்லாம் இயல்பானதுதான். நிலைத்தது என்பது எதுவும் இல்லை என்ற உண்மை புலப்படுத்துகின்றது.

தியான அனுபவம் பற்றிக் கூறும் ஓஷோ, ‘‘தியானம் என்பது முடிவை இறப்பு உணர்வைக் கொடுத்து, பிறகு பேரானந்தத்தைக் கொடுக்கும்’’[69] என்று கூறுகிறார்.

‘‘ஒருவன் கானகத்திற்குச் சென்று தவம் செய்ய நினைத்தான். அதற்காகக் குடும்பத்தை விட்டு விலகி வந்தான். சந்நியாசியாகச் சுற்றித் திரிந்த அவன் மனதில் எப்படித் தவம் செய்வது? யாரை நோக்கித் தவம் செய்வது? எத்தனை காலம் தவம் செய்வது? என்று ஏராளமான கேள்விகள் அணிவகுத்து நின்றன. மந்திரங்களை வாய்விட்டு ஓதினால் பலன் விரைவில் கிட்டுமா அல்லது மனதுக்குள்தான் ஓத வேண்டுமா? யாரேனும் சீடர்களை உதவிக்கு வைத்துக்கொள்ள வேண்டுமா? அல்லது யாருமற்ற வனாந்திரத்துக்குச் செல்ல

வேண்டுமா? என்றெல்லாம் அவன் சிந்தித்துக் கொண்டிருந்த நேரம் ஒரு சித்தரைச் சந்தித்தான். அவர் பெயர் இடைக்காடர்.

தவம் செய்து முக்தி அடைய விரும்புகிறேன். எனக்கு வழிகாட்டியாக இருப்பீர்களா? என்று அவன் கேட்டான் இடைக்காட்டுச் சித்தர் அதற்கு பதிலளிக்கும் விதமாக பாடிய பாடல்,

*"மனமென்னும் மாடு அடங்கில் தாண்டவக் கோனே*

*முத்தி வாய்த்தென்று எண்ணடா தாண்டவக் கோனே"!.*

மனம் என்பது மாடு போன்று கண்டபடி அலையக் கூடியது. அந்த மனதை அடக்குவது அத்தனை எளிதான செயல்ல. மனதை அடக்கவே முடியாது. ஆனால் மனதின் அத்தனை சிந்தனைகளையும் ஒருசேர ஒரே திசை நோக்கித் திருப்ப முடியும். அடங்காமல் திரியும் மனம் என்னும் மாட்டை அடக்கிவிட்டாலே முக்தி கிடைத்துவிடும்"[70]. மனத்தை அடக்கும் நிலை 'தியானம்' என்று கூறப்படுகிறது.

"உறக்கத்திலும் ஒரு விழிப்பு நிலையே தியானம். இங்குத் தியானம் என்பது ஓர்மைப் பயிற்சி என்று பொருள் கூறப்படுகிறது. தியானம் செய்வதால் ஒரு நேரத்தில் ஒன்றின் மீது மட்டும் கவனம் செலுத்தும் திறனும், உட்கிரகிக்கும் மற்றும் கவன ஈர்ப்புத் திறனும் அதிகரிக்கிறது. தியானத்தின் போது மனதுக்கு ஒரு அகமுக திசை கொடுக்கப்படுகிறது"[71].

நன்கு அறிந்த ஒரு பொருளை மீண்டும் நினைவில் பதித்துக் கொள்வது தியானம். அலைபாயும் மனத்தை ஒருநிலைப்படுத்துவது தியானம். மனம்

பக்குவநிலை அடையும்போதுதான் தியானம். மேலோங்கி நிற்கும் என்பது போன்ற பல்வேறான கருத்துக்கள் நிலவுகின்றன.

### 5.3.1 தியானம் -பயன்பாடு

தியானத்தின் மூலம் அளவற்ற அறிவு, அளவற்ற வலிமை, அளவற்ற அன்பு, அளவற்ற தூய்மை ஆகியன பெறப்படுகின்றன.

தியானம் பற்றி கருத்துக்கூறும் ஓஷோ,

"தியானம் என்பது உங்களுடைய எண்ணங்களைப் படிப்படியாகக் குறைத்து அவைகளின் இடைவெளியை அதாவது ஒரு எண்ணத்துக்கும் அடுத்த எண்ணத்துக்கும் உள்ள இடைவெளியை அதிகரித்துக் கொண்டே சென்று ஒரு கட்டத்தில், முழு வெறுமையை அடைதல்தான். அப்பொழுது நீங்கள் சேகரித்த எண்ணங்கள் அல்லது விஷய ஞானங்கள் அனைத்தும் அதன் கருநிலையில் அப்படியே உயிரற்று இருக்கும்.

இந்த மனமற்ற நிலையில் உங்கள் செயல்கள் அனைத்தும், உங்களுடைய உயிர்த்தன்மையை நேரடியாக உள்ளுணர்வின் சட்டப்படியே நடக்கும். மனம், இப்போது உங்களுக்கு வேலைக்காரன் தான். நீங்கள் இப்போது கணத்துக்குக் கணம் செயல்படுவீர்கள். உங்கள் நிகழ்காலச் செயல்கள், இறந்த காலத்திலிருந்தோ அல்லது எதிர்காலத்திலிருந்தோ வருபவையாக இருக்காது"[72].

தியானம், இரண்டு வகைப்படும். ஒன்று உலகியல் சார்ந்தது. மற்றொன்று ஆன்மீகமானது. எவ்வகைத் தியானத்துக்கும் அவசியப்படுவது அமைதியான சூழ்நிலையும் தூய மனமும்தான்.

“தியானம் அகந்தையை அழிக்கும். அறியாமையை அகற்றும். இருண்டு கிடந்த பிரதேசத்தில் ஒளியைக் கொண்டு வரும். தியானம் ஐயங்களைப் போக்கித் தெளிவைத் தரும். தியானத்தில் கிடைக்கிறது நல்லமைதி. மேலும் தியானம் இறைவனை அறியும் முயற்சியாய்த் தொடங்கித் தன்னை அறிவதில் முடிகிறது”[73].

சிவனைச் சிந்தையில் வைப்பது தான் தியானம் என்கிறார் திருமூலர். தியானத்தின் மூலம் கண்ணாடியில் உருவத்தைக் காண்பது போல் உங்கள் உள்ளத்தில் இறைவனை எளிதாய்க் கண்டுவிடலாம் என்கிறார் அவர்.

தியானத்தில் ஆழ்ந்திருப்பவர்க்குப் பத்துவித ஒலிகள் நுண்மையாய் விளங்கும். மணி, கடல், யானை, புல்லாங்குழல், மேகம், வண்டு, தும்பி, சங்கு பேரிகை, யாழ் என்கின்ற பத்து ஒலிகள். அவை,

“***பள்ளி அறையிற் பகலே இருளில்லை***
***கொள்ளி அறையிற் கொளுந்தாமற் காக்கலாம்***
***ஒள்ளி தறியிலோ ரோசனை நீளிது***
***வெள்ளி அறையில் விடிவில்லை தானே***”[74].

என்று திருமூலர் யோகியர்க்கும், ஞானியர்க்கும் வாய்க்கிற அனுபவத்தை நீங்கள் தியானத்தின் மூலம் பெற முடியும் என்கிறார்.

திருமூலரைப் போலவே சிவவாக்கியரும் தியானம் பற்றி நேர்த்தியாகச் சொல்லியிருக்கிறார். தன்னில் சிவனையும், சிவனில் தன்னையும் கண்டவர் சிவவாக்கியர்.

நிகழ்கால வாழ்வை வலியுறுத்தும் ஜென்னில் நமது அன்றாட செயற்பாடுகளே தியானம் எனப்படுகின்றது. இதனை ‘தானும் சிரித்து மற்றவர்களையும் சிரிக்க வைத்து, அதையே ஒரு தியானம் போலச் செய்து வந்தார் அவர்'' என ஹோய்பீய் எனும் ஜென் துறவியைப் பற்றிய குறிப்பு இடம் பெறுகிறது.

## 5.3.2 மெய்ஞானம் அல்லது விழிப்புணர்வு

தியானத்தின் மூலம் பெறப்படுவது மெய்ஞானம். மெய்ஞானம் என்பது எடுத்துச் சொல்லி விளங்க வைத்தலில் இல்லை என்கிறது. மெய்ஞானம் குறித்து ஜென் தரும் விளக்கக் கதை கீழ்வருமாறு:

ஒரு சீடனுக்குச் சலிப்பு வந்தது.

‘‘குருவே மூன்று வருட காலமாக உங்களுடன் வாழ்ந்து வருகிறேன். நீங்கள் எனக்கு ஒன்றுமே உபதேசம் செய்யவில்லையே. எப்போது ஆரம்பிக்கப் போகிறீர்கள்?'' என்று கேட்டான் ஆதங்கத்துடன்.

குருநாதர் சிரித்தார்.

‘‘நீ என்னப்பா சொல்கிறாய்? நீ வந்த நாள் முதலாக இரவும் பகலும் உனக்கு உபதேசித்துக் கொண்டேதான் இருக்கிறேன். நீ கவனிக்கவில்லையா?

காலையில் எழுந்ததும் எனக்குத் தேநீர் கொண்டு வந்து கொடுக்கிறாய். நான் உனக்கு நன்றி சொன்னேன் அல்லவா? நீ என்னை வணங்கும் போதெல்லாம் உன் தலையைத் தொட்டு ஆசீர்வதித்தேன் அல்லவா?

நான் காலைப்பொழுதில் உலாவப் போகும்போது என்னுடன் வர உனக்கு அனுமதி தந்தேனல்லவா? நீ நான் நடப்பதைக் கவனித்தாய் அல்லவா? என் கால்கள் தரையைத் தொடுவதே இல்லை என்பதைக்கூட நீ பார்த்திருக்க முடியுமே.

மூன்று வருடங்களாக நீ என்னதான் கவனித்துக் கற்றுக் கொண்டாய்? நான் தூங்கும் போது நீ என் அறைக்குள் வரலாம் என்று சொல்லியிருந்தேன் அல்லவா? அப்படி வந்தாயா? புத்தர் எப்படி ஓய்வெடுத்துக் கொள்வார். ஒரு குழந்தையைப் போல என்பதைக் கவனித்தாயா?

உனக்கு வேறு என்னதான் வேண்டும் என்கிறாய்? வார்த்தைகளுக்காகவா காத்திருக்கிறாய்? அப்படியானால் நீ ஓர் ஆசிரியரிடம் போவதே நல்லது'' என்றார் குரு''[75].

மேற்கூறப்பட்ட கதையின் மூலமாக, மெய்ஞானம் என்பது உணர்ந்து பெறுவது. ஞானம் பெறுவது வார்த்தைகளால் சொல்லி பெற வைப்பது அல்ல. அனுபவத்தால் ஏற்படுத்திக் கொள்வது. தியானம் என்பதும் அமைதி நிலையில் உற்று நோக்கிப் பின்பற்றுவது என்பதும் மெய்ஞானத்திற்கான படிநிலைகளாகக் கருதப்படுகின்றன.

உபதேசித்துக் கிடைப்பது அல்ல ஞானம். ஒவ்வொரு மனிதனின் சுய விழிப்புணர்ச்சிதான் ஞானம் என்று விளக்கும் ஜென் கதை பின்வருமாறு:

''ஞான தாகத்தோடு நூற்றுக்கணக்கான சீடர்கள் அமர்ந்திருந்தார்கள்.

குரு வந்தார். எல்லாரையும் பார்த்தார்.

சீடர்கள் ஆவலோடு குருவைப் பார்த்தார்கள்.

“ஹா!ஹா! என்ன இதெல்லாம்? போங்கள். போய் டீ சாப்பிடுங்கள்!” என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

அவ்வளவுதான்.

அதுதான் ஞானோபதேசம்!

நம்பமுடியாத அளவுக்கு எளிமையானது ஜென்

ஹா!ஹா! என்று சிரிப்பதே மந்திரம்!

என்ன இதெல்லாம்? என்று கேட்பதன் மூலம் உபதேசம் ஞானம் எல்லாம் முட்டாள்தனம் என்கிறார் குரு.

‘தேநீர்’ விழிப்புணர்ச்சி! அவ்வளவுதான்”[76].

வெறும் உபதேசங்களுக்குள் கிடைப்பதல்ல ஞானம். அனுபவ ரீதியாக பெறப்படுவதுதான் ஞானம் என்று விளக்கப்படுகிறது.

தொடக்கக் காலத்தில் கல்வி என்பது ‘குருகுலக்’ கல்வி அமைப்பாய் இருந்தது. குருவின் இடம் தேடிச் சென்று ஞானம் பெறுதல். அவருக்குத் தேவையான பணிவிடைகளைச் செய்துகொடுத்து கல்வி கற்று வருதல்.

காலப்போக்கில் குருதட்சணை பெறப்பட்டு கல்வி கற்றுக் கொடுக்கப்பட்டது. குரு-மாணவன் என்ற நிலை காணப்பட்டது.

பக்தி இயக்க காலத்தில் மெஞ்ஞானமே முதன்மைக் கருதப்பட்டது. இந்த நிலையில் குரு-சீடர் என்ற உறவு மேம்பட்டது.

இன்றைய நிலையில் கல்வி, ஞானம் என்பது பொதுவான இடத்திற்குக் கல்வி கற்பவனும் கற்பிப்பவனும் வருதல். இங்கு கல்வி விளங்கச் சொல்லி கற்றுக்

கொடுப்பது. அனைவரது ஞானத்தையும் புடம்போட்டுத் தெளிவுபெறச் செய்வது. இத்தகு பணியில் குரு, ஆசிரியர் என்ற நிலையில் எண்ணப்படுகிறார். கற்பித்தல் பணி சிறக்கிறது.

ஞானம் அடைந்த குருவிடம் ஞானம் பெற விழையும் சீடன் பாடம் சொல்லி விளங்க வைத்தல் மூலம் மெஞ்ஞானம் பெற்றிடலாம் என்று எண்ணுவது அறிவீனமாகக் கொள்ளப்படுகிறது. குருவின் செயல்பாடுகள் மூலம் உணர்ந்து பெறுதலே ஞானம். இங்கு மாணவனின் திறமைக்கேற்ப அவனை உருவாக்குபவராகக் குரு செயல்படுகின்றார்.

‘‘மெய்ஞானம் அல்லது விழிப்புணர்வு என்பது ஒவ்வொரு நிமிடமும் ஜென்னில் இருப்பது. இதற்காக சீடர்கள் குருவுடன் குறைந்தபட்சம் பத்து ஆண்டுகளாவது தங்க வேண்டும். விழிப்புணர்வு பெற்ற பின்னர் குருநிலையை அடைவது வழக்கம். ஆனால் நான்-இன் குருவான பிறகும் ஒவ்வொரு கணமும் ஜென்னில் வாழமுடியாமற் போனதால் மீண்டும் ஆறு ஆண்டுகள் பயிற்சி மேற்கொண்டார்’’[77] என்பர்.

விழிப்புணர்வை பெற்ற பிறகு வாழ்க்கையின் செயற்பாடுகள் மாறாவிட்டாலும், பார்வை மாறிவிட்டதாக ஜென் குரு ஒருவர்கூறுகிறர். இதனை,

‘‘முதலில் நான் ஒரு பிரக்ஞையும் இல்லாமல் மரம் வெட்டினேன். என்னைச் சுற்றி என்ன இருக்கிறது என்பதை நான் ஒரு நாளும் கவனித்ததில்லை. இப்போதும் அதே வேலையைச் செய்தாலும் நான் அதே ஆள் அல்ல. என் பார்வை பழைய பார்வை அல்ல. என் இதயத் துடிப்பும்கூட மாறிவிட்டது. எல்லாவற்றிலும் ஓர் ஒத்திசைவு இருப்பதை நான் உணர்கிறேன்.

‘நான் தண்ணீர் எடுப்பதும் அதே கிணற்றிலிருந்துதான். ஆனால், எனது உள்ளம் முற்றிலும் மாறிவிட்டது. நான் புதிய மனிதன். நான் புதுப்பிறவி எடுத்துள்ளேன். நான் எதையும் இப்போது ஆழமாகப் பார்க்க முடியும். ஒவ்வொரு கூழாங்கல்லும் எனக்கு ஒரு வைரமாய்த் தோன்றுகிறது. ஒவ்வொரு பறவையின் பாடலும் ஆண்டவனீன அழைப்பு போலத் தோன்றுகிறது.

ஒரு மலர் பூக்கும்போது, கடவுளே எனக்காகப் பூத்தது போல் தோன்றுகிறது. மக்களின் கண்களைப் பார்க்கும்போது எனக்குக் கடவுளின் கண்களைப் பார்ப்பது போலத் தோன்றுகிறது. வெளித்தோற்றத்தில் நான் அதே வேலைகளைச் செய்து வந்தாலும், உலகம் அதே உலகமுமல்ல. நானும் பழைய ஆள் அல்ல’ என்றார் குரு”[78].

ஒருவர் விழிப்புணர்வு பெறும்போது அவர் பார்வைமாற, உலகம் முற்றிலுமாக மாறிவிடுகிறது. செய்யும் செயல்களுக்குப் புதிய அர்த்தமும், புதிய கனமும் ஏற்பட்டு விடுகிறது'' என்ற ஜென் குருவின் கூற்று உணர்த்துகிறது.

குருவைத் தேடி ஞானம் பெறச் செல்லுதல் என்ற தன்மையில் ஜென் இலக்கியங்கள் மெஞ்ஞானத் தத்துவத்தினை வலியுறுத்துகின்றன. ஞானம் பெற விழைபவர்களுக்கு எத்தகு விளக்கம் தேவைப்படுகிறதோ அதற்குத் தகுந்தாற் போல் குருவின் செயல்பாடுகள் அமைகின்றன. இத்தகு தன்மையில் அமைந்த ஜென் கதைதான் மேற்கூறப்பட்டிருக்கிறது.

### 5.3.3 ஒன்றில் ஒடுங்கும் எல்லாம்

"ஜுஹி என்ற துறவி தனிமை நாடி ஒரு மலைக்குப் போனார்.

அங்கே ஓர் எளிய குடிசை கட்டிக்கொண்டு அமைதியாக வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் ஒரு பெண் துறவி அவரைக் காண வந்திருந்தாள். அவள் தலையில் ஒரு வைக்கோல் தொப்பி அணிந்திருந்தாள்.

அப்போது துறவி குடிசை வாசலில் அமர்ந்திருந்தார். பெண் துறவி நேராக அவர் முன்னே வராமல் அந்தக் குடிசையை மூன்று முறை வலம் வந்தாள். பிறகுதான் அவர் முன்னால் வந்து நின்று வணங்கினாள்.

‘ஒரு வார்த்தை சொல்லுங்கள். சொன்னால் என் தொப்பியைத் தூக்கி உங்களுக்கு மரியாதை செய்வேன்!’ என்றாள் அவள்.

என்ன சொல்வது என்று துறவிக்குத் தெரியவில்லை. ஒரு சொல் என்றால், பெரிதாகச் சொல்ல வேண்டுமே! என்ன சொல்வது? இவள் நம்மை மாட்டி வைத்துவிட்டாளே என்று திகைத்தார்

அவள் என்ன கேட்டாள் என்று வெகுநேரம் புலம்பினார்.

மலையை விட்டுக் கீழிறங்கி சமநிலத்திற்கு வந்து பயணத்தைத் தொடர்ந்தார் துறவி.

ஓரிடத்தில் தங்கியிருக்கும் போது ஒரு குரு எதிர்பட்டார். ஏன் கவலையுடன் தென்படுகிறாய் என்று குரு கேட்டவுடன் துறவி நடந்ததை எலலாம் விரிவாக எடுத்துரைத்தார்.

‘உனக்குச் சரியான பதில் வேண்டுமா?’ என்று கேட்டார் குரு.

‘ஆம் சுவாமி! என்று ஆவலோடு சொன்னார் துறவி.

‘குரு தம் ஆள்காட்டி விரலை உயர்த்திக் காட்டினார்.

‘எல்லா உண்மைகளும் இதிலிருந்துதான் எல்லாம் ஒன்றில் அடக்கம் என்றார்.

‘ஒன்று - பலவாய், ஓராயிரம், ஒரு லட்சம், கோடி கோடியாய் பிரியும் பெருகும். ஆனால் எல்லாமே ஒன்றில் ஒன்றிவிடும் என்றார் குரு.

துறவி அந்த விரலை உற்றுப் பார்த்தார். அந்த விரலில் அந்தப் பெண் துறவியின் உருவம் தெரிந்தது. அவள் தன் தொப்பியை உயர்த்தி மரியாதை செய்தாள்? துறவிக்கு ஞானம் பிறந்தது அந்தக் கணத்தில்[79].

தியானம் என்பது ஒரு வகையில் அமைதி நிலையைக் குறிக்கிறது. அமைதி என்பது மௌனமாய் இருத்தல். மௌனம் நிலைத்தது அல்ல. எதுவும் இல்லாத நிலையில்தான் ‘தன்னை அறிதல்’ தோன்றுகிறது. அமைதியாக இருப்பதன் பயன்பாட்டினை அதன் விளக்கத்தோடு அமைந்த ஜென் கதை ஒன்றனுக்கு ஓஷோ தரும் விளக்கம் பின்வருமாறு:

“போதி தர்மரிடம் அவரது சீடர்களில் ஒருவர் வந்தார். போதி தர்மர் அவரிடம், ‘உள்ளீடற்று வெறுமையாகிவிடு! மௌனமாகிவிடு! அப்புறம் என்னிடம் வா! என்று சொல்லி அனுப்பினார். சீடர் புறப்பட்டுச் சென்றார்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு திரும்பி வந்தார்.

‘குருவே நீங்கள் சொன்னபடி ஆகிவிட்டேன். வெறுமையும் அமைதியும் அடைந்துவிட்டேன்’ என்றார்.

‘அப்படியா? சரி போய் அந்த வெறுமையையும் அமைதியையும் தூக்கி எறிந்துவிட்டு வா!’ என்றார். இக்கதைக்கு ஓஷோ தரும் விளக்கமாவது,

“நீங்கள் ஒன்றை உணர்ந்தால் அது பிளவுபட்டே இருக்கும். சீடன் உணர்வது பரிபூரண அமைதியன்று. சுற்றுச் சூழல் அமைதியாக இருக்கக்

கூடும். அப்போதும்கூட ஒருவர் அமைதியாக இருக்கிறார் என்று சொல்லிவிட முடியாது. யார்தான் அதை உணரமுடியும்?''.

''நீங்கள் உண்மையில் மௌனமாக இருக்கும் போதும் நீங்கள் உண்மையில் அமைதியாக இருப்பதில்லை. ஏனென்றால் அமைதி என்பது ஓசைகளின் எதிர்நிலை. ஓசையே இல்லாதபோது அமைதி என்பது எப்படி இருக்க முடியும்? ஓசை மறையும்போதுதான் அதன் எதிர்நிலையாகிய அமைதியும் மறையும்.

நான் அமைதியாக, மௌனமாக இருக்கிறேன் என்று உங்களால் சொல்ல முடியாது. சொன்னால் உடனே அதை இழந்துவிடுங்கள். அதனால் தான் 'அறிந்தேன்' என்று சொல்கிறவன் அறியமாட்டான் என்று உபநிடதம் சொல்கிறது. 'ஒருவன் அறிஞனாகும் போது அவன் அறியாமையை அறிகிறான்' என்று சாக்ரடீசும் சொன்னர் என்று விளக்கம் அளிக்கிறார்.

'பக்தி, யோகம், தவம், மந்திரம், யாகம், தியானம் என்று பல்வேறு வழிகளில் இறைவனை அடைய முயற்சி செய்கிறார்கள் மக்கள். பிறவாநிலை வேண்டும், சொர்க்கம் அடைய வேண்டும். சித்தி அடைய வேண்டும் என்று பல்வேறு கோரிக்கைகளை இறைவனை நோக்கி இவர்கள் வைக்கிறார்கள். ஆனால் உண்மையில் உயர்நிலை அடைந்தவர்களுக்கு மோட்சமும் முத்தியும் ஒரு பொருட்டே இல்லை என்பது சித்தர் வாக்கு''[80].

*''ஆனந்தம் பொங்கி அறிவோடு இருப்பார்க்கு*
*ஞானந்தான் ஏதுக்கடி? குதம்பாய்*
*ஞானந்தான் ஏதுக்கடி''!*[81]

இந்த உலக வாழ்க்கையானது இன்பம் துன்பம் இரண்டும் நிறைந்தது. இந்த இரண்டையும் ஒன்றாக ஏற்றுக்கொண்டு அதனை மனநிறைவுடன் ஒருவன் ஏற்று வாழத் தொடங்கிவிட்டான் என்றால் அவன் பூலோகத்திலே சொர்க்கத்தில் இருப்பத்தாகத்தான் பொருள். இதைவிட இன்பத்தைத் தேடி அலையாமல் இன்பமுடன் வாழ்வதே இறை ஞானம் என்பது குதம்பைச் சித்தர் தரும் விளக்கம்.

மனிதனைத் தவிர மற்ற அனைத்தும் ஞானநிலையில்தான் இருக்கின்றன. ஏனெனில் அவைகளுக்கு மனம் என்ற ஒன்று இல்லை. எந்த மனம் ஞானத்தை அடையத் தடங்கலாக இருக்கிறதோ அதே மனம்தான் அதை அறிந்து கொள்ளவும் தேவையாக இருக்கிறது என்று ஞானம் அடைவதற்கான வழியை ஓஷோ விளக்குகின்றார்.

### 5.3.4 உண்மையான மாற்றம்

“ரயோக்கான்’ (Ryokhan) என்பவர், ஜென்னைக் கற்றுக்கொள்ள தன் வாழ்நாளை எல்லாம் செலவிட்டார். ஒரு நாள் தன்னுடைய மருமகன் உறவினர்களின் பேச்சைக் கேட்காமல் ஒரு விலை மாதுவிற்காக வெகுவாகப் பணத்தைச் செலவழிப்பதாகக் கேள்விப்பட்டார். இவன் ரயோக்கானின் சொத்துக்களைப் பராமரித்து வந்தான். இதைப் போல ஊதாரித்தனமாகச் செலவு செய்வதால் அவருடைய சொத்துக்கள் அழியக்கூடிய அபாயத்தில் இருப்பதாக அவருடைய சொந்தக்காரர்கள் அவரிடம் கூறி அதைத் தடுக்கும்படி வற்புறுத்தினார்கள்.

ரயோக்கான் தன்னுடைய அந்த மருமகனைச் சந்திக்க நீண்ட தூரம் பிரயாணம் செய்ய வேண்டும். அவர் அவனைப் பார்த்தே சுமார் பத்து வருடம்

ஆகலாம். நெடுநாட்களுக்குப் பிறகு வந்த தன் மாமாவை அவன் அன்புடன் உபசரித்து அன்று இரவு தன்னுடன் தங்கும்படி வேண்டினான்.

அன்று இரவு முழுவதும் ரயோக்கான் தொடர்ந்து தியானத்திலேயே இருந்தார். காலையில் புறப்படுவதற்கு முன்பு தன் மருமகனை அழைத்து, எனக்கு வரவர வயதாகிக் கொண்டே போகிறது. என்னுடைய கைகளில் நடுக்கம் ஏற்படுகிறது. என்னுடைய கால் செருப்பைக் கட்டிவிட முடியுமா என்று கேட்டார்.

அவனும் அதற்கு அன்புடன் சம்மதித்து விட்டான். ‘‘ரயோக்கான் மிக்க நன்றி! ஒன்றைப் புரிந்துகொள். ஒவ்வொரு நாளும் மனிதன் வயோதிகத்தை நோக்கிச் செலகிறான். அவனுடைய உடல் தளர்ந்து கொண்டே போகிறது. உன் உடலை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்’’ என்று அறிவுரை கூறுகிறார். அவ்வளவுதான். வேறு ஒன்றும் கூறவில்லை. அந்த விலைமாதுவைப் பற்றியோ அல்லது உறவினர்கள் சொன்னதையோ அவர் எதுவும் கூறவில்லை. ஆனால் அன்று காலையிலிருந்து அந்த இளைஞன் முற்றிலும் மாறிவிட்டான்”[82].

மேற்கூறப்பட்ட கதை, உடல் நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை என உலகம் நிலையில்லாதது என்ற தத்துவத்தினை முன்வைக்கின்றது. இது தியானத்தினால் வசப்பட்டது.

மேலும் தியானத்தால் அதாவது யோக நிலையில் உடல் அழியாத் தன்மையைப் பெற முடியாது. பிறந்து வளர்ந்து, இளமை தாண்டி மூப்பு எய்தும் போதும் தியானத்தின் மூலம் வரப்போகும் எமனைக் கடந்து வாழ்வில் நிலைக்க முடியாது என்ற கருத்தினையும் புலப்படுத்துகின்றது.

“நீங்கள் ஒரு புயலின் மையநிலையில் தியானம் செய்யுங்கள். புயல், ஒரு சக்கரம் சுழலுவது போல், சுழன்று சுழன்று அடிக்கும்பொழுது, அதன் மைய நிலையில் எந்த சலனமும் இருக்காது”[83] என்று தியானம் பற்றி ஓஷோ கூறுகிறார்.

மனிதன், தியானத்தின் மூலமாக அறியாமையை அகற்றி, பொறுமைக்குணம் பெறப்பட்டு, தன்னை அறிதல் மூலம் இறைவன் மலரடியைச் சேர்தல் எனும் பயன்பாடடைகிறான் எனும் கருத்தினை அறிவுறுத்துகின்றது.

### 5.3.5 தியான முறை

சித்தர்களுக்கென்று பிரத்யேமான தியான முறைகள் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் மூலாதாரத்தில் தொடங்கி ஆக்ஞை எனும் புருவ மத்தி வரை குண்டலினியை எழுப்புவதன் மூலம் ஒருவன் முக்தி பெறுகிறான் என நம்பப்படுகிறது. இதனை ஆறு ஆதாரச் சக்கரங்களாகப் பிரிக்கின்றனர். (பின்னிணைப்பில் காண்க)

**“நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி**
**உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம்**
**பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருப்பிடம்”[84]**

எனும் திருமூலர் பாடல் தியானத்தின் இறுதிநிலையான புருவ மத்தியே பரமன் வாழும் இடம் என்று கூறுகின்றது. பெரும்பாலும் சித்தர்கள் குருகுலம் போன்றோ பள்ளிகள் போன்றோ எவ்வித நிறுவனத்தையும் அமைத்து தியான முறைகளையும் அதன் பலன்களையும் கற்றுக் கொடுத்ததாகத் தெரியவில்லை.

ஆனால் ஜென் தியானத்தைப் பொறுத்தவரை, அமரும் முறையை ஜாஜென் என்ற பெயரில் அழைப்பர். ஜென்னின் இரு வகைகளான சோட்டோ மற்றும்

ரின்சாய் என்பதில் சோட்டோ வகையில் தியானம் செய்ய அமரும் முறையே ஜாஜென் எனப்படுகிறது.

இம்முறையில், ‘‘நன்றாகவும், வசதியாகவும் அரை அல்லது முழுத் தாமாரை வடிவில் அமர்ந்து தியானம் செய்தல் நலம். இதனை தரையில் ஏதேனும் ஒரு விரிப்பின் மீதோ அல்லது நாற்காலியில் அமர்ந்து கொண்டோ செய்வதே நன்று. அவ்வாறு அமரும் போது கைகளை வயிற்றோடு ஒட்டி மடியில் ஜென் முத்திரையோடு இருத்திக் கொள்ள வேண்டும். தரைவிரிப்பில் சிறு இருக்கையோ அல்லது தலையணையோ வைத்து முதுகுத்தண்டை நேராய் இருத்தி நாடியை உள்ளிழுத்து நிமிர்ந்து அமர வேண்டும். அப்போது இரு தோள்களையும் தளர்ந்த நிலையில் வைத்துக் கொள்ள வேண்டும். நம் உடலானது இலகுவாகவும் அதே சமயம் உறுதியாகவும் நிமிர்ந்தும் இருக்க வேண்டும். உடலை எத்திசையிலும் சாய்க்காமல் நிலையாகவும் பணிவுடனும் வைத்துக் கொள்ள வேண்டும்[85].

(Take a good, comfortabl posture – lotus posture, half or full, in an easy seatedness or on a chair, preferable with some back rest for the lower back, with feet firmly and squarely planted on the floor. Keep your back straight, wit lower back to bit curved forwards. Let your head be held up, with chin a bit in. Hands ancl palms in the usual zen mudra, resting close to the lower belly; however, the hands need not be in the mudra form, for some it can be a strain; in that case, jsut hold the hnads, hands resting on the lap. Let the shoulders be relaxed and held up, and the chest open. Hold your body loose and relaxed but steady, straight up and

firm. Do not lead to one side or other. Let your whole body rest on the cusion and the floor; resting and, at same time body held up with dignity and respect.)

### 5.3.6 தியானப் பயிற்சி

குரு-சீடர் போதனை முறையில், சீடர்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்த, வினாக்களும், விடைகளும் கேட்கப்படுவதுண்டு. இது வார்த்தைகள் பிரயோகத்திலோ அல்லது மௌனமாகவோ நடைபெறம். இதனைப் பற்றிக் கூறுகையில்,

வார்த்தைகளால் போதித்தல் என்பது கீழ்க்கண்ட வகையில் வரிசைப்படுத்தப்படுகின்றது.

1. சூத்திரங்களின்று மேற்கோள் கொடுத்தல்
2. நேரடியான பதில்கள். அவை
    - 2.1 தினசரி நடவடிக்கைகள்
    - 2.2 சீடர்களின் குறைபாடுகள்
    - 2.3 பலமான
    - 2.4 எடுத்துக்காட்டுகள்
    - 2.5 முரண்பாடு போலத் தோன்றும் மெய்யுரைகள்.
3. வினாக்கள்
4. மாற்றமடைய தீர்வுகள்
5. நிலையில்லா கட்டுப்பாடுகள்
6. இடையூறுகள்

7. தொடர்பற்ற விடைகள்

   7.1 மறைபொருள்

   7.2 மறுப்புக் கொள்கை

   7.3 கேள்விகள்

   7.4 வரைமுறைகள் அல்லது ஆணைகள்

   7.5 மேற்கோள்கள்

   7.6 உயர்வு

மௌன முறையில் போதித்தல் பின்வரும் வகையில் வகைப்படுத்தப்படுகின்றது.

1. விட்டங்கள்

   1.1 குருவின் செய்கை வழி

   1.2 செய்கையோடு கலந்த வார்த்தைகள் வழி

2. ஒலிகள்

   2.1 கத்துதல்

   2.2 உறுமுதல்

   2.3 கோபம்

   2.4 மூச்சுவிடுதல்

3 செயற்பாடுகள்

   3.1 மொழியுடன் இயைந்தது

   3.2 பொருட்களுடன் இயைந்தது

3.3 சீடர்களுடன் இயைந்தது

3.4 வேறுபட்ட இணைப்பு முறை

3.5 அங்க அசைவுகள்

4. மௌனம்

4.1 நீண்ட நேரத்திற்கு

4.2 சிறிது நேரத்திற்கு"[86]

இவற்றில் ஒன்றான வினா கேட்டல் மறைமுக விடையளித்தல் என்பதை 'கோயான்' என்று ஜென்னில் அழைப்பர்.

கோயான், "குரு-சீடர் உறவில், போதனைகளின் பலமுறைகளில், இது ஒருவகையான கேள்வி முறை. இன்னும் சாதாரணமாக இதைச் சொன்னால், எல்லையில்லா உண்மைகளை நோக்கியதொரு முறை எனலாம். தர்க்கரீதியில் இதற்கு விடை காணுதல் இயலாது. உலகாதய அறிவிற்கு அப்பாற்பட்ட விழிப்புணர்வைப் பெற்ற பின்னரே இதன் பொருளை விளங்கிக் கொள்ள முடியும். குருவின் உபதேசங்கள், உரைகள், சீடர்களின் கேள்விகள் மற்றும் அறிவுரைகள் போன்றவற்றில் எதிலிருந்தும் கோயான் உருவாகலாம். அல்லது உருவாக்கிக் கொள்ளலாம். ஏறத்தாழ ஆயிரத்து எழுநூற்றுக்கும் மேற்பட்ட கோயான்கள் இருக்கின்றன. அதில் ஜப்பான் ஜென் குருமார்கள் 500 மேற்பட்டவற்றைப் பயன்படுத்துகின்றனர். ஜென் பயிற்சி முடித்துச் செல்லும் சீடர்கள் அனைவரும் குறைந்தபட்ச 50 கோயான்களுக்காவது தீர்வு காண வேண்டும் என எதிர்பார்க்கப்படுகிறது"[87].

கோயான் என்பது வினாக்கள் மூலம் நம் பிறப்பு மற்றும் இறப்பின் முழு அர்த்தத்தையும் விளக்குவதோடு, “உன்னில் இளைப்பாறிய பிறகே எம் மனம் அலைபாய்வதை நிறுத்தியது”[88] எனும் மேற்கோள் இதன் நன்மையை விளக்குகிறது.

## 5.4 பூஜ்ஜியத்தில் பூரணம்

சித்தர்கள் கூறும் மெய்யுணர்வுத் தத்துவத்தில் எதுவும் இல்லாத வெட்டவெளி பூஜ்ஜிய நிலையாகக் கூறப்படுகிறது. மெய்யுணர்வுத் தத்துவத்தில் கடைசிநிலை பூஜ்ஜியம் அதாவது சூனியம், அதாவது ஒன்றும் இல்லை என்ற நிலை. ஒன்றும் இல்லை என்று கூறும்போது அங்கு மனிதன் தன்னை அறியும் நிலை கடந்து முத்திநிலை பெறுகின்றான். வாழ்வியல் பூரணம் அடைகிறது.

“வெட்டவெளி என்பது எல்லாவற்றையும் தனக்குள் அடக்கியது. முப்பரிமாணத்திற்குள் அடங்காதது. அதனுடைய பரிமாணம் வரம்பற்றது. அது எல்லா அசைவுகளையும் அது ஆன்ம அசைவாக இருந்தாலும் சரி, உடலியல் அசைவாக இருந்தாலும் சரி உள்ளடக்கியது. ஆன்ம அசைவு அல்லது இயக்கத்தின் போது இந்த ஆகாயம் அல்லது வெளி அறிவுப் பெருவெளி என்று அழைக்கப்படுகிறது. அதாவது ‘அது’, ‘இது’ என்ற வேறுபாடுகள் அழிந்துபோன உச்சநிலையை அடையும்போது வெளியானது சிதாகாசம் ஆகிறது. அதையே சித்தர்கள் வெட்டவெளி என்கிறார்கள்.

திபெத்திய யோக மரபில் ‘திக்-லெ’ (Thig-le) என்ற சொல் ஒன்று வழக்கில் இருக்கிறது. இது சமஸ்கிருதத்தில் வழங்கப்படும் ‘பிந்து’ என்ற சொல்லை

ஏறத்தாழ ஒத்தது. திக்-லெ என்ற சொல்லுக்குப் புள்ளி, பூஜ்யம், சொட்டு, நுண்மம், விதை, விந்து என்று பல பொருள்கள் வழங்கப்படுகின்றன[89].

வெட்டவெளி, பூஜ்ஜியம் என்பது இருப்பைப் பற்றிய உணர்வு. அதாவது எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி ஒருமைப்படுத்துகிற ஒன்றின் இருப்பைப் பற்றிய உணர்வு. ஆகையால் இந்த வெளியைச் சிவவாக்கியர் ஒப்பில்லாத வெளி என்கிறார். எனது, உனது, உங்களது, நமது என்ற எல்லை தாண்டிய உணர்வு. “இந்த வெளிக்கு மேய்ப்பானும் இல்லை. மேய்க்கப்படுபவனும் இல்லை. அறிவானும் இல்லை. அறியப்படுவானும் இல்லை. கற்றுக்கொடுப்பானும் இல்லை; கற்றுக் கொள்வானும் இல்லை.

*“ஓடம் உள்ள போதலோ ஓடியே உலாவலாம்*
*ஓடம் உள்ள போதலோ உறுதி பண்ணிக் கொள்ளலாம்*
*ஓடம் உடைந்த போதில் ஒப்பில்லாத வெளியிலே*
*ஆடும் இல்லை கோலும் இல்லை யாரும் இல்லை ஆனதே”!*[90]*.*

பூஜ்ஜியம் என்ற நிலையில் ஐம்பூதங்களான நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகியவை கிடையா. கண்ணுக்குப் புலனாகக் கூடியவை, புலனாகாதவை என்ற பொருள்கள் எதுவும் இல்லை.

*“விருப்பு வெறுப்பு இல்லாத வெட்டவெளி அதனில்*
*இருப்பே சுகம்.....................”*[91]

விருப்பு, வெறுப்பு ஏதும் இல்லாத வெட்டவெளியில் பூரணம் கிடைக்கிறது. அதாவது அனைத்தும் கடந்த நிலையில் இன்பம் தரக்கூடியது என்கிறார் பட்டினத்தார்.

*"அட்டாங்க யோகமும் ஆதாரம் ஆறும் அவத்தை ஐந்தும்*

*விட்டேறிப்போன வெளி.......*"[92]

*"ஐயாறும் ஆறும் அகன்ற வெறுவெளி*"[93].

*"புறப்பொருள்களான ஜாடி அல்லது மலர் அல்லது*

*அகம் பொருள்களான இன்பம் அல்லது துன்பம்*

*சிந்தனை எதுவாயினும் சரி,*

*தத்துவங்களால் ஆன பொருள் எதுவும்*

*ஆதாரம் (பற்றுக்கோடு) இல்லாமல் நிற்குமேயானால்*

*அதுவே சூனியம்".*

என்று சிவோபாத்யாயா என்ற நூலில் விஞ்ஞான பைரவர் சொல்கிறார்"[94].

"வெட்டவெளியைச் சில தமிழ்ச் சித்தர்கள் சூனியம் என்றும் குறிக்கிறார்கள். பரம்பொருளை நிறுவுவதற்கு நேர்நிலைச் சான்றுகள் கொடுத்தால் அந்தச் சான்றுகளுக்குள் அந்தப் பரம்பொருளைக் கட்டுப்படுத்தியதாக ஆகிவிடுகிறது. ரிக் வேதத்தில் அது இருக்கவும் இல்லை இல்லாமலும் இல்லை"[95] என்று சொல்லப்படுகிறது.

சூனியம் அல்லது வெட்டவெளியைத் தமிழ்ச் சித்தர்கள் ஒரு கொள்கையாக முன்வைக்கவில்லை. மெய்ம்மையைப் பற்றிய எல்லாக் கொள்கைகளும் முடியும் இடமாக இது கூறப்படுகிறது.

சூனியம் அல்லது வெட்டவெளி என்பது ஒரு கொள்கையோ கருத்துநிலையோ கிடையாது. அது ஓர் அனுபவம். ஜென் கொள்கையின்படி

ஜென்னின் இலக்கை அடைய வேண்டுமானால் 'ஒன்றுமின்மை' என்ற நிலை பற்றிய கருத்தையும் கூடத் துறந்துவிட வேண்டும் என்கிறது.

ஜென்னின் அடையாளம் (சின்னம்) பூஜ்ஜியம் போன்ற வடிவமைப்பைக் கொண்டது. இது ஆதியும் அந்தமும் அற்ற பரிபூரண நிலையைச் சுட்டுகிறது. (படம் பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளது)

"போதி தர்மர் சீனாவுக்குள் நுழைகிறார் என்பதைக் கேள்விப்பட்ட சக்கரவர்த்தி மிகவும் மகிழ்ச்சியடைந்தார்.

போதி தர்மரை வரவேற்ற மன்னர் அவரிடம் தான் புத்த தருமம் பரவ இதைச் செய்தேன், அதைச் செய்தேன் என்று பெருமை பேசிவிட்டு, இதனால் எனக்குக் கிடைக்கப்போகும் மரியாதை என்ன என்று கேட்டார்.

'ஒன்றுமில்லை! நீங்கள் ஏழாவது நரகத்திற்குச் செல்வீர்கள்?' என்றார் குரு! திடுக்கிட்டார் மன்னர்.

'புத்த ஞானிகள் எல்லாம் தம்மைப் போற்றி வரும்போது போதி தர்மர் மட்டும் இப்படிச் சொல்லிவிட்டாரே! என்ன காரணம்? கேட்டுத்தான் பார்க்க வேண்டும்' என்றான் மன்னன்.

"நான் செய்தவை எல்லாம் தர்மம் இல்லையென்றால் எதுதான் தர்மம்? எதுதான் புண்ணியம்?" என்று கேட்டார் மன்னர்.

'வெறுமை.... வெறும் வெறுமை'என்றார் போதிதர்மர்.

'ஆகவே சூன்யம்தான் புண்ணியமா? என்று கேட்டார் மன்னர்.

‘முட்டாள்தனமாகப் பேசாதீர்கள். அதில் புண்ணியம், புனிதம் எல்லாம் கிடையாது. வெறுமை என்றால் வெறுமை’ என்றார்.

மன்னர் உள்ளே திரும்பிப் போய்விட்டார். போதிதர்மர் அரண்மனையை விட்டு வெளியேறிக் காட்டுக்குள் சென்றுவிட்டார்.

போதி தர்மரின் மொழிகள் இரவு பகலாய் மன்னரை வாட்டிக் கொண்டிருந்தன. குழப்பங்களுடனே காலம் நகர்ந்தது.

உயிரும் உடலும் அழகும் செல்வமும் நிலையற்றது. ஆனால் மெய்ம்மையாகிய இருப்பு நிலையே பரிபூரணமானது என்கின்ற ஜென் கவிதை. இதனை,

*“இருப்புநிலை பற்றிய அர்த்தங்கள்*
*உன்னுள் பற்றிப் போகவேண்டும்;*
*‘இருப்பு நிலையற்றதை’*
*உண்மை என எடுத்துக் கொள்ளாதே.*

எனும் பாடல் விளக்குகின்றது. இருப்பு நிலையே மெய்மை என்றும் அது எல்லைகளற்றது அளவிட முடியாதது என்றும் கூறப்படுகின்றது. ஆனாலும் எல்லாம் வற்றிய நிலையிலேயே இருப்பதால் பேரறிவின் வானம் முழுமையிலும் பூரணமான புரிதல் பரிணமிக்கின்றது. அவ்வெற்றிடமே பரமாத்மாவோடு உன்னை இணைக்கும் இவ்வித மெய்யுணர்தல் இல்லையெனில் உன் வாழ்க்கை மதிப்பற்றது என்று ஓஷோ கூறுகின்றார்.

மன்னர் மரணப் படுக்கையில் கிடந்தார். ஆட்களை நாலா பக்கங்களிலும் விரட்டி எங்கிருந்தாலும் போதி தர்மரை அழைத்து வரும்படி அவசரப்படுத்தினார்.

“தர்மங்களை உலகிற்கு வழங்கும் அறிவிக்கும் போதி தர்மரே தர்மம் என்பதே ஒன்றுமில்லை, வெறும் சூன்யம் என்றால் அது எப்படி? ஒரு ஞானியே இப்படிச் சொல்லலாமா? இவ்வளவு தர்மங்கள் செய்த எனக்கு நரகம்தான் என்றால் தர்மத்திற்கு என்னதான் அர்த்தம்?”

போதி தர்மரால் சரியான நேரத்திற்கு வரமுடியவில்லை. ஆனால். அதற்குள் மன்னர் ஓர் உத்தரவு போட்டிருந்தார்.

அந்த மரண வேளையில்தான் அவருக்கு ஞானம் பிறந்தது. அதாவது, விழிப்புணர்ச்சிதான் ஞானம்”[96].

"மாஸ்டர் இக்கியு சொல்வார்: ‘இன்மை’ (Empty) சிறப்பு. எதுவாகவும் இல்லை, யாராகவும் இல்லை என்கிற நிலையை அடையுங்கள். வெறுமை என்றும், சூன்யம் என்றும் நாம் காண்கிற எதுவும் வெறுக்கத்தக்கதல்ல. காலிக் கோப்பையில் எதுவும் கிடையாது. சுயம் உள்படத் தொடக்கத்தில் சுமப்பது சுகம். முடிவில் சுமை என்று எதுவும் இல்லாமல் இருப்பதே சுகம். வெற்றுக் கோப்பையை எண்ணி வருத்தப்பட வேண்டாம். வெறும் மண்ணில்தான் பேரானந்தம் பூக்கிறது”[97].

“நான்-இன்” (Nan-in) என்ற ஒரு ஜப்பானிய ஜென் மாஸ்டர், ஜென்னைப் பற்றி விசாரிக்க வந்திருக்கும் ஒரு பல்கலைக்கழக முதுநிலை ஆசிரியரை வரவேற்றார். நான்-இன் அவருக்கு டீ வழங்கினர். அப்பொழுது அவர் இந்த விருந்தாளியின் கோப்பையில் டீயை ஊற்றும் பொழுது அது டீயினால் நிறைந்த பிறகும், அது கீழே வழிவதைப் பொருட்படுத்தாமல் மேலும் மேலும் ஊற்றிக் கொண்டே இருந்தார்.

இதைக் கவனித்த அந்த முதுநிலை ஆசிரியர், ஒரு கட்டத்தில் பொறுக்கமுடியாமல், ‘அது நிறைந்து வழிந்துவிட்டது. மேலும் ஊற்றுவதால் என்ன பிரயோஜனம்?’ என்று கேட்டார். அதற்கு நான்-இன், “இந்த கோப்பையைப் போல நீயும் உன்னுடைய கருத்துக்களாலும் யூகங்களாலும் நிரப்பப்பட்டிருக்கிறாய்.

“நீ முதலில் உன்னையே காலி செய்து கொள்ளாவிட்டால், நான் எப்படி ஜென்னை உனக்குக் காண்பிக்க முடியும்?” என்று கேட்டார்.

மேற்கூறப்பட்டுள்ள நிகழ்விற்கு ஓஷோ தரும் விளக்கம்.

‘நீ முதலில் ஒரு வெற்று மூங்கிலாகு. கடவுள் தன் தெய்வீகக் கீதத்தை அதன் வழியாக இசைக்கட்டும். நீ எந்த அளவுக்கு உன்னைச் சாதாரணமாக எண்ணிக் கொள்கிறாயோ அந்த அளவுக்கு அசாதாரணமாக விளங்குவாய்”[98].

மனம் என்பதனை வெற்றிடமாக்கும் பொழுது மனிதன் பூரணத்துவம் அடைகின்றான். இறைநிலையை எய்துகின்றான் என்ற கருத்து புலனாகின்றது.

ஆணவத்தை ஒழி! ஞானம் பெறலாம் என்கிறது ஜென். இக்கருத்தினை அடியொற்றிய மற்றொரு ஜென் கதை கீழ்வருமாறு.

“புத்தர் பெருமான் ஒரு காட்டு வழியில் போய்க் கொண்டிருந்த போது, ஒரு குரங்கு அவரைப் பின்பற்றி வந்து கொண்டே இருந்தது.

புத்தர் நின்றார். குரங்கு ஒரு மரக்கிளையின் மேல் அமர்ந்துகொண்டு அவரைப் பார்த்தது.

“குரங்கே? என்ன விஷயம்?” என்று கேட்டார்.

நான் சாதாரணக் குரங்கு அல்ல. மகாமந்தி என்றது. முடியாது. என்பது என் அகராதியிலேயே இல்லை. நான் எதை வேண்டுமானாலும் செய்து காட்டுவேன் என்றது குரங்கு.

'அப்படியா மகிழ்ச்சி' என்ற புத்தர், அதனிடம் ஒரு பந்தயம் செய்தார். நீ அவ்வளவு திறமைசாலியானால் அங்கிருந்து ஒரே தாவாகத் தாவி என் உள்ளங்கையின் மேல் வந்து அமர வேண்டும். அப்படிச் செய்தால் சுவர்க்கத்தின் மாமன்னனாகிய மரகதச் சக்கரவர்த்தியை என்னுடன் வந்து இருக்கும்படிக் கேட்டுக்கொள்வேன். அப்போது அவரது அரியணை காலியாகிவிடும். நீ அதில் போய் அமர்ந்து கொள்ளலாம் என்று பந்தயம் என்னவென்று கூறினர்.

பந்தயத்திற்கு ஒப்புக்கொண்ட குரங்கு, 'என்ன குதிக்கலாமா' என்றது.

குதிக்கலாம் என்று சொல்லிக் கையை நீட்டினார் புத்தர்.

குதிப்பதற்கு முன் குரங்கிற்கே உரிய சேட்டைகளைச் செய்து முடித்து புத்தரின் நீட்டிய கரத்தின் மேல் வந்து அமர்ந்தது.

புத்தர் கையில் அமர்ந்து கொண்டிருக்கும் குரங்கு, எப்படி? பார்த்தீர்களா? வந்துவிட்டேன். மரக்கிளையிலிருந்து உங்கள் கைக்கு அல்ல. மரக்கிளையிலிருந்து நேராக நான் ஆகாயத்தில் தாவி, ஐந்து ஆகாயத் தூண்களைக் கண்டு ஒன்றின்மேல் வாசகம் எழுதிவிட்டு அப்புறம்தான் உங்கள் கைக்கு வந்து சேர்ந்திருக்கிறேன். எப்படி? நான் வெற்றி பெற்றுவிட்டேன். எங்கே சுவர்க்கத்தின் அரியணை? என்றது கர்வத்துடன்.

புத்தர் புன்னகையுடன் 'கீழே பார்' என்றார். குரங்கு கீழே பார்த்தது. புத்தரின் உள்ளங்கைதான் தெரிந்தது நன்றாகப் பார்த்ததில் ஒரு விரலின் மீது,

குரங்கு வானத்துத் தூணின் மேல் எழுதிய வாசகம் காணப்பட்டது! கட்டை விரலுக்கும் ஆள்காட்டி விரலுக்கும் இடையில் அது பெய்த சிறுநீர்!

"அப்படியானால் வானத்தில் தான் பார்த்தது புத்தரின் விரல்களையா? அந்தக் கணத்தில் குரங்கின் கர்வம் உடைந்து சிதறியது"[99].

மேற்கூறப்பட்டுள்ள கதையின் மூலமாக மனம் உள்ளவரை ஆணவம் இருப்பது உண்மை. எனவே மனம் என்பதே இல்லாமல் அதாவது வெற்றிடமாக்கிவிடு. பூஜ்ஜிய நிலையில் பூரணத்துவம் அடைதல் பேரானந்த நிலையைக் காட்டுகிறது.

சாதாரண நிலையில் எப்பொழுதும் மனிதன் பூரணத்துவம் அடைய முடியாது. எனவே நம்மை மிஞ்சிய சக்திகள் உண்டு. அதை பெறுவதற்கு நம்மை சூனியம் ஆக்கிக் கொள்ளுதல் அவசியமாகிறது.

## 5.5 சும்மா இருத்தல்

மெய்யுணர்வு அனுபவத்தை விளக்கும் வெட்டவெளி என்ற சொல் மெல்ல மெல்ல மௌனம் என்ற பொருளைத் தருமாறு கருதப்பட்டது. இந்த மெய்யுணர்வு மௌனத்துக்குத் தமிழ்ச் சித்தர்கள் வழங்கியுள்ள பெயர் 'சும்மா'. அமைதியைப் பற்றிப் பேசுவததோடு எந்தச் சொல்லைப் பயன்படுத்தினாலும் சரி, அமைதி உடைந்து போய்விடும் என்றாலும் அதைக் குறித்தேயாக வேண்டிய நிலையில் 'சும்மா' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார்கள். விளக்க முடியாத 'அதை' வாயுள்ளவனே விளக்கமுடியாதிருக்க ஊமைகள் விளக்க முடியுமா? என்று திருமூலர் திட்டுகிறார்.

*"உரையாற்ற தொன்றை யுரை செய்யு மூடர்காள்*

*கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ*

*திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்*

*புரையற் றிருந்தான் புரிசடை யோனே"*[100].

இறைவன் வந்து உள்ளத்தில் குடிபுகுந்து விட்டானானால் அந்த அனுபவத்தை வாய் திறந்து சொல்ல முடியாது என்று பாடுகிறார் சிவவாக்கியர்.

*"செய்யதெங்கிலே இளநீர் சேர்ந்த காரணங்கள் போல்*

*ஐயன்வந்து என்னுளம் புகுந்து கோயில் கொண்டனன்*

*ஐயன்வந்து என்னுளம் புகுந்து கோயில் கொண்டபின்*

*வையகத்தில் மாந்தர் முன்னம் வாய்திறப்ப தில்லையே"*[101].

மேலும் அமைதி நிலையில் முத்தி உண்டாம் என்று இடைக்காட்டுச் சித்தர் எடுத்துரைக்கிறார்:

*"மோன நிலையினில் முத்தி உண்டாம் என்றே*

*கானமாய் ஊதுகுழல் கோனே!*

*கானமாய் ஊதுகுழல்"*[102].

'உள்ளத்தில் உறைகின்ற இறைவனை உள்ளத்தால் வழிபட்டுப் பெறுகின்ற இன்பம் நிலையானது. இறைவனை வார்த்தைகளால் வருணிக்க முடியாதது போலவே, இறையின்பத்தையும் இன்னது, இப்படிப்பட்டது என்று விளக்கியுரைக்க முடியாது. இறையின்பத்தில் இலயித்து நிலைத்து விடுகின்றவர்கள் பேசமாட்டார்கள்; மௌனமே அவர்களது நிலை; அத்தகையோரைக் காண்பதரிது. மற்றையோருக்கு இறையின்பம் வந்து போவதாகவே இருக்கும். 'ஊமை கனாக்

கண்டு உரைக்கறியா இன்பம்'' என்று இறையின்பத்தைக் குறிக்கின்றார் பத்ரகிரியார்.

மேற்கூறப்பட்ட சித்த நிலைக்கு நிகரான ஜென் கதையில் 'சும்மா இருத்தல்' என்னும் தத்துவம் விளக்கப்படுவது பின்வருமாறு:

''ஒரு மனிதன் குன்றின் உச்சியின்மேல் நின்று கொண்டிருந்தான். அந்தப் பக்கமாகச் சென்றுகொண்டிருந்த மூன்று வழிப்போக்கர்கள் அதைக் கண்டார்கள்.

அவர்களில் ஒருவன், 'அவன் வளர்த்த பிராணி எதையோ காணாமல் போக்கிவிட்டான் போலிருக்கிறது. அதை மேலே இருந்து தேடிப்பார்க்கிறான் போல் தோன்றுகிறது என்றான் தன் தோழர்களிடம்.

'இல்லையில்லை தன் நண்பனைத் தேடுவது போல் தோன்றுகிறது. ஆம் அப்படித்தான் இருக்க வேண்டும்'' என்றான் இரண்டாவன்.

'அதெல்லாமில்லை. அவன் காற்று வாங்குகிறான். பார்த்தால் தெரியவில்லையா?' என்றான் மூன்றாவது ஆள்.

கடைசியில் ஒருவன், 'அவனையே கேட்டு விடுவோம் விவாதம் எதற்கு?' என்றான். மற்றவர்களும் அதற்கு ஒப்புக் கொண்டனர். மூவரும் குன்றின் உச்சிக்குச் சென்றார்கள்.

உச்சியை அடைந்ததும் முதலாமவன் கேட்டான். 'நீங்கள் வளர்த்துவந்த பிரியமான பிராணியை இழந்துவிட்டீர்கள். அல்லவா? அதைத்தானே இங்கிருந்து தேடுகிறீர்கள்?'

‘இல்லை எதுவும் காணாமல் போகவில்லை’ என்றான் அவன்.

உடனே இரண்டாமவன் மகிழ்ச்சியுடன், ‘உங்கள் நண்பரைத்தானே தேடுகிறீர்கள்?’ என்று கேட்டான்.

அதற்கு அவன், “இல்லை, நான் என் நண்பனைத் தேடிப்பார்க்க இங்கு நிற்கவில்லை” என்றான்.

அதைக் கேட்ட மூன்றாவது ஆளுக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டு விட்டது. “காற்று வாங்கத்தானே இங்கே நின்றுகொண்டிருக்கிறீர்கள்?” என்று உற்சாகமாகக் கேட்டான்.

‘இல்லை ஐயா; நான் காற்று வாங்க இங்கே நிற்கவில்லை’ என்றான் அவன்.

“மூவருக்கும் ஒரே வியப்பு. அப்படியானால் எதற்காக இங்கே நிற்கிறீர்கள்?” என்று மூவரும் கேட்டார்கள்.

அதற்கு அவன் சொன்னான்:

‘சும்மா?’

‘சொல்லும் பொருளுமற்றுச் சும்மா இருப்பதற்கே,

அல்லும் பகலுமெனக்கு ஆசை பாரபரமே என்று தாயுமானவர் சும்மா இருத்தல் நிலை சுகம் என்கிறார்”[103].

சூன்ய நிலைக்கு முந்தைய நிலையாக சும்மா இருத்தல் நிலையைக் காணலாம். தியான நிலைகளிலிருந்து அமைதி, மௌனம் என்ற நிலை கடந்து

சூன்ய நிலையில் உள்ளீடான பொருள் ஒன்று என்றால் அது இருப்புநிலையைக் காட்டுகிறது என்று பொருள் கொள்ளப்படுகிறது.

ஆன்மீகத் தத்துவத்தில் 'சும்மாநிலை' என்கிறது ஜென். சும்மா இரு என்றால் எதையும் செய்யாமல் அமைதியாக இருந்துகொள் என்பதுதான்.

விருப்பத்தை விட வேண்டும். ஒன்றின் மீதான விருப்பம் அதை அடைவதற்கான ஆசையைத் தோற்றுவிக்கிறது. பற்றுக்களை விடுங்கள். பாதிக்கப்படமாட்டீர்கள். எதையும் செய்யாமல் இரு என்றால் எதையும் விரும்பாமல் இரு என்பதுதான் என்கிறது ஜென்.

"நினைவில்லை, கற்பனையில்லை. எதிர்காலம் பற்றிய உணர்வு இல்லை உள்ளே, வெளியே என்பதெல்லாம் கிடையாது. முன்னேறுவதும் இல்லை, பின் வாங்குவதும் இல்லை எல்லாமே அமைதியாய் இருக்கிறது. அசைவற்றிருக்கிறது. அதுவே சும்மா இருக்கும் நிலை.

ஆன்மீகத்தில் சும்மா இருப்பவனே சுகம் அடைகின்றவன். அவனுக்குப் பாகுபாடுகள் கிடையாது. வெயில், மழை, குளிர், நெருப்பு போன்ற வேறுபாடுகள் அவனுக்கில்லை. தான் இருக்கும் இடம் பற்றிய பிரக்ஞை கூட அவனுக்கு இல்லை. ஜென்னில் வாழ்கிறவர் நிலை இது என்கிறது ஜென் தத்துவம்"[104].

## 5.6 மாயை

சித்தர் மற்றும் ஜென் இலக்கியத் தத்துவங்களில் நிலையாமை கருத்துக்கள், கடவுள் கோட்பாடு, வாழ்வியல் பூரணத்துவம் போன்ற சிந்தனைகள் கடவுளின் இருப்பை உறுதிப்படுத்துகின்றன.

உலகியல் வாழ்க்கையிலிருந்து ஆன்மீக வாழ்விற்குள் மனிதன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளுதற்குத் ‘தன்னையறிதல்’ முதன்மையாகின்றது. தன்னை அறிதல் எனும் நிலையில் வாழ்க்கை நிலையாமை எனும் தத்துவத்தை மனிதன் உணர்கின்றான். வாழ்ந்து கொண்டிருக்கும் வாழ்வானது ‘இப்பொழுதே வாழ்’ எனும் தத்துவத்திற்குள் அடங்குகிறது.

### 5.6.1 சித்தர் பாடல்களில் மாயை

மாயை என்பது பற்றிப் பெரும்பாலும் எதிர்மறையாகவே பொருள் கொள்ளப்படுகிறது. மாயை என்பது அறியாமை, எனப்படும். நிலையில்லாதவற்றை நிலைத்தவை என நினைத்துக் கொள்ளும் மயக்கமே எனப்படுகிறது. மாயையிலிருந்து விடுபட்டால் தான் பிரம்மத்தை அறிதல் சாத்தியமாகும் என்று சித்தர்கள் கூறுகின்றனர்.

‘‘சைவ சித்தாந்தத்தில் மாயை என்பது உள்பொருளே. அது சிவத்துக்கு வேண்டும்போது பயன்படுத்திக் கொள்ளும் சக்தியாக உள்ளது.

‘‘மாயை என்றால் முற்றிலும் பொய்யானது. உண்மையின் அடிப்படையே இல்லாதது என்பதாகப் பலரும் நினைக்கிறார்கள். அது சரியான அர்த்தம் ஆகாது. மாயை என்பதைத் தற்காலிகத் தோற்றம் என்று சொல்லலாம். அப்படியென்றால், மாயை என்பது இகழத்தக்கதா என்று கேட்டால் அல்ல என்பதையே நம் ஞானிகள் சுட்டிக்காட்டி இருக்கிறார்கள். ஞானத்தை அடைவதற்கான வழி மாயையை வெறுத்து ஒதுக்குவதோ மாயையை ஒரு தடையாக நினைப்பதோ அல்ல என்றும் அப்படிச் செய்வது ஞானத்தைத் தந்து

விடாது என்றும் அவர்கள் நம்பினார்கள்"[105] என ஞான மார்கத்தில் பதிலளிக்கிறார் திரு. கணேசன்.

இவ்வுலக வாழ்வே, மாயை எனும் கருத்தினை சித்தர் பாடல்களில் காணமுடிகின்றது.

*"முன்னர் வந்தனர் எல்லாம் முடித்தனர்*
*பின்னை வந்தவர்க்கு என்ன பிரமாணம்*
*முன்னூறு கோடி உறுகதி பேசிடில்*
*என்ன மாயம் இடிகரை நிற்குமே"[106].*

அதாவது, இந்த உலகம் தோன்றிய காலம் முதல், இன்றுவரைப் பிறந்த அனைத்து உயிர்களும் அழிந்து ஒழிந்து கொண்டுதான் இருக்கின்றன. இப்போது உயிருடன் இருப்பவர்களும் நிரந்தரமாக இருப்பார்கள் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை. பிறப்பு, இறப்பு என இதுவரை நிகழ்ந்தது எல்லாமே மாயை. ஆற்றின் இரு கரைகளுமே கரைந்து நீரில் கரைந்து நீரில் காணாமல் போகும் என்ற மாயை மட்டுமே உண்மை".

இவ்வுலக வாழ்வு மாயை என்றாலும் அதில் மண், பெண், பொன் போன்ற ஆசைகளை உருவாக்கும் காரணிகளும் மாயை என்றே சித்தர்களால் எண்ணப்படுகின்றது.

*"காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டிஎன் கண் எதிரே*
*மாதென்று சொல்லி வரு மாயை....."[107]*

## 5.6.2 ஜென்னில் மாயை

சித்தர்களைப் போல மாயை என்பதில் ஜென்னுக்கு உடன்பாடு இல்லை. இதனை, ''தெஸ்ஸீ'' என்றொரு ஞானி இருந்தார். அறிவில் சிறந்த அவர் தம் ஞானத்தால் மற்றவர்களைத் திகைக்கவைத்துக் கொண்டிருந்தார்.

அவர் ஊர் ஊராகப் போய்க்கொண்டே இருந்தார். சென்ற இடங்களில் எல்லாம் குருமார்களைச் சந்தித்து தத்துவ விசாரணை நடத்தினார்.

ஒருமுறை அவர் 'ஷோகொகு' என்ற கோயிலுக்குச் சென்றபோது அங்கே இருந்த ஒரு துறவியைச் சந்தித்தார். அவர் பெயர் 'தொகான்'.

தெஸ்ஸீ அவரைச் சந்தித்ததும் தம் ஞானப் பிரகடனத்தை எடுத்துவிட்டார்

'எல்லாம் பொய்; மாயை; சூன்யம்; ஒன்றுமில்லை' என்றார்.

''மனம்; புத்தர்; மற்றும் பொருட்கள் எல்லாம் ஒன்றுமில்லை' என்றார்.

''சூனியம்தான் இயற்கையானது. ஞானமும் இல்லை. அறியாமையும் இல்லை. பயனும் இல்லை. சாதாரணரும் இல்லை. உழைப்பும் இல்லை. பயனும் இல்லை'' என்றார் தொடர்ந்து!

ஞானி தொகான், தாம் கையில் வைத்திருந்த கரண்டியால் அவர் தலைமேல் ஓங்கி அடித்தார்!

''ஐயோ!'' என்று அலறினார் தெஸ்ஸீ.

தலையைத் தேய்த்துக் கொண்டு, ''ஏன் என்னை அடித்தீர்கள்?'' என்று சீறினார்.

‘‘என் அடியும் ஒன்றுமில்ல. உங்கள் கோபமும் ஒன்றுமில்லை. எல்லாம் பொய். மாயை’’ என்றார் தொகான் அமைதியாக.

‘‘எல்லாம் சூனியமாக இருக்கும்போது உங்கள் சினம் எங்கிருந்து வந்தது?’’ சூனியத்தில் பிறக்குமா சினம்?’’ என்றார் தொடர்ந்து.

வாயடைத்துப் போய்விட்டார் ஞானி!

மகா ஞானங்கள் என்று எதை எதையோ படித்துவிட்டு, எதார்த்த ஞானத்தை மறந்துவிடக்கூடாது’’[108] என்ற கதை வழியாக அறிந்து கொள்ள முடிகிறது.

## 5.7 தாமரை மலர்

ஜென் மற்றும் சித்தர் மரபில் பொதுவாகக் கருதப்படும் மற்றொன்று தாமாரை மலர். வெவ்வேறு காரணங்களுக்காகத் தாமரை மலர் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

### 5.7.1 சித்தர் இலக்கியத்தில் தாமரை மலர்

ஆறு ஆதாரங்களான மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி மற்றும் ஆக்ஞை போன்றவற்றை முதன்மையாகக் கருதுவது சித்தர் மரபு. அதன் அடிப்படைத் தத்துவம் பற்றிக் கூறுங்கால், ‘‘அண்டத்தில் உள்ளது பிண்டத்தில்’’[109] என்று கூறுவதுண்டு. அதன்படி அவ்வாதரங்களில் உள்ள சக்கரங்களின் தோற்றம் தாமரை மலரினைப் போன்றதாய் சித்தர்களால் உருவகிக்கப்படுகின்றது. அதன்படி,

*“மூலாதாரம் - சிவப்பு நிற நான்கிதழ் தாமரை*

*சுவாதிட்டானம் - அடர் ஊதா நிற ஆறிதழ் தாமரை*

*மணிபூரகம் - ஊதா நிற பத்து இதழ் தாமரை*

*அனாகதம் - இளஞ்சிவப்பு நிற பனிரெண்டு இதழ் தாமரை*

*ஆக்ஞை - சாம்பல் நிற ஈரிதழ் தாமரை”[110].*

இவை தவிர சகஸ்டாலா எனும் நீல மற்றும் தங்க நிற ஆயிரம் இதழ் தாமரையும் இருப்பதாக ஆய்வாளர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். இதனை,

*“ஆயிரத்தெட் டிதழ் வீட்டில் அமர்ந்த சித்தன்*

*அண்டம் எல்லாம் நிறைந்திடும் அற்புதச் சித்தன்*

*காயமில்லாது ஓங்கிவளர் காரணச் சித்தன்*

*கண்ணுள் ஒளி ஆயினான் என்று ஆடு பாம்பே”[111].*

இந்தத் தாமரை இதழ்களும் சக்கரமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. “இந்த இதழ்கள் ஆதாரச் சக்கரத்தின் அதிர்வெண்கள் மற்றும் சக்தி நிறத்தினையும் குறிக்கின்றது”[112]. இவ்விதழ்களின் எண்ணிக்கைகள் ஒவ்வொரு சக்கரத்திலும் வேறுபடுகின்றன. இதற்கென பிரத்யேகமான ஒலியும், தரமும், மந்திரமும் உண்டு. இத்தாமரை இதழ்கள் காலையில் ஆதவன் உதிக்கும் வேளையில் மலருவதும் மறையும் போது ஒடுங்குவதும் உண்டு. இவை குண்டலினி சக்தி மேலெழும்பும் வேளையில்தான் இத்தாமரை மலரும்.

### 5.7.2 ஜென்னில் தாமரை மலர்

“ஜென்னில் தாமரை என்பது அதிர்ஷ்டத்தின் அடையாளமாய் கருதப்படுகின்றது. இது சேற்றில் பிறந்தாலும் நல்ல மணமுள்ள அழகிய தாமரையாக உருவெடுக்கும் காரணத்தாலும், புனிதமானது எனும் காரணத்தாலும்

சிறப்பிக்கப்படுகின்றது."[113] சேறு என்பது உலக வாழ்வின் ஆசைகளையும் பாசங்களையும் குறிக்கிறது. தாமரை என்பது விழிப்புணர்வைக் குறிக்கின்றது. உலகம் எனும் சேற்றிலிருந்து புலப்படும் விழிப்புணர்வே ஜென்னின் அடைவு நிலை.

"வெள்ளை நிறத் தாமரை தூய்மையையும், சிவப்புநிறத் தாமரை அன்பையும், நீல நிறத் தாமரை பொது அறிவான விழிப்புணர்வையும், இளஞ்சிவப்பு நிறத்தாமரை புத்தத்தின் வரலாறறையும், ஊதா நிறத்தாமரை ஆன்மீகத்தையும் குறிக்கின்றது. தங்க நிறத் தாமரை புத்தத்தின் மீதான விழிப்புணர்வை அடைய உதவிபுரிகின்றது"[114]. இத்தாமரையின் வளர்ச்சி நிலை விழிப்புணர்வின் படிநிலைகளாய் கருதப்படுகின்றது. இவை போன்ற காரணங்களால் தான் தாமரை மலருக்கு ஜென்னில் பெரும் இடமளிக்கப்படுகின்றது. இதனை,

"புத்தர் தம் கையிலிருந்த தாமரையை அவனுக்கு தந்தார். பிறகு கூட்டத்தினரைப் பார்த்துச் சொன்னார். நான் வார்த்தையோடு சொல்லக்கூடியவற்றை யெல்லாம் இதுவரை உங்களுக்குச் சொல்லிவந்திருக்கிறேன் வார்த்தைகளால் சொல்ல முடியாதவற்றை இப்போது நான் காஸ்யபனுக்குத் வழங்கிவிட்டேன்"[115] என்பதிலிருந்தும்,

மகா காஸ்யபனுக்குத் தாமரை மலரைப் புத்தர் தந்த நிகழ்ச்சி ஜென் உலகின் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகக் கருதப்படுகின்றது"[116].

## 5.8 மாடு எனும் குறியீடு

மனத்தை குரங்கிற்கு ஒப்பிடுவதை இன்று நாம் வழக்கத்தில் கொண்டிருக்கிறோம். ஆனால் சித்தர்களும் ஜென் துறவிகளும் மனத்தை மாடாகவும் காளையாகவும் உருவகப்படுத்துகின்றனர். மாடு ஆற்றல் வாய்ந்தது. சுறுசுறுப்பானது. ஆனால் கட்டளைகளுக்குப் பணியக் கூடியது. ஆக்கசக்தி நிறைந்தது.

'மாடு' எனும் சொல் சித்தர் இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

''மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்'' என்ற கூற்றுப்படி மனமே அனைத்திற்கும் அடிப்படை. மன ஒருமைப்பாடு இருந்தால்தான் அட்டாங்க யோகம் சித்திக்கும். ஆனால் மனத்தை அடக்குவது எளிதானதன்று. இதனால்தான்,

''மனமென்னும் மாடடங்கிற்றாண்டவக்கோனே முத்தி வாய்த்த தென் றெண்ணேடா தாண்டவக்கோனே''[117]. மனதை அடங்காத மாட்டுக்கு ஒப்புவமையாகச் சொல்லி மனம் என்றும் மாடு அடங்கினால் முக்தி என்ற மோட்சம் அடையலாம் என்கிறார் இடைக்காட்டுச் சித்தர்.

இதில் மாடு மனத்திற்கு ஒப்பிடப்படுகிறது.

''பன்னிரண்டாம் நூற்றாண்டில் சீன ஜென் குரு ககுவான் முதன்முதலாக இந்தப் 10 காளைகள் என்ற குறியீட்டு ஓவியங்களை வரைந்தார். அதற்கான பத்து சூத்திரங்களையும் எழுதினார்.

சிவஞான போதச் சூத்திரங்களைப் போல சீனாவில் புகழ் பெற்று விளங்குவது இந்த சிறிய நூல்.

*மனிதத் தேடலின் குறியீட்டுச் சித்திரங்கள் இவை*
*அவருக்கு முன்ப நிலவி வந்த ‘தாவே’ தத்துவக் காளை*
*ஓவியங்களிலிருந்து புதிததாக வடிவமைக்கப்பட்டது இது.*

*“முன்னதைக் காட்டிலும் அழகாகவும் அழுத்தமாகவும்*
*தேடலைச் சொல்கிறது இந்த சிறுநூல்.*
*எட்டாவது ஓவியம் பரிசுத்தமான சூன்யத்தைக் குறிக்கிறது.*
*தேடுவது காணமாற் போன காளையை, ஆனால்*
*தேடுகிறவன் கண்டடைவது தன்னைத்தான். தன்*
*சுயத்தைத்தான் பல நூறாண்டுகளாக*
*சீன நாட்டில் இது புகழ் பெற்று விளங்கி வருகிறது.*
*காளை ஒரு குறியீடு வாழ்க்கையின் எல்லையற்ற*
*நிரந்தரத்தைத் தேடிக் கண்டடைதலை, இது கொள்கிறது*

*கருவான் எழுதிய கவிதை சூத்திரங்கள் எளிதானவை*
*மானிடத் தேடலை, அதன் அனுபவத்தை அனைவர்க்கும்*
*புரியும்படிச் சொல்பவை.*

*காளையின் காலடிச் சுவடுகளைப் பின்தொடர்ந்து சென்று*
*ஒருவன் கண்டு கொள்வது தன்னைத்தான்”[118].*

*தன்னை யறந்தின்பமுய வெண்ணிலாவே - ஒரு*
*தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே’’[119].*

என்பது போல் தன்னைத் தானறிதலே மகா ஞானம். அதைச் செறிந்த சிறு நூலாய்த் தருகிறது இது.

இவரது சூத்திரங்களில் சிலவற்றை இங்கே காணலாம்.

இது போன்று வரிசையாக செல்லும் கவிதைகள் காளையைத் தேடி அலைந்த கதையையும், இறுதியாக அதைக் கண்டடைந்த நிலையையும் கூறுகிறது. இதில் மனம் ஆன்மப் பாதையைச் சுட்டுகிறது.

“மனம் ஒரு மகத்தான கட்டுப்பாடு செய்யும் கருவி. எல்லாமே அதன் கட்டுப்பாட்டுக்குள் இருக்குமேயானால் அது ஒரு பெரும் சோகமாக இருக்கும். ஏனெனில் அப்போது மகத்தான எதுவும் உங்களுக்கு நிகழ முடியாது[120]” எனும் கூற்று மேற்கூறிய கருத்துக்கு அரண் சேர்க்கிறது எனலாம்.

## 5.9 முடிவுரை

1. சித்தர் தத்துவங்களில் தலைசிறந்தவையாகக் கருதப்படுவனவற்றுள் ஒன்று நிலையாமைத் தத்துவம் ஆகும். மனிதனின் வாழ்வியலை வைத்து நிலையாமைத் தத்துவத்தைத் தோற்றுவித்தார்கள் சித்தர்கள். இந்நிலையில்லா வாழ்வில் பற்றுக் கொண்டு இறைவனை மறந்து தீவினை புரியும் மக்களுக்குச் சித்தர்களின் பாடல்கள் எச்சரிக்கை செய்கின்றன.
2. சித்தர் தத்துவத்தில் கடவுள் கோட்பாடு, உடல் பற்றிய சிந்தனை விளக்கப்பட்டுள்ளது. மேலும் சித்தர்கள் இறைவன் குடிகொள்ளும் ஆலயம் உடல், உள்ளம் என்று கூறுகின்றனர். சித்தர் தத்துவத்தை அடியொற்றி ஜென் தத்துவம் கடவுளின் இருப்புநிலை குறித்துப்

பேசப்படுகின்றது. ஜென் கதைகள் வாயிலாகத் தத்துவம் விளக்கப்பட்டிருக்கின்றது.

3. சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும் கடவுட் கொள்கையை ஏற்பதும் இல்லை, மறுப்பதும் இல்லை. உள்ளுணர்வினால் அறியப்படுவதே என்று உணர்த்தப்படுகிறது.
4. பேரின்பம் அடைய சிற்றின்பத்தை நீக்க வேண்டும் எனும் கருத்தை வலியுறுத்த உயிரின் மேன்மையும், உடலின் இழிவும் அதிகம் பாடப்பட்டுள்ளது.
5. சித்தர், ஜென் இலக்கியங்கள் வாழ்க்கை நிலையாமைத் தத்துவம் குறித்துப் பேசுகின்றன. உலகம் நிலையற்றது, அதில் வாழும் வாழ்க்கை நிலையற்றது. இறை அச்சமே வாழ்வை அர்த்தமாக்கும் என்ற கருத்தினை மையப்படுத்துகின்றன.
6. உலகியல் பயன், ஆன்மப் பயன் ஆகிய இரண்டையும் மனிதன் பெற வேண்டும் என்பதே சித்தர், ஜென் இலக்கியங்கள் காட்டும் நன்னெறி. இப்பயன் கைகூட ஆசை விலக்கமும் புலனடக்கமும் வேண்டும். அப்போதுதான் அகக்காட்சியில் பரம்பொருளைக் காணமுடியும் என்பது சித்தர்களின் துணிவான முடிவாகும்.
7. ஆன்மப் பயன் பெறுவதற்குப் பற்றற்ற வாழ்வை மேற்கொள்ள வேண்டும் என்கிறது சித்தர், ஜென் தத்துவம். வாழ்க்கை நிலையில்லாதது. இருப்பினும் வாழ்வதற்குரிய பொருள்களைச் சேர்த்து வைத்தல் தேவையற்றது என்பதை அறிவுறுத்துகின்றது.

8. பிறப்பு என்ற நிலையில் இருந்து இளமை தாண்டி வருவது மூப்பு. மூப்பு நிலையில் இறப்பு உறுதி என்பது அறிந்ததே. இறப்பு என்பது இயற்கை நிகழ்வு. அது எப்போது வேண்டுமானாலும் நிகழலாம் என்ற தத்துவத்தினை யாக்கை நிலையாமை என்ற கருத்தில் சித்தர், ஜென் இலக்கியங்கள் விளக்குகின்றன.
9. இறைவனின் அருட்பெருஞ் ஜோதி உணர யோக உறுப்புக்களில் ஒன்றான தியானத்தின் வகைகளும் பயன்பாடுகளும் விளக்கப்பட்டிருக்கின்றன.
10. நிலையாமை என்பதே நிலைத்த உண்மை என்ற கருத்தினை சித்தர் ஜென் இலக்கியங்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன.
11. வெட்டவெளி அதாவது பூஜ்ஜியம் என்ற தலைப்பில் அனைத்தும் உள்ளடங்கும் என்ற தத்துவத்தினை அறிவுறுத்துகின்றது.
12. சித்தர், ஜென் தத்துவங்களில் பொதுமைக் கூறுகளாகக் காணப்படும் ‘சும்மா இருத்தல்’, ‘பூஜ்ஜியத்தில் பூரணம்’ ஆகியவற்றின் மூலமாக இறைவனின் இருப்பு பேசப்படுகின்றது.

## குறிப்புகள்

1. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.174.
2. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.138
3. திருமூலர், **திருமந்திரம்.** பா.1973
4. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்.** பா.23
5. குருஜி வாசுதேவ், **ஜென் தத்துவங்கள்,** ப.16.
6. பத்மா, **ஜென் வழி,** ப.52.
7. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்.** பா.70.
8. மேலது, பா.6.
9. மேலது, பா.13.
10. மேலது, பா.50.
11. மேலது, பா.18
12. மேலது, பா.17
13. பத்ரகிரியார், **சித்தர் பாடல்கள்,** பா.32.
14. மேலது, பா.62
15. கவிஞர் புவியரசு, **ஜென்கதைகள்.,** ப.73.
16. மேலது, ப.107.
17. பாம்பாட்டிச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.108.
18. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.81.
19. கொங்கணர், **சித்தர் பாடல்கள்,** பா.82.
20. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.77.
21. ஓஷோ, **பிரபஞ்ச ரகசியம்**, ப.88.
22. மேலது,ப.59.
23. கவிஞர் புவியரசு, **ஜென்கதைகள்,** ப.38.
24. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.50.
25. திருமூலர், **திருமந்திரம்,** பா.189.
26. குறள், பா.339.
27. புறநானூறு, பா.195.
28. கொங்கணர், **சித்தர் பாடல்கள்,** பா.85.

29. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.5.
30. கொங்கணர், **சித்தர் பாடல்கள்,** பா.100.
31. குருஜி வாசுதேவ், **லாவோத்ஸீ சீன ஞானக் கதைகள்,** ப.263.
32. ஓஷோ, **கடவுள் இறந்துவிட்டார், ஜென்னே வாழ்கிறது**, ப.30.
33. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.487.
34. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா. 6.
35. மேலது, பா.14.
36. மேலது, பா.10.
37. மேலது, பா.23.
38. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.75.
39. பத்திரகிரியார், **சித்தர் பாடல்கள்,** பா. 34.
40. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா. 17.
41. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** பக்.9-11.
42. ஓஷோ, **ஓஷோவின் குட்டிக்கதைகள்**, பக்.56
43. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா. 7.
44. கடுவெளியர், **சித்தர் பாடல்கள்,** 12.
45. பாம்பாட்டிச்சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா. 40.
46. மேலது, பா.43.
47. மேலது, பா.44.
48. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,**பா.77.
49. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.7.
50. மேலது, பா.152.
51. மேலது, பா.8.
52. இடைக்காடர், **சித்தர் பாடல்கள்,** பா.54.
53. மேலது, பா.51.
54. காடுவெளியார், **சித்தர் பாடல்கள்,** பா.5.
55. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.6.
56. மேலது, பா.7.
57. மேலது, பா.9.

58. மேலது, பா.12.

59. பாம்பாட்டிச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.42

60. பட்டினத்தர், **சித்தர் பாடல்கள்,** பா.8.

61. மேலது, பா.5.

62. அழுகணிச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.24.

63. இடைக்காடர், **சித்தர் பாடல்கள்,** பா.25

64. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** ப. 60.

65. கவிஞர் புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** பக். 152-153.

66. திருமூலர், **திருமந்திரம்,** பா.221.

67. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.12.

68. கடுவெளியார், **சித்தர் பாடல்கள்,** பா.16.

69. எஸ்.ஏ.பி, **100 ஜென் கதைகள்**, பக்.38.

70. எஸ்.கே.முருகன், **எளிய தமிழில் சித்தர் தத்துவம்**, பக்.184

71. யோகி கைலாஷ்நாத், **சித்தர் களஞ்சியம்,** ப.330.

72. எஸ்.ஏ.பி, **100 ஜென் கதைகள்**, பக்.163.

73. சி.எஸ். தேவநாதன், **சித்தர்களின் தியானம், யோகம், ஞானம்,** ப.9.

74. திருமூலர், **திருமந்திரம்,** பா.591.

75. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்,** பக். 75-76.

76. மேலது**,** ப.110.

**77.** Keran, **Chasing the tale of self,** pg.146.

78. கவிஞர் புவியரசு, **ஜென் கதை,** ப.33-34.

79. கவிஞர் புவியரசு, **மீண்டம் ஜென் கதை,** ப.139.

80. எஸ்.கே. முருகன், **எளிய தமிழில் சித்தர் தத்துவம்,** ப.188.

81. குதம்பைச் சித்தர், **சித்தர் பாடல்கள்,** பா.15

82. எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்,** ப.54-55.

83. ஓஷோ, **தந்த்ரா அனுபவம்**, ப.89.

84. யோகி கைலாசநாத், **சித்தர் களஞ்சியம்,** ப.264.

85. AMA samy**, Zen Meditation**, pg.11.

86. Wong Kiew Kit, **The Complete Book of Zen**, pg.124-125.

87. AMA samy**, Awakening to your original face,** pg.85.

88. AMA samy**, The Zen Way**, pg.57.

89. டி. என். கணபதி, **தமிழ் சித்தர் மரபு,** பக்.241, 242.

90. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.23.

91. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.13.

92. மேலது, ப.25.

93. பத்திரகிரியார், **சித்தர் பாடல்கள்,** பா.224.

94. டி.என். கணபதி, **தமிழ் சித்தர் மரபு** , ப.247.

95. மேலது, ப.246.

96. கவிஞர் புவியரசு, **ஜென் கதை,** ப.157.

97. சி.எஸ். தேவ்நாத், **ஜென் தத்துவ விளக்கக் கதை,** ப.114.

98. எஸ்.ஏ.பி, **100 ஜென் கதைகள்**, அட்டைப் படக் கருத்து

99. கவிஞர் புவியரசு, **ஜென் கதைகள்**, பக்.66-69.

100. திருமூலர், **திருமந்திரம்,** பா.2955.

101. சிவவாக்கியார், **சித்தர் பாடல்கள்,** பா.31.

102. இடைக்காடா **சித்தர் பாடல்கள்,** பா.98

103. கவிஞர் புவியரசு, **ஜென் கதை,** பக்.62-63.

104. சி.எஸ். தேவ்நாத், **ஜென் தத்துவ விளக்கக் கதை,** பக்.3.

105. என். கணேசன், **தினத்தந்தி - ஆன்மீகம்,** 16.7.2013.

106. எஸ்.கே.முருகன், **எளிய தமிழில் சித்தர் தத்துவம்,** ப.93.

107. பட்டினத்தார், **சித்தர் பாடல்கள்,** பா.12

108. புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** ப.62.

109. க. நாராயணன், **சித்தர் தத்துவம்,** ப.146.

110. John White, **Sri Aurobindo, the Tantra and Kundalini,** p.80 (fig.)

111. தா.கோ. வேந்தன், **சித்தர் பாடல்கள்,** ப.261.

112. www.chakra-centers-heal.com. "Lotus Petals and Chakras.

113. www.buddhists.org – The meanings of Lotus Flower in Buddhism.

114. Ibid.,

115. புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** ப.22.

116. மேலது, ப.23.
117. யோகி கைலாசநாத், **சித்தர் களஞ்சியம்,** ப.206.
118. புவியரசு, **மீண்டும் ஜென் கதைகள்,** ப.163.
119. மேலது, ப.164.
120. ஓஷோ, **குரு - ஒரு கண்ணாடி,** ப.38.

# 6.ஆய்வு முடிவுரை

காலத்தால் ஒன்றுபட்ட அல்லது கருத்துக்களால் ஒன்றுபட்ட இலக்கியங்களை ஒப்புமைப்படுத்திப் பார்க்கலாம். அவை ஒன்றுக்கொன்று தொடர்புடைய அல்லது மாறுபட்ட சிந்தனைகளைக் கொண்டிருக்கின்றன என்பது ஒப்பியல் ஆய்வின் மூலம் வெளிவரும். இத்தகு ஒப்பியல் ஆய்வில் அறியப்படாத இலக்கியங்களும் வெளிப்படாத சிந்தனைகளும் உலகிற்கு வெளிச்சம் போட்டுக் காட்டப்படுகின்றன. இத்தகு ஒப்பீட்டு ஆய்வுகள் இலக்கியங்களை உலகறியச் செய்வதுடன் அவற்றின் சிறப்புப் பண்புகளையும் பொதுப்பண்புகளையும் உணர வழிகாட்டுகின்றன. மேலும் இவை பல்வேறு ஆய்வுகளைத் தொடர அடிப்படைகளாகக் விளங்குகின்றன.

‘சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியம் - ஒப்பீடு’ எனும் தலைப்பில் இவ் ஆய்வு அமைக்கப்பட்டிருக்கிறது. காலவோட்டத்தின் அடிப்படையிலும் இலக்கியக் கருத்தோட்டத்தின் அடிப்படையிலும் இவ்விரு இலக்கியங்களையும் ஒப்பிடுவது நம் முன்னோர்களை மரியாதை செய்வதற்கு ஒப்பாகக் கூறலாம்.

சைவ சமயத்தையோ, பௌத்த மதத்தையோ மட்டும் பரப்பும் நோக்கில் உருவானதல்ல சித்தர் ஜென் இலக்கியங்கள். சமயம் கடந்த சிந்தனைகளையும் வாழ்க்கை நெறிகளையும் இவை மக்களுக்குப் போதிக்கின்றன. சொற்களனைத்தும் வெறுங் குறியீடுகளே. ஆதலால் ‘சித்தர்’ என்ற சொல்லின் பொருளை வரையறுப்பது சற்றுக் கடினம். சொற்கள் தோன்றிய காலத்தில் அவற்றுக்கு அமைந்த பொருள் காலப்போக்கில் மாறுவதை அறிவோம். எனினும் பல்வேறு காரணங்களுக்காகப் பலரைச் ‘சித்தர்’ என மக்கள் அழைத்திருந்தனர்.

‘ஜென் சொல்வதற்குப் பிரத்யேகமாக ஒன்றுமில்லை’ எனும் ஒரே பொருளிலேயே ஆய்வு முழுமையும் கையாளப்பட்டு வருகின்றது. இது ‘தியான்’ என்ற வடமொழிச் சொல்லிலிருந்து தோன்றியதாகும் சித்தர் எனும் சொல் தமிழ் இலக்கியங்களில் திடீரென நுழைந்துவிடவில்லை. இச்சொல்லின் பொருளில் பிற சொற்கள் தமிழ் இலக்கியங்களில் கையாளப்பட்டு வந்திருக்கின்றன

சித்தர்களுள் பதினெண் சித்தர்கள் என வெவ்வேறு பட்டியல்கள் கிடைக்கின்றன. தமிழ் மரபின்படி மங்கலத்தின் பொருட்டுப் பதினெட்டு என்று அழைக்கப்பட்டிருக்கலாம். இதைத்தவிர இதற்கெனச் சிறப்பான காரணம் ஏதும் இருந்ததாகத் தெரியவில்லை. ஜென் துறவிகளின் எண்ணிக்கை பற்றிப் பார்க்கும் போது போதி தர்மாவிற்குப் பிறகே ஜென் துறவியரின் காலம் தொடங்குகிறது.

சித்தர் மார்க்கத்திலும் ஜென் மார்க்கத்திலும் குருவின் மூலமாகத்தான் சீடன் ஞானம் பெற்ற நிலையைக் காணமுடிகிறது. குரு-சீடர் உறவுநிலை சுமுகமாகவும் அறிவுத் தேடலுடனும் இருந்திருக்கின்றன. சித்தர்களும் ஜென் துறவிகளும் சமூகத்தில் வாழ்ந்திருந்தாலும் ‘தாமரை இலை மேல் தண்ணீர் போல’ சமூகத்துடன் ஒட்டியும் ஒட்டாமலும் வாழ்ந்திருந்தனர். ‘பெண் நிந்தனையாளர்கள்’ எனச் சித்தர்களையும் ஜென் துறவியரையும் கூறிவிட முடியாது. ஏனெனில் ‘அவ்வையார்’ எனும் பெண் சித்தர் இருந்திருக்கின்றார். அது போலவே ஜென் மடத்திலும் பெண்கள் சீடர்களாக ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கின்றனர்.

சித்தர்கள் இன்றளவும் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். எனினும் கி.பி.5ஆம் நூற்றாண்டிற்கு முதலாகவே பெரும்பான்மையான சித்தர்கள்

வெவ்வேறு இடங்களில் வாழ்ந்திருந்தனர் என்பது ஆய்வாளர்களின் கருத்து. இது போல ஜென் மார்க்கம் கி.பி. 520 முதல் கி.பி.906 வரை சீனாவிலும் கி.பி.1191 முதல் கி.பி. 1227 க்குள் ஜப்பானிலும் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. இன்று ஜென் பயிற்றுப் பள்ளிகள் உலகெங்கும் இயங்கிக் கொண்டிருக்கின்றன.

பொய்மைச் சித்தர்களை அடையாளம் கண்டுகொள்ளும் வகையில் சில பாடல்கள் புனையப்பட்டுள்ளன. அதிலிருந்து பொய்யான சித்தர்களும் வாழ்ந்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. ஞானம்பெறா ஜென் துறவிகளும் குருக்களாக இருந்திருக்கின்றனர் என்றும் தெரிகின்றது. சித்தர்களின் அகநிலை 'சமூக உணர்வுடன்' இருந்திருக்கின்றது. சித்தாடுவதிலும் அவர்கள் வல்லவர்களாக இருந்திருந்தனர். எனினும் அதனை ஒரு முதன்மைப் பேறாக அவர்கள் எண்ணியதே இல்லை. ஆனால் ஜென்னில் சித்தாடுதல் பற்றி எவ்விதக் குறிப்பும் இல்லை. நிகழ்காலத்தில் வாழ்வதே ஜென் மார்க்கத்தின் தனித்துவம் ஆகும்.

சமுதாயம் என்பது தனிமனிதர்களின் கூட்டுறவாலான அமைப்பு. குடும்பம், கல்வி, சமயம், அரசு போன்ற நிறுவனங்கள் இவற்றுள் அடங்குகின்றன. சாதி என்பது சமுதாயத்தில் பிரித்திட முடியாத ஓர் அங்கமாகிப் போனதைச் சித்தர்கள் தம் பாடல்களில் சாடுகின்றனர். ஜென் இலக்கியங்களில் சாதி பற்றிய எவ்விதக் குறிப்புகளும் காணப்படவில்லை. சாதி மட்டுமின்றி அதற்குக் காரணமான நால்வகை வருணப் பாகுபாட்டையும் சித்தர் இலக்கியங்கள் எதிர்க்கின்றன.

ஜென் என்பது வெறும் தத்துவமல்ல. அது ஒரு வாழ்க்கை வழிகாட்டி. ஜென் குருக்களும் யோகிகளும் துறவிகளும் மக்களுக்குப் புரியும் வகையில்

சின்னஞ்சிறு கதைகள் வழியாகவும் கவிதைகள் வழியாகவும் வாழ்க்கைத் தத்துவத்தை எழுச்சிமிக்க வகையில் படைத்திருக்கின்றனர். ஜென் கதைகள் சமூகக் குறைகள் நீங்கவும் மானுடம் தழைக்கவும் அறிவுரைகளை நல்குகின்றன. இது போலவே சீர்திருத்த நோக்குடைய சித்தர்களின் பாடல்களும் படைப்பாற்றல் மிக்க இறைவன் ஒருவனே என்றும், பற்றற்ற வாழ்வே இறைவனை அடையும் வழிகளின் முதல்படி என்றும் அறிவுறுத்துகின்றன.

பெண்ணாசை விலக்கல் முக்திக்கு வழி என்ற சித்தர்களின் கருத்தை அடியொற்றி ஜென் தத்துவமும் துறவு வாழ்வு மேற்கொள்ளத் தடையாகப் பெண்ணாசை அமைகிறது என்று எச்சரிக்கின்றது. சித்தர் பாடல்களில் பெண்ணாசை விலக்கல், பெண் ஆதரவு, பெண்மை குறித்துப் பேதம் பாராட்டாமை போன்றன கருத்துக்கள் வேறுபாடற்ற நிலையில் பேசப்படுகின்றன. சமுதாயத்துள் ஊடுருவிப் பரவிக் கிடக்கும் தீண்டாமையினையும் நம் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் மூட பழக்கவழக்கங்களையும் இவ்விலக்கியங்கள் சாடுகின்றன.

சமுதாயத்தின் அங்கமாகத் திகழும் தனிமனிதனின் செயற்பாடுகள் குறித்தும், தனிமனித அறம் குறித்தும் சித்தர் பாடல்களும் ஜென் கதைகளும் விளக்கியிருக்கின்றன. அவற்றுள் ‘மன்னிக்கும் மனப்பான்மையே குற்றம் செய்தோனை மனமாற்றும் வழி’ எனும் கருத்து முத்தாய்ப்பானது. தனிமனித வாழ்க்கை நெறியே சமுதாய ஒழுங்கிற்கு அடிப்படை என்பதை நன்குணர்ந்த சித்தர்கள் பல நல்ல அறிவுரைகளை மனித குலத்திற்கு வழங்கியுள்ளனர்.

எல்லாச் சமயங்களின் கடவுள்களும் ஒரே பரம்பொருளின் கூறுகளாகத் திகழ்வதால் அவர்களுள் உயர்வு தாழ்வு கற்பிப்பது அறிவுடைமையாகாது. வரையறைக்கு உட்பட்ட சமயங்கள் கற்பித்துக் கொண்ட கடவுள்களிடமிருந்து பரம்பொருளைச் சித்தர்கள் வேறுபடுத்திக் காட்டுகின்றனர். மேலும் உருவும் பெயரும் தாங்கிய கடவுள் பலராதல் கூடும். இக்கடவுள் அனைவருக்கும் மூலமாகவும் பொதுவாயும் விளங்கும் பரம்பொருள் ஒன்றேயாகும் என்றும் உறுதிப்படுத்துகின்றனர்.

நல்லுணர்வோடும் நல்ல நோக்கத்தோடும் உருவாக்கப்பெற்ற உருவ வழிபாட்டு முறை சில தன்னலப் பேய்களின் தலையீட்டால் பொருளீட்டும் தொழிலாக மாறிய நிலை கண்டு கொதிப்புற்று உருவ வழிபாட்டைச் சித்தர்கள் சாடினர். அன்பின் ஆதாரமாகக் கொண்டு அமைய வேண்டிய பக்தியானது காலப்போக்கில் சமயப் பூசலுக்கும் வன்முறைக்கும் இடமளித்த நிலை கண்டு சமய எல்லைகளை உடைத்து புதியதோர் புரட்சிக்கு வித்திட்டோர் சித்தர்கள். ஒருமுகப்பட்ட ஒன்றாத மனத்தோடு செய்யப்படும் எந்திரப் போக்கிலான வழிபாடுகளை சித்தர்கள் வெறுத்தனர். மதம் என்ற பெயராலும் மனுநீதி என்ற பெயராலும் மண்டிக்கிடந்த தமிழ் இலக்கியத்தின் முதல் எழுச்சிக் குரல் என்றே சொல்லலாம். பகுத்தறிவின் பாய்ச்சலால் மானுடத்தை மேம்படுத்திய சித்தர்களும் ஜென் இலக்கியப் படைப்பாளர்களும் சமூகப் போராளிகளாகவே சித்தரிக்கப்படுகின்றனர்.

சமுதாயத்தின் பெயரால் வயிறு வளர்க்கும் சில போலிச் சமயவாதிகளை நம்புவது அறிவீனம் என்றும், உள்ளன்புடன் இறைவனை வழிபட வேண்டும்

என்றும் சித்தர்கள் அறிவுறுத்துகின்றனர். ஜென்னோ, இறைவன் இருக்கின்றான். ஆனால் அவனை கோவில் சிலைகளிலோ அல்லது மலை உச்சிகளிலோ தேடாதே என்றும் அவன் உன்னுள் உடலாக, உயிராக, உள்ளமாக இருக்கின்றான் என்றும் கூறுகிறது. மேலும் இக்கணமே வாழ், உன்னில் இறைவனைத் தேடு, வாழ்க்கையை வாழ் என்பதையே தாரகமந்திரமாகப் போதிக்கிறது ஜென்.

சித்தர் தத்துவங்களில் தலைசிறந்தவையாகக் கருதப்படுவனவற்றுள் ஒன்று நிலையாமைத் தத்துவம் ஆகும். மனிதனின் வாழ்வியலை வைத்து நிலையாமைத் தத்துவத்தைத் தோற்றுவித்தார்கள் சித்தர்கள். இந்நிலையில்லா வாழ்வில் பற்றுக் கொண்டு இறைவனை மறந்து தீவினை புரியும் மக்களுக்குச் சித்தர்களின் பாடல்கள் எச்சரிக்கை செய்கின்றன. சித்தர் தத்துவத்தில் கடவுள் கோட்பாடு, உடல் பற்றிய சிந்தனை விளக்கப்பட்டுள்ளன. மேலும் சித்தர்கள் இறைவன் குடிகொள்ளும் ஆலயம் உடல், உள்ளம் என்று கூறுகின்றனர். சித்தர் தத்துவத்தை அடியொற்றி ஜென் தத்துவம் கடவுளின் இருப்புநிலை குறித்துப் பேசப்படுகின்றது. ஜென் கதைகள் வாயிலாகத் தத்துவம் விளக்கப்பட்டிருக்கின்றது.

சித்தர் இலக்கியமும் ஜென் இலக்கியமும் கடவுட் கொள்கையை ஏற்பதும் இல்லை, மறுப்பதும் இல்லை. உள்ளுணர்வினால் அறியப்படுவதே என்று உணர்த்தப்படுகிறது. பேரின்பம் அடைய சிற்றின்பத்தை நீக்க வேண்டும் எனும் கருத்தை வலியுறுத்த உயிரின் மேன்மையும், உடலின் இழிவும் அதிகம் பாடப்பட்டுள்ளன. சித்தர், ஜென் இலக்கியங்கள் வாழ்க்கை நிலையாமைத்

தத்துவம் குறித்து பேசுகின்றன. உலகம் நிலையற்றது, அதில் வாழும் வாழ்க்கை நிலையற்றது. இறை அச்சமே வாழ்வை அர்த்தமாக்கும் என்ற கருத்தினை மையப்படுத்துகின்றன.

உலகியல் பயன், ஆன்மப் பயன் ஆகிய இரண்டையும் மனிதன் பெற வேண்டும் என்பதே சித்தர், ஜென் இலக்கியங்கள் காட்டும் நன்னெறி. இப்பயன் கைகூட ஆசை விலக்கமும் புலனடக்கமும் வேண்டும். அப்போதுதான் அகக்காட்சியில் பரம்பொருளைக் காணமுடியும் என்பது சித்தர்களின் துணிவான முடிவாகும்.

ஆன்மப் பயன் பெறுவதற்குப் பற்றற்ற வாழ்வை மேற்கொள்ள வேண்டும் என்கிறது சித்தர், ஜென் தத்துவம். வாழ்க்கை நிலையில்லாதது, இருப்பினும் வாழ்வதற்குரிய பொருள்களைச் சேர்த்து வைத்தல் தேவையற்றது என்பதையும் அறிவுறுத்துகின்றது. பிறப்பு என்ற நிலையில் இருந்து இளமை தாண்டி வருவது மூப்பு. மூப்பு நிலையில் இறப்பு உறுதி என்பது அறியக்கூடியது. இறப்பு என்பது ஓர் இயற்கை நிகழ்வு. அது எப்போது வேண்டுமானாலும் நிகழலாம் என்ற தத்துவத்தினை யாக்கை நிலையாமை என்ற கருத்தில் சித்தர், ஜென் இலக்கியங்கள் விளக்குகின்றன. இறைவனின் அருட்பெருஞ் ஜோதியை உணர யோக உறுப்புக்களில் ஒன்றான தியானத்தின் வகைகளும் பயன்பாடுகளும் விளக்கப்பட்டிருக்கின்றன. நிலையாமை என்பதே நிலைத்த உண்மை என்ற கருத்தினை சித்தர் ஜென் இலக்கியங்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன. வெட்டவெளி அதாவது பூஜ்ஜியம் என்ற சொல்லின்கீழ் அனைத்தும் உள்ளடங்கும் என்ற தத்துவத்தினை அறிவுறுத்துகின்றது. சித்தர், ஜென் தத்துவங்களில்

பொதுமைக் கூறுகளாகக் காணப்படும் "சும்மா இருத்தல்", "பூஜ்ஜியத்தில் பூரணம்" ஆகியவற்றின் மூலமாக இறைவனின் இருப்பு பேசப்படுகின்றது. இவை மட்டுமின்றி தாமரை மலர், காளைமாடு போன்றவை இவ்விரு இலக்கியங்களிலும் பொதுவான குறியீடாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. வெவ்வேறு காரணங்களுக்காக இவை பயன்படுத்தப்பட்டிருந்தாலும் இவற்றின் உள்நோக்கம் ஒன்றே என்பதை அறிய முடிகிறது.

இவ்வாய்வின் முடிவுகளான செய்திகள் தமிழ் இலக்கியங்களில் பெரும் பரப்பில் காணலாகும் பல்வேறான சமய இலக்கியக் கருத்துக்களோடு எதிர் காலத்தில் ஒப்பு நோக்கி ஆராய்தற்குரியன.

# துணைநூற் பட்டியல்

## தமிழ் நூல்கள்


அருணாச்சலக் கவுண்டர், கு. **சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் - ஒரு கண்ணோட்டம்,**
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை -105,
2004.

அருணாச்சலம், ப., **நம்நாட்டுச் சித்தர்கள்,**
பாரி புத்தகப் பண்ணை
சென்னை -95.
1985

இராமநாதபிள்ளை, ப., சிதம்பரனார், அ.(ப.ஆ) **திருமந்திரம் மூவாயிரம் ,**
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
ஆழ்வார்பேட்டை, சென்னை - 18,
மறு பதிப்பு, சூன். 2009.

ஈசுவரப்பிள்ளை, தா. **பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை,**
இராசேசுவரி பதிப்பகம்,
தஞ்சாவூர்.
2002

எஸ்.ஏ.பி. **100 ஜென் கதைகள்,**
கண்ணதாசன் பதிப்பகம்,
தியாகராய நகர், சென்னை - 17,
ஆறாம் பதிப்பு, ஏப்ரல் 2006.

ஓஷோ, **ஜென்னுடன் நடந்து ஜென்னுடன் அமர்ந்து,**
சிங்கராயர் (மொ.பெ.ஆ.),
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
8, மாசிலாமணி தெரு,
தியாகராய நகர்,
சென்னை - 17,
நான்காம் பதிப்பு, டிசம்பர் 2012.

________________, **தந்த்ரா அனுபவம்,**
ஆனந்த் பரமேஷ் சுவாமி (மொ.பெ.ஆ)
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
8, மாசிலாமணி தெரு,
தியாகராய நகர்,
சென்னை - 17,
நான்காம் பதிப்பு, ஆகஸ்டு 2009.

________________, **யாகூசான்: ஞானத்திற்கு நேர்வழி,**
ஆனந்த் பரமேஷ் சுவாமி (மொ.பெ.ஆ)
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
8, மாசிலாமணி தெரு,
தியாகராய நகர்,
சென்னை - 17
இரண்டாம் பதிப்பு, ஆகஸ்ட், 2004.

________________, **ஒரு கோப்பை தேநீர்,**
புவியரசு. கவிஞர் (மொ.பெ.ஆ),
கண்ணதாசன் பதிப்பகம்,
12, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 17,
நான்காம் பதிப்பு, டிசம்பர், 2008.

ஓஷோ **புல் தானாகவே வளர்கிறது ___ஜென் தத்துவ விளக்கங்கள்,**
சுவாமி ஆனந்த் பரமேஷ் (மொ.பெ.ஆ)
கண்ணதாசன் பதிப்பகம்,
27, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை -17,
ஐந்தாம் பதிப்பு, ஏப்ரல் 1998.

_________________, **கடவுள் இறந்துவிட்டார் ஸென்னே வாழ்கிறது,**
ரமணி(மொ.பெ.ஆ.),
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
8, மாசிலாமணி தெரு,
தியாகராய நகர்,
சென்னை - 17,
முதற் பதிப்பு, டிசம்பர், 2000.

_________________, **போதி தர்மர்,**
ஷியாமானந் சுவாமி (மொ.பெ.ஆ)
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
8, மாசிலாமணி தெரு,
தியாகராய நகர், சென்னை - 17,
2012.

_________________, **பிரபஞ்ச ரகசியம் (ஜென் ஹைகூ),**
செந்தூரம் ஜெகதீஸ்(மொ.பெ.ஆ),
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
8, மாசிலாமணி தெரு,
தியாகராய நகர், சென்னை - 17,
இரண்டாம் பதிப்பு, 2001.

ஓஷோ **மீண்டும் புல் தானாகவே வளருகிறது,**
புவியரசு கவிஞர் (மொ.பெ.ஆ),
கண்ணதாசன் பதிப்பகம்,
23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 17
முதற் பதிப்பு, மே 1998.

________________, **குரு - ஒரு கண்ணாடி,**
ஜார்ஜினா பீட்டர் (மொ.பெ.ஆ)
கண்ணதாசன் பதிப்பகம்,
23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 17,
ஆறாம் பதிப்பு, நவம்பர், 2008.

________________, **ஞானத்திற்கு ஏழுபடிகள்,**
ஆனந்த் அருணாச்சலம் சுவாமி (மொ.பெ.ஆ)
கண்ணதாசன் பதிப்பகம்,
23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 17,
2011.

________________, **ஓஷோவின் குட்டிக்கதைகள்,**
கண்ணப்பன். இராம. (மொ.பெ.ஆ.)
கண்ணதாசன் பதிப்பகம்,
23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 17
முதற் பதிப்பு, ஜூலை, 1993.

ஓஷோ — **ஸென் : பரவெளியின் பரவசங்களும் பாடல்களும்,**
சுவாமி கிருஷ்ண பிரபு (தொ.ஆ)
சுவாமி ஆனந்த் பர்மேஷ் (மொ.பெ.ஆ)
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
8, மாசிலாமணி தெரு, தியாகராய நகர்,
சென்னை - 17
1993.

கானமஞ்சரி சம்பத் குமார் — **காலத்தை வென்ற சித்தர்களின் காயகல்ப கலை (சாதாக் கலை),**
கீதாஞ்சலி பிரசுரம்,
12/6, மஸ்தான் அலிகார்டன்,
எஸ்.வி.லிங்கம் சாலை, வடபழனி,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, நவம்பர், 2008.

கைலாசபதி, க. — **ஒப்பியல் இலக்கியம்,**
குமரன் பதிப்பகம்,
3, மெய்கை வினாயகர் தெரு,
வடபழனி, சென்னை - 26.
இரண்டாம் பதிப்பு, 2009.

________________, — **ஆக்க இலக்கியமும் சமூகவியலும்,**
யாழ்ப்பாண வளாகத் தமிழ்த்துறை
வெளியீடு,
யாழ்ப்பாணம்.
முதற்பதிப்பு -1977.

| | |
|---|---|
| கோவேந்தன், த. | **சித்தர் பாடல்கள்,**<br>பூம்புகார் பதிப்பகம்,<br>சென்னை - 105,<br>இரண்டாம் பதிப்பு, 2009. |
| ஞானசம்பந்தன், அ.ச.,(ப.ஆ) | **திருமந்திரம்**<br>கங்கை புத்தக நிலையம்<br>தி.நகர், சென்னை-17<br>2002 |
| சதா ஆனந்த் விக்னேஷ் | **ஜென் வாழ்வியல் கலை: மௌனத்தின் ஓசை,**<br>நர்மதா பதிப்பகம்,<br>தியாகராய நகர்,<br>சென்னை - 17<br>முதற் பதிப்பு, டிசம்பர் 2003. |
| சம்பந்தம், திரு. | **திருமூலரின் திருமந்திர விருந்து**<br>வானதி பதிப்பகம்,<br>13, தீனதயாளு தெரு,<br>தியாகராய நகர்,<br>சென்னை - 17<br>இரண்டாம் பதிப்பு, ஜூன் 1995. |
| சித்பவானந்தர். சுவாமி(உ.ஆ) | **பகவத்கீதை,**<br>தபோவனத் பிரசுராலயம்<br>திருப்புராய்த் துறை,<br>திருச்சி.<br>1969. |

சிதம்பரனார், சாமி., **சித்தர்கள் கண்ட விஞ்ஞானமும் தத்துவமும்,** இலக்கிய நிலையம், சென்னை-94. 1974.

தேவ்நாத், சி.எஸ். **ஜென் தியான முறைகள்,** நர்மதா பதிப்பகம், தியாகராய நகர், சென்னை - 17 பதிப்பு, ஜுன் 2007.

________________, **ஜென்:தத்துவ விளக்கக் கதைகள்,** நர்மதா பதிப்பகம், தியாகராய நகர், சென்னை - 17, மூன்றாம் பதிப்பு, 2005.

நாராயணன், க. **சித்தர் தத்துவம்,** மாரி பதிப்பகம், புதுச்சேரி - 88. மூன்றாம் பதிப்பு, டிசம்பர் 2003.

பத்மா, வி. **ஜென் வழி,** மதி நிலையம், கோபாலபுரம், சென்ன - 86, முதற் பதிப்பு, டிசம்பர் 2011.

பரிமளா ராஜகுமாரன் **சித்தர்களின் வரலாறு**
ஸ்ரீவானதி நிலையம்,
தியாகராய நகர்,
சென்னை - 17
முதற் பதிப்பு, 2006.

புவியரசு. கவிஞர் ( மொ.பெ.ஆ) **ஜென் கதைகள்**
கண்ணதாசன் பதிப்பகம்,
தியாகராய நகர்,
சென்னை - 17,
மூன்றாம் பதிப்பு, மே 2006.

______________________, **மீண்டும் ஜென் கதைகள்,**
கண்ணதாசன் பதிப்பகம்,
தியாகராய நகர்,
சென்னை - 17,
இரண்டாம் பதிப்பு, ஆகஸ்ட், 1997.

புலியூர்கேசிகன் (உ.ஆ) **புறநானூறு**
பாரி நிலையம்,
சென்னை-108,
எட்டாம் பதிப்பு.1995

மலர்விழி மங்கையர்க்கரசி, இராம., **ஒப்பியல் சமய நோக்கில் திருவருட்பா,**
அருவி பதிப்பகம்,
மதுரை,
1999.

மாணிக்கவாசகம், இரா., **திருமந்திர ஆராய்ச்சி**
அன்னை அபிராமி அருள்
சென்னை - 30.
2001

______________________, **நம்நாட்டுச் சித்தர்கள்**
அன்னை அபிராமி அருள்
சென்னை - 30.
1982

மாணிக்கவாசகன், ஞா. **திருமூலர் மந்திரம் மூலமும் விளக்க உரையும்,**
உமா பதிப்பகம்,
18, பவளக்காரத் தெரு,
மண்ணடி, சென்னை -1,
ஐந்தாம் பதிப்பு, நவம்பர், 2009.

முரகன், எஸ்.கே. **எளிய தமிழில் சித்தர் தத்துவம்**
சிக்ஸ்த் சென்ஸ் பப்ளிகேஷன்ஸ்,
தி.நகர், சென்னை - 600 017,
இரண்டாம் பதிப்பு, டிசம்பர் 2012.

முருகேசன், சி.எஸ். **சித்தர்களின் மந்திரக்கலை,**
சங்கர் பதிப்பகம்,
21, டீச்சர்ஸ் கில்டு காலனி,
இராஜாஜி நகர் விரிவு,
வில்லிவாக்கம்,
சென்னை - 49.
2006

மோகனராசு,கு., (உ.ஆ) **திருக்குறள்,**
உலகத் திருக்குறள் மையம்
சென்னை-5,
1998

யோகி கைலாஷ்நாத் **சித்தர் களஞ்சியம்**
கற்பகம் புத்தகலாயம்
4/2, சுந்தரம் தெரு, தியாகராய நகர்,
சென்னை - 17
2005

வரத கோவிந்தராசன், புலவர் **சித்தர் பாடல்கள்,**
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
8, மாசிலாமணி தெரு,
தியாகராய நகர், சென்னை - 17
இரண்டாம் பதிப்பு, டிசம்பர், 2008

____________, **சித்தர் சிவவாக்கியர்,**
மாரி பதிப்பகம்,
புதுச்சேரி - 8.
2000.

வாசுதேவ். குருஜி **ஜென்:தத்துவ கதைகள்,**
சிக்ஸ்த் சென்ஸ் பப்ளிகேஷன்ஸ்,
தியாகராய நகர், சென்னை - 17,
மறு பதிப்பு, டிசம்பர் 2007.

வாசுதேவ். குருஜி **ஜென்னும் ஜென் தியானமும்,**
கண்ணதாசன் பதிப்பகம்,
தியாகராய நகர்,
சென்னை - 17
மூன்றாம் பதிப்பு, ஜனவரி 2006.

________________, **லாவோ த்ஸீவின் சீன ஞானக் கதைகள்,**
சிக்ஸ்த் சென்ஸ் பப்ளிகேஷன்ஸ்,
தியாகராய நகர்,
சென்னை - 17,
முதற் பதிப்பு, 2007.

______________, **ஜென் வழியில் தன்னைத்தானே அறிதல்,**
ஸ்ரீஇந்து பப்ளிகேஷன்ஸ்,
தியாகராய நகர்,
சென்னை - 17,
முதற் பதிப்பு, ஜூன் 2007.

__________________, **உள்ளொளி பெருக்கும் சித்தர்கள்,**
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,
தியாகராய நகர்,
சென்னை - 17,
முதற் பதிப்பு, டிசம்பர், 2007.

_________________, **சித்தர்களின் வாழ்க்கைச் சிந்தனைகள்,**
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,
தியாகராய நகர்,
சென்னை - 17,
முதற் பதிப்பு, டிசம்பர் 2007.

ராமஸ்வாமி, ப. (மொ.பெ.ஆ.) **புத்தரின் போதனைகள்,**
சந்தியா பதிப்பகம்,
52, அஞ்சுகம் நகர்,
அசோக் நகர், சென்னை - 83
முதற் பதிப்பு, 2002.

ஆங்கில நூல்கள்

Ama Samy **Zen Meditation for Life and Death Christians and Therapists,**
IJA Publications,
Bangalore,
First edition, 2006.

________, **Teh Zen Way, Traditions, Transmission and Challenges,**
Vaigai Publishing House,
Dindigul,
Frist Edition, November 2007.

_____________, **Zen: Awakening to your Original Face,**
Cre-A, Flat No.2, New No.19,
South Avenue,
Thiruvanmiyur,
Chenni – 14.
First Edition, March 2005.

______________, **Bodhi Sangha – Koans**
Bodhi Zendo,
Kodaikanal,
April 2007.

| | |
|---|---|
| John White (Edt.), | **Sri Aurobindo, the Tandra and Kundalni Evolution and Enlightenment**<br>Paragaon Home, 2700, University Ave<br>St. Paul, Mimnesota, U.S.A.,<br>1990. |
| Karen | **Chasing the Tale of Self,**<br>Vaigai Publishing House,<br>St. Mary's Hr. Sec. School, (opp.),<br>Dindigul ,<br>First Edition, August, 2006. |
| Osho | **So Lost and So at Home,**<br>Full Circle Publishing ,<br>J-40, Jorbagh Lane,<br>New Delhi – 3.<br>First Reprint, June 2007. |
| Roshi Philip Kapleau | **The Three Pillars of Zen,**<br>(Practice and Enlightenment),<br>Anchor Books,<br>Anchor Press/ Double Day Gergencity,<br>New York,1980 |
| Sri Devi Rao (compiled and edited) | **Zen Heart, Zen Mind, The Teachign of Zen Master Ama samy,**<br>New No.2, 24th East Street,<br>Thiruvanmiyur,<br>Chennai – 41,<br>Reprint, July 2004. |

Wong Kiew Kit **The Complete Book of Zen Element,** Shateesbury Borset Boston, Massa Chustts, Melbourne, First Edition, 1998.

# பின்னிணைப்பு-1

## சித்தர்கள் பெற்ற அட்டமாசித்திகள்

**அணிமா:**

பெரிய ஒரு பொருளைத் தோற்றத்தில் சிறியதாக ஆக்குவது பிருங்கி முனிவர் முத்தேவர்களை மட்டும் வலம் வருவதற்காக சிறு வண்டாக உருமாறினார் என்னும் புராணச் செய்தி அணிமா என்ற சித்தைக் குறிக்கும்.

**மகிமா:**

சிறிய பொருளை பெரிய பொருளாக ஆக்குவது வாமன அவதாரத்தில் திருமால் இரண்டடியால் மூன்று உலகங்களை அளந்ததும் கிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு உயர்ந்த வடிவம் காட்டி உலகமே தன்னுள் அடக்கம் என்று காட்டியதும் மகிமா என்னும் சித்தாகும்.

**லகிமா:**

கனமான பொருளை லேசான பொருளாக ஆக்குவது திருநாவுக்கரசரை சமயம் பகை காரணமாக கல்லில் கட்டி கடலிலிட்ட போது கல் மிதவையாகி உடலில் மிதந்தது. லகிமா என்னும் சித்தமாகும்.

**கரிமா:**

லேசான பொருளை மிகவும் கனமான பொருளாக ஆக்குவது. அமர்நீதி நாயனாரிடம் கோவணம் பெறுவதற்காக இறைவன் வந்த போது ஒரு கோவணத்தின் எடைக்கு தன்னிடம் உள்ள எல்லாப் பொருட்களை வைத்தும்

தராசுத் தட்டு சரியாகாமல் கடைசியாக தானும் தன் மனைவியும் ஏறி அமர்ந்து சரி செய்த சித்தி கரிமா.

**பிராத்தி:**

எவ்விடத்திலும் தடையின்றி சஞ்சாரம் செய்வது. திருவிளையாடல் புராணத்தில் 'எல்லாம் வல்ல சித்தரான படலம்' என்னும் பகுதியில் சிவன் ஒரே சமயத்தில் நான்கு திசைகளிலும் காட்சியளித்ததாக வரும் சித்தி பிராத்தி.

**பிரகாமியம்:**

வேண்டிய உடலை எடுத்து நினைத்தவரிடத்தில் அப்போதே தோன்றுதல். அவ்வையார் இளம்வயதிலேயே முதுமை வடிவத்தைப் பெற்றதும் காரைக்கால் அம்மையார் தன்னுடைய அழகான பெண் வடிவத்தை மாற்றிப் பேய் வடிவம் பெற்றதும் பிரகாமியம் என்னும் சித்தாகும்.

**ஈசத்துவம்:**

ஐந்து தொழில்களை நடத்துதல். திருஞானசம்பந்தர் பூம்பாவைக்கு உயிர் கொடுத்து எழுப்பியமை ஈசத்துவம் சித்தாகும்.

**வசித்துவம்:**

ஏழு வகைத் தோற்றமாகிய தேவ மானிட நரக மிருக பறப்பன ஊர்வன மரம் முதலியவற்றைத் தம்வசப்படுத்துதல். திரு நாவுக்கரசர் தன்னைக் கொல்வதற்காக வந்த யானையை நிறுத்தியதும் ராமர் ஆல மரத்திலிருந்து ஒலி செய்து கொண்டிருந்த பறவைகளின் ஓசையை நிறுத்தியதும் வசித்துவம் என்னும் சித்தாகும்.

# பின்னிணைப்பு-2

## கோயான்கள்




**Our Logo on the front page:**
**Buddha under the Cross / Bodhi-Tree in a mandorla**

Mandorla symbolizes the coincidence of opposites: temporal and eternal, finite and infinite, divine and human, earth and heaven: Form is Emptiness, Emptiness is Form.

Bodhizendo April 2007

Koans of Maezumi school

1. A monk once asked Joshu, "Has a dog the Buddha Nature?" Joshu answered, "Mu!" (The Gateless Gate, Case 1)
2. How do you stop the sound of a temple bell?
3. How do you stop four different sounds?
4. How do you stop the sailing boat?
5. How do you stop a rowing boat?
6. Show me an unmovable tree in the heavy wind!
7. Hide yourself in a pillar!
8. That girl over there, is she the elder or the younger sister?
9. Without using your hands, make this old man get up?
10. Stop the fighting across the river.
11. Save a hungry ghost.
12. When the world was created, what was god (the creator) like?
13. Create a mountain.
14. Create a piece of land.
15. Bring me the peel of orange that you ate yesterday.
16. How do you get out of a stone grave which is locked from the outside?
17. A ji Kwan To see A-ji (word A) clearly
    Wipes out the five grave sins.
    To gain results by true words, this very body becomes Buddha.
    (Note) A is the first letter of the alphabet and it also means the beginning of growth, the source of the universe. Five grave sins: killing father; mother; arhat; Shedding the blood of Buddha; destroying the Sangha.

18. Sei-Kenkó of Cho composed a gatha as he was enlightened upon hearing a thunder strike:
Sitting in the room in absolute silence:
Mind-source unmoved, filled like still water.
The striking of thunder has opened the gate of the Head's crown.
The begingless self-nature has been awakened.
Which line is the most important?
Present the implication (content) of the line.
19. Take out a five storied pagoda from a tea pot.
20. Draw Mt. Fuji from your bosom pocket.
21. Bring me the powder made out of (Emptiness) Sunyata.
22. Bring me the vegetable salad made of (Emptiness) Sunyata.
23. Empty handed, yet holding a hoe.
24. Walking, yet riding a buffalo.
25. A man passing on a bridge,
26. The bridge flows, the water does not.
27. Through the flowing murmuring waters, he walks leisurely.
28. Absorbed in the flight of birds, be sees mindlessly.
29. A monk asked Unmon, "How do Buddhas appear?"
Unmon answered:
"The eastern mountain walks along the stream."
(Collection of Vines and Entanglements)
30. How do you answer if you are asked, "What is the meaning of Bodhidharma's coming from the west?" by someone in a dream. If you cannot answer it, the teaching of the Buddha is worthless.
31. Kyogen's Man up a tree:
Kyogen said, "It's like a man (a monk) up a tree, hanging from a branch with his mouth; his hands cannot grasp a bough, his feet won't reach one.



Under the tree there is a man who asks him the Meaning of Dharma's coming from the West. If he Does not answer, he will lose his life. What should he do? (The Gateless gate, Case 5).
32. What answer to the above would a man under the tree give?
33. Why has the Western Barbarian no beard?
(The Gateless Gate, Case 4)
34. Capping phrase of the above (omit).
35. A new born baby: is it provided with all the six consciousnesses?
(Blue Cliff Record, Case 80)
36. How miserable, how miserable; transmigrating in the three worlds.
(from Kanzan's poem)
37. The breeze is whistling through the old pine. Hearing it closer, the sound is better. (from Kanzan's poem)
38. How do you hear it closer?
39. Distinguish the body and the function of Wind.
40. What colour does wind have?
41. Where does the rain come from?
42. Isan's Buffalo
Isan once told the student, "I, old monk will be reborn as a buffalo in the front house of the temple a hundred years later and five words will be on the buffalo, 'Monk Isan such and such'. If you call this monk Isan, it is a buffalo. If you call it a buffalo, It is monk Isan such and such. Tell me what do you call it?" Kyozan made a bow and went away.
(Collection of Vines and Entanglements)
43. Master Ungo once was at Ryumon (Dragon's gate) temple. One day a monk was bitten in his leg by a snake. Butsugen, one of the monks, asked, "This is

the Ryumon, why was he bitten by a snake?" The master, in reply, suddenly manifested the figure of the great man. Later, Master Engo heard about this. "There is a priest at the Ryumon. Owing to him, the Buddha Dharma of Eastern Mountain (where the Ryumon is located) has not been reduced yet". (Collection of Vines and Entanglements)

Present the master's manifestation of "The great man".

44. Master Goso En told the monk: "There is a man who can write the five words, 'Why Bodhidharma came to China (from West)?' on the paper of the universe using Mount Sumeru as a brush and the ocean as an inkwell. If you can do it, I will open my prayer mat and bow."
(Collection of Vines and Entanglements)
45. Joshu's Cypress Tree
A monk asked Joshu, "What is the meaning of Bodhidharma coming from the West?" Joshu replied, "The Cypress tree in the garden." (Gateless Gate, Case 37)
46. How do you answer, if you are asked the same question?
47. When did that tree grow?
48. Capping phrase of the above.
49. The gatha (20 MU) of Mumon on Muji
Mu Mu Mu Mu Mu,
Mu Mu Mu Mu Mu,
Mu Mu Mu Mu Mu,
Mu Mu Mu Mu Mu.
50. Capping phrase of the above (omit).
51. Recite a poem in connection with Mumon's gatha using the things in the room.
52. Present Mumon's Mu and Joshu's Mu using your



hand.

53. Daizui's kalpa fire
A monk asked Daizui: "When the great thousand universes altogether and utterly perish in the kalpa fire, is it doubtful what will happen? Does the self perish or does it not perish?" Daizui replied: "It perishes." The monk said: "If so, following the universe will it perish?" Daizui said: "It will follow on and perish." (Blue Cliff Records Case 29)
54. Another (Rusu, SR 30) said, "Even when the world is destroyed, it is not destroyed."
55. The three worlds are nothing but mind. In what place shall we seek for the mind? (Blue Cliff Records, Ch 37)
56. Capping phrase of the above (omit).
57. The Chinese character for 'great', *, can also he written with a dot. In Shintoism they say, "Placing the dot in the confer is the secret of Shinto."
Where do you place the dot In Buddhism?
58. The national master Nanyo Echu was asked by Emperor Shuku, "Master, what kind of Dharma (teaching) have you obtained?" The master replied, "Your highness, do you see a cloud in the sky?" The Emperor said, "Yes, I do." The master asked, "Is it draped or hung?"
(Collection of Vines and Entanglements)
59. The Indian monk, Daini Sanzo, coming to the Capital, said that he could read people's minds. The emperor Daiso called upon the national master and allowed him to test Sanzo. Seeing the master immediately, Sanzo made a bow and stood on the right side of him. The mastar asked Sanzo, "Can you read people's minds?"
Sanzo said: "By all means." The master said: "Say,

# பின்னிணைப்பு-3
# ஜென் துறவிகள்



அஸ்வகோஷா



செங்காய்

லாவோ ட்சூ



மூசோ சொசெகீ



# பின்னிணைப்பு-4

## குறியீடுகள்



தியானம்



பூஜ்ஜியத்தில் பூரணம்



மணி



தாமரைப்பூ

# பின்னிணைப்பு-5

# ஜென் தியான முறைகள்



அமர்வு முறை




அமர்வு முறை



அரைத் தாமரை முறை



அரைத் தாமரை முறை

# பின்னிணைப்பு-6

## பள்ளிகள்



தேராவாதப் பள்ளி

மஹாயானாப் பள்ளி



# பின்னிணைப்பு-7

## சித்தர்கள்



அகத்தியர்



சுந்தரானந்தர்

குதம்பைச்சித்தர்



பதஞ்சலி மஹரிஷி





ராமதேவர்



பாம்பாட்டிச்சித்தர்

கருவூரார்



இடைக்காடர்



# பின்னிணைப்பு-8

## ஆதாரச் சக்கரங்கள்

